# என்னவென்று நான் சொல்ல?...

பாகம் - 3

முத்துலட்சுமி ராகவன்



**திருமகள் நிலையம்**
சுகான்ஸ் அபார்ட்மெண்ட்ஸ்,
பழைய எண்: 28, புதுஎண்: 13, சிவப்பிரகாசம் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி: 24342899, 24327696
e-mail: enquiry@thirumagalnilayam.com

முதற் பதிப்பு : செப்டம்பர், 2011

உரிமை : ஆசிரியருக்கு

❖ Title : ENNAVENRU NAAN SOLLA PART-III

❖ By : Muthulakshmi Raghavan

❖ First Edition : September, 2011

❖ Paper : Book Print 11.6

❖ Total No. of pages : 192

விலை : 90/-

திருமகள் நிலையம்
சுகான்ஸ் அபார்ட்மெண்ட்ஸ்,
எண்: 13, சிவப்பிரகாசம் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி: 24342899, 24327696
e-mail: enquiry@thirumagalnilayam.com

Typesetting : RVK DESIGNERS, Chennai - 2. Mobile: **9710329866**

*Printed at :* NOVENA OFFSET PRINTING CO., Chennai - 5 ✆ 28446166.

***என் பிரியத்துக்குரிய வாசக.. வாசகிகளே!***

இந்த மூன்றாம் பாகத்தை எழுதி முடித்தபோது.. உங்களைப் போலவே எனக்கும் மாலினியையும் பிரபாகரனையும் விட்டுப் பிரியும் உணர்வு மனதில் தோன்றுகிறது. நீண்ட நாள்களாக அவர்களுடனே பயணித்துவிட்டேன் அல்லவா? அதனால்தான் இந்த உணர்வு. அதனால் என்ன? மாலினியும் பிரபாகரனும் எங்கே போய்விடப் போகிறார்கள்? இந்தக் கதையில் தானே வாழ்கிறார்கள். நினைத்தால் எடுத்துப் படித்து.. அவர்களை நம் பக்கத்தில் வைத்துக் கொள்ளலாம்தானே.

என் சின்னஞ்சிறு பிராயத்தில் என்னைச் சுற்றிப் புத்தகக் குவியல்கள் இருந்தன. அவற்றைப் படித்து நான் வளர்ந்தேன். என் அறிவை வளர்த்தேன். இன்றும் நூலகங்களுக்கு நான் சென்று எந்தப் புத்தகத்தை உருவினாலும் பெரும்பாலும் அது நான் படித்த புத்தகமாகவே இருக்கும்.

எனது பத்து வயதில் என் அண்ணன் சந்திரசேகரனின் மரணம் எனக்கு கவிதையைக் கொடுத்தது. அதன் பின்னால் என் உணர்வுகளை கவிதைகளில் வடிக்கும் வழக்கம் வந்தது. என் திருமணத்திற்குப் பின்னர் என் கணவர் ராகவன்.. என்னைக் கதை எழுதச் சொன்னார்.

கவிதையில் இருந்து கதைக்கு நான் பயணித்தபோது.. என் முதல் கதையை அந்தாதி பாணியில் எழுதினேன். எந்த கதைக் கருவையும் யோசிக்காமல் கதையின் போக்கிலேயே என் பேனாவை பயணிக்க விட்டேன். ஒரு அத்தியாயத்தின் முடிவில் வரும் வாக்கியத்தை

அடுத்த அத்தியாயத்தின் ஆரம்ப வாக்கியமாக்கி.. அந்தாதியாய் நான் எழுதிய அந்தக் கதை அழகான கதையாக உரு மாறியது.

அந்தக் கதைதான் 'நிலா வெளியில்..' என்ற கதை.. என் 'முதல் கதை'.. 'தொடுவானம்' என்ற என் முதல் நாவலில் உள்ள இரண்டாவது கதை இது.

அந்தக் கதையைப் படித்த நான் ஆச்சரியத்துக்குள்ளானேன். எனக்குள் கவிஞரை தொடர்ந்த எழுத்தாளர் இருந்தது அப்போதுதான் எனக்கே தெரிந்தது. என்னை எனக்கு உணர்த்திய.. என் எழுத்தாற்றலை இந்த உலகுக்கு வெளிப் படுத்திய என் கணவருக்கே என் கதைகளின் வெற்றி போய்ச் சேர வேண்டும்.

என் எழுத்தாற்றலையும் படிப்பாற்றலையும் மதித்து தான் பெற்ற பிள்ளைகளில் என் திறமையை மெச்சிப் பெருமைப்பட்டுக் கொள்ளும் ஓய்வுபெற்ற பள்ளி ஆசிரியரான என் தந்தை கு. ராஜகுருவப்பனுக்கு இந்த மூன்றாம் பாகத்தை சமர்ப்பிக்கிறேன்.

நட்புடன்,

முத்துலட்சுமி ராகவன்

# என்னவென்று நான் சொல்ல?...

106

யாரோ என்று நான் நினைத்தவனே..
யாதுமாகி என்மனதில் குடி கொண்டதை
என்னவென்று நான் சொல்ல..?

அந்த மூடப்பட்டிருந்த அறைக்குள் பிரபாகரனின் ஆக்கிரமிப்பில் கண்மூடியிருந்த மாலினியின் மனம் நிறைந்திருந்தது.. அவளது வாழ்க்கையிலேயே முதன்முறையாக அவள் தோற்றிருக்கிறாள். இருந்தாலும்.. அந்தத் தோல்வி ஏன் இத்தனை இனிப்பாக இருக்கிறது என்று அவள்தன் மனதிற்குள் கேட்டுக் கொண்டாள்.

இதுவரை ஒன்றை வேண்டாமென்று விலக்கி வைத்து விட்டால் அவள் அதை மீண்டும் நினைத்துப் பார்த்ததில்லை..

இதை நினைக்கும்போதே..

'பிரபாகரனை நீ வேண்டாமென்று விலக்கி வைத்தாயா?' என்று அவளது மனம் அவளை கேள்வி கேட்டது.

அந்தக் கேள்விக்கு மாலினியிடம் பதிலில்லை. அவள் விலகிப் போனாள். ஆனால்.. அவனை விலக்கிப் போனாளா..?

'எங்கே?' மாலினி தன் மனதிற்குள் அலுத்துக் கொண்டாள்.

அவளா அவன் நினைவுகளை உடன் அழைத்துக் கொண்டு போனாள்? தூங்கும்போது அவனது நினைவு அவளை விட்டு விலக மறுத்து ஒட்டிக்கொண்டு நின்றால்.. அவள்தான் என்ன செய்வாள்?

''என்னடி யோசனை..?'' அவளது கன்னத்தில் தன் மூக்கை வைத்து உரசிந்தபடி பிரபாகரன் வினவினான்.

''ஒன்றுமில்லை...''

''ஒன்றுமில்லைன்னு நீ சொன்னால்தான் ஆயிரம் இருக்குன்னு அர்த்தம்.. சும்மா சொல்லு...''

''நான் திரும்பவும் மார்த்தாண்டத்தில் கால் வைப் பேன்னு நான் நினைக்கவே இல்ல..''

''இது என்னுடைய மண்.. இங்கே கால் வைக்காமல் வேறு எங்கே கால் வைக்க நினைத்தாய்?''

பிரபாகரனின் குரலில் கடுமை இருந்தது. அவனது கோபம் மாலினியின் மனதை தென்றலாய் வருடியது.

''எதுக்கு இந்த கோபம்?''

''எதுக்குன்னு உனக்கு தெரியாதா?''

''இப்படி எக்குத்தப்பாய் பேசி வைத்தால் நான் திரும்பவும் சென்னைக்கே ஓடிவிடுவேன்..''

''ஓட கால் இருந்தால்தானே.. நான் ஒடித்துவிடு வேன்..''

''ஒடித்து விடுவீங்களா.. நீங்க என்ன கசாப்பு கடைக் காரரா?''

''இல்லைடி.. உன்னைப் போல ஒரு பிறவியைக் காதலிச்சுத் தொலைத்தவன்..''

''இவ்வளவு அலுத்துக்கிறவர் எதுக்கு என்னை வர வழைச்சாராம்?''



''உம்.. தாலி கட்டி குடும்பம் நடத்தத்தான்..''

''அதுதான் அன்றைக்கே தாலி கட்டாமலே குடும்பம் நடத்தி முடிச்சாச்சே... இனியும் என்ன?''

அதுவரை எரிச்சலுடன் பேசிக்கொண்டிருந்த பிரபாகரன் கிளர்ந்தான். அவளை இறுக்கி.. புரண்டான். மாலினியின் மேல் சரிந்து அவள் முகம் நோக்கியவன் அவளது நெற்றியில் முத்தமிட்டான்.

''முதல் நாள் குடும்பம் நடத்திவிட்டு.. மறுநாள் சொல்லிக்காமல் ஓட உன்னால் மட்டும்தாண்டி முடியும்..''

''நான் சொல்லியிருந்தால் உடனே.. 'டாட்டா.. பை.. பை..'ன்னு சொல்லி அனுப்பியிருப்பீங்களாக்கும். விட மாட்டேன்னு அழிச்சாட்டியம் பண்ணியிருப்பீங்களே..''

''அதுக்கு உங்கள் ஊரில் அழிச்சாட்டியம்னு பெயரா?''

''மார்த்தாண்டத்திலும் அதுக்கு அப்படித்தான் பெயர்..''

''அறைஞ்சு பல்லைக் கழட்டி விடுவேன்..''

''இது ஆறாவது தடவை..''

''எது?''

''நீங்க அறைந்து பல்லைக் கழட்ட நினைப்பது.. உங்களைக் காதலிக்கும்போதே பல்செட்டுக்கு ஆர்டர் கொடுத்திருக்கணும் போல இருக்கே...''

பிரபாகரன் சிரித்துவிட்டான். குறும்பு கொப்புளிக் கும் மாலினியின் முகத்தைக் காதலுடன் பார்த்தவன்.. அவளது கண்ணிமையில் முத்தமிட்டான்.

''இந்த வாய்தாண்டி உன்னை வாழ வைக்குது..''

''ம்ஹூம்.. எதுக்கெடுத்தாலும் சான்ஸ் கிடைச்ச துன்னு ஒரு உம்மாவைக் கொடுத்துவிடவேண்டியது தானா?''

''அதில உனக்கு என்னடி நஷ்டம்.. எது குறைஞ் சிருச்சுன்னு இந்த கஷ்டம்?''

''ஒரு நஷ்டமும் கஷ்டமும் இல்லை. ஸ்வேதாவெல் லாம் சொன்னாள்னு அதைக் கேட்டுக்கிட்டு என்னை வேவு பார்க்க தோட்டத்துக்கு வந்த ஆள்தானே நீங்க. இப்பக் கொஞ்சி முத்தம் கொடுத்துட்டா எல்லாம் சரியாப் போகுமா?''

மாலினியின் அடி மனதில் இன்னும் கோபம் கனன்று கொண்டிருப்பதை உணர்ந்த கொண்டான் பிரபாகரன்.

அது உண்மையின் கோபம்.. என்னை எப்படி நீ சந்தே கிக்கலாம் என்று உண்மையாக அவனைக் காதலித்தவள்... காதலிக்கிறவள்.. கொள்ளும் கோபம்.

நீ தொட்ட மனதை.. வேறொருவன் தொட முடியுமா என்று நீதி கேட்கும் கோபம்.. 'சொன்ன மொழி தவறு மன்னவனுக்கே..' என்று பாரதியின் கண்ணம்மாவாக.. அவனது கண்ணம்மா சொல்லும் கோபம்.

மாலையிட்டால்தான் உன் மனைவியா என்று கேட்காமல் கேட்கும் வகையில் அன்று இரவு அவனுடன் கலந்தாளே... அந்த மனைவி கொண்ட கோபம்.

அவளது கேள்விக்கு பதில் சொல்லவேண்டிய கடமை தனக்கிருப்பதை பிரபாகரன் உணர்ந்தான்.

''வேவு பார்க்கத்தான் நான் தோட்டத்துக்கு வந்தேன்னு உனக்கெப்படித் தெரியும்?''

''வேற எதுக்கு வந்தீங்க?''

''என்னதான் நடக்குதுன்னு தெரிஞ்சுக்க வந்தேன்..''



''அதுவும் ஒரு வகையில் வேவுதானே..''

''இல்லை.. நாட்டைக் காப்பாற்றுகிற மன்னன்.. ராத்திரி நேரத்தில் மாறுவேஷம் போட்டு நாட்டைச் சுற்றி வருவானாம். அவன் என்ன ஒற்றனா? நாட்டில் என்ன நடக்குதுன்னு தெரிந்து கொள்ள வேண்டியது அவனுடைய வேலையில்லையா.. அது போல என் வீட்டைக் காப்பவன் நான்.. என் வீட்டில் எனக்குத் தெரியாமல் என்ன நடக்கு துன்னு தெரிந்துகொள்ள வேண்டியது எனக்கு அவசியம். நான் அதற்காகத்தான் வந்தேன். இந்த விஷயத்தில் நீ சம்பந்தப்படாமல் வேறு யார் சம்பந்தப்பட்டிருந் தாலும்.. நான் அந்த நேரத்தில் தோட்டத்துக்கு வந்துதான் இருப் பேன்..''

''அதுதான் ஏன்?''

''என் வீட்டில் கல்யாணம்... வீடு பூரா சொந்த பந்தம்.. இந்தச் சமயத்தில் என் வீட்டுத் தோட்டத்தில்.. ராத்திரி பதினோரு மணிக்கு ரகசிய சந்திப்பு நடக்கப் போகுது.. அது எனக்கு தெரிய வருது.. நான் என்ன செய்ய ணும்னு நீ நினைக்கிறாய். இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்துத் தூங்கியிருக்கணும்னு நினைக்கிறயா?''

''அதுக்காக.. ஸ்வேதா சொன்னதை நம்பிவிட லாமா?''

''நான் நம்பினேனாடி.. அடித்துப்...''

''பல்லைக் கழட்டி விடுவீங்க.. அப்படித்தானே...''

பிரபாகரன் ஆரம்பித்து வைத்ததை மாலினி முடிக்க.. அவன் ஆசையாக அவள் கன்னத்தில் இதழ் பதித்தான்.

''ஆரம்பிச்சுட்டீங்களா.. சைக்கிள் கேப்புல.. காரியத் தைச் சாதிக்கிறதில் நீங்க கில்லாடியாச்சே.. பேச்சு பேச்சாய் இருக்க.. இவர் காதல் பண்ணுவதை மட்டும் விடாமல்

இருக்கிறார். ஸ்வேதா பேசியதுக்கு தலையை ஆட்டிவிட்டு என்னைக் கொஞ்ச வந்துவிட்டார்..''

''ஸ்வேதா சொல்லுவதை நம்பியிருந்தா.. அன்றைக்கே உனக்கும் எனக்கும் சண்டை வந்திருக்கும்..''

''என்னிக்கு?''

''தினகரன் கொடுத்த பூவை.. நீ கையில் பத்திரப் படுத்திக் கொண்டு வந்த அன்னிக்கு..''

''என்னது?''

மாலினி கோபத்துடன் விலகப் போனாள். பிரபாகரனின் பிடி இரும்புப்பிடியாக இருந்தது. அவளால் விலக முடியவில்லை. ஆனாலும் கோபத்தை கண்களிலும் முகத்திலும் அவள் வெளிப்படுத்தினாள்.

''எவ்வளவு நெஞ்சழுத்தம் இருந்தா இப்படி ஒரு வார்த்தையை என்கிட்ட வந்து சொல்வீங்க. நீங்க மாறலை பிரபா..''

''நான் மாறலைதான்.. மாறவும் மாட்டேன். என்றைக்குமே உன் பிரபாகரனாகத் தான் நான் இருப்பேன். முதலில் நீ ஒன்றைத் தெரிந்து கொள்ளுடி.. அன்னிக்கு நீ கொண்டு வந்த பூ.. அம்மா கொடுத்து விட்ட பூவில்லை..''

''என்ன சொல்கிறீங்க?''

மாலினியின் விழிகளில் அதிர்ச்சி தெரிந்தது. அவளையும் ஏமாற்ற ஆள் இருக்கிறதா.. முதன்முதலாக தன் புத்தி சாலித்தனத்தின் மீது அவளுக்கு சந்தேகம் ஏற்பட்டது.

''தினகரன் பூவைப் பறிச்சுக்கிட்டு உள்ளே வந்தான். அதை மாடி பால்கனியிலிருந்து நானும் ஸ்வேதாவும் பார்த்தோம்..''

''அவ கூட எதுக்கு நீங்க ஜோடி போட்டுக்கிட்டு நின்னீங்க?''



காதலியின் பொறாமையை நினைத்து பிரபாகரனுக்கு சிரிப்பு வந்தது.

''சிரிக்காதீங்க...''

''பின்னே என்னடி.. அவ கூட ஒரு மனுஷன் ஜோடி போட்டு நிற்பானா?''

இதைக் கேட்ட மாலினிக்கும் சிரிப்பு வந்து விட்டது. அவள் சிரிப்பை அடக்கிக் கொண்டாள்.

''சிரிப்பு வந்தால் சிரிச்சிரணும்.. அடக்கிக்கக்கூடாது..''

''உங்க வாயில் இருந்துதான்.. நீங்க ரெண்டு பேரும் ஜோடி போட்டுக்கிட்டு நின்றதாக வார்த்தை வந்தது..''

''இரண்டு பேரும் பார்த்தோமுன்னுதான் சொன்னேன். ஜோடி போட்டுக் கொண்டு பார்த்ததாகச் சொல்லவில்லை..''

''ஜோடி போடாம எப்படி ஒண்ணாப் பார்த்தீங்களாம்..''

''ஊஹூம்.. தனித்தனியாத்தான் பார்த்தோம்..''

''புரியலை...''

''அவ கண்ணால் அவ பார்த்தா.. என் கண்ணால் நான் பார்த்தேன்..''

''ஜோக்கு?''

''அப்படித்தான் வச்சுக்கயேன்..''

''சிரிப்பு வரலை...''

''ஏதோ என்னாலானது இந்த ஜோக் அளவுதான்.. உன்னளவுக்கு ஜோக் சொல்ல என்னால் முடியுமா.. நீ யாரு.. செந்தாமரையை 'ஏ' ஜோக் சொல்லி அசத்தியவளாச்சே...''

மாலினியின் முகத்தில் வெட்கம் சூழ்ந்தது.

''ச்சீ.. இதை எல்லோர் முன்னாலயும் சொல்லி வைக்காதீங்க..''

''நான் சொல்லமாட்டேன். ஆனால், செந்தாமரை சொல்ல மாட்டாள்னு நான் கேரண்டி கொடுக்க மாட்டேன்..''

''அதைச் சொல்லுங்க.. அவளே ஒரு வெகுளி..''

''அதனாலதான் அவ ஸ்வேதா சொல்லியதை அப்படியே நம்பி அவ கொடுத்துவிட்ட பூவை அம்மா கொடுத்து விட்டதாகச் சொல்லி உன் கையில் கொண்டு வந்து கொடுத்துட்டா..''

மாலினி ஆ'வென்று வாய் பிளந்துவிட்டாள். அவள் விழிகள் விரிந்தன.

''என்னத்தான் சொல்கிறீங்க..''

''ஆமாடி.. எனக்கு உன் கூடப் பேசணும்னு ஆவல்.. நான் தோட்டத்திற்கு வர நினைச்சு, பால்கனிக்கு வந்து நின்னேன்..''

''அங்கே.. தோட்டத்தில் உங்க தம்பி என்னிடம் கடலை போட்டுக்கிட்டு இருந்தாரு..''

''கரெக்டா சொல்லிட்ட... அதை பல்லைக் கடித்துக் கிட்டு நான் பார்த்துக்கிட்டு நின்றிருந்தேன். அதை என் பின்னால் பூனை போல வந்து நின்ன ஸ்வேதாவும் பார்த் துட்டா..''

''அவ பேசாம மாடலிங் பண்ண போயிருக்கலாம்..''

''ஏன் அப்படிச் சொல்கிற..?''

'' அவளுக்கு ஹியூமன் வாக்கே வருவதில்லை.. கேட் வாக்தானே வருகிறது. அதனால்தான் அப்படிச் சொன் னேன்..''



''எங்கிட்டு இருந்துடி இப்படிப் பேசக் கத்துக்கிட்ட?''

பிரபாகரன் கண்கள் மின்ன அவளை நெருங்க.. மாலினி செல்லமாக அவன் முகத்தைத் தள்ளிவிட்டுச் சிணுங்கினாள்.

''ரூட் மாறாதீங்க அத்தான்..''

''என்னத்தான்.. தினகரனும் மாலினியும் பேசிக்கிட்டு இருக்காங்க போலன்னு என்னிடம் கேட்டாள்..''

இதைக் கேட்டதும் மாலினியின் முகம் மாறிவிட்டது.

''ஐ ஆம் ஸாரி அத்தான்.. என்னால்தானே அவ இப்படி உங்ககிட்ட கேட்டுவிட்டாள். நான் தினகரனைப் பார்த்தவுடன் உள்ளே போயிருக்கணும். எப்படியும் நீங்க தோட்டத்துக்கு வந்துவிடுவீங்கங்கிற நினைவில் நின்னுட் டேன்..''

''ஒருவழியாய் நீ உள்ள போயிட்ட.. இவன் சும்மா இருக்காமல் ஒரு ரோஜாப்பூவை பிடுங்கிக்கிட்டு உள்ளே வந்தான். இந்த ஸ்வேதா மறக்காமல் என்னைப் பார்த்து.. அந்தப் பூவை தினா அத்தான் யாருக்காக பறித்துக்கிட்டுப் போகிறான்னு கேட்டு வைச்சா..''

''அதுக்கு நீங்க என்ன சொன்னீங்க?''

''நிச்சயமா உனக்காக இல்லைன்னு சொன்னேன்..''

இதைக் கேட்டதும்.. மாலினியின் முகத்தில் புன்னகை படர்ந்தது.

''நீங்க இருக்கீங்களே... அப்பப்பா.. ஆனாலும்.. நீங்களும் தினகரனும் ஸ்வேதாவை ரொம்பத்தான் வாருகி றீங்க..''

''அவ அதுக்கெல்லாம் அடங்குகிற ரகமில்லை..''

''அதுதான் எனக்குத் தெரியுமே..''

''தினா மாடிக்கு வெறுங்கையோடு வந்து தொலைச்சான். அவன் பின்னாடியே நீ ரோஜாப் பூவை மகிழ்ந்து மகிழ்ந்து பார்த்துக்கிட்டு பொக்கிஷத்தைப் போலக் கொண்டு வந்த..''

''கடவுளே.. அது நான் உயர்வாக நினைக்கிறவங்க கொடுத்த பூவுன்னு வேற சொல்லித் தொலைச்சேனே...''

''தெரிஞ்சால் சரி.. தினகரன் தேன் குடிச்ச நரியைப் போல கண்கள் மின்ன உன்னைப் பார்க்கிறான். ஸ்வேதா இளக்காரமாக என்னைப் பார்க்கிறா. அந்த நிலைமையிலயும் உன்னை நான் கேள்வி கேட்டேனாடி?''

''என் பிரபா..''

மாலினி காதலுடன் பிரபாகரனின் கைகளுக்குள் புகுந்து கொண்டாள்.. இப்போது பிரபாகரன் தேன் குடித்த நரியானான். கண்கள் மின்ன காதலுடன் மாலினியை இறுக்கிக் கொண்டான்.

''காரில் போகும்போது தான் அது அம்மா கொடுத்து விட்ட பூவுன்னு நீ சொன்ன.. எனக்குச் சந்தேகம் தட்டியது. தினகரன் கொடுத்துவிட்ட பூ அம்மா கொடுத்து விட்ட பூவாக உன் கையில் எப்படி வந்தது?''

மாலினியின் முகம் மறைத்த முடி விலக்கி.. பிரபாகரன் கேட்டான். அவள் திகைத்து விழித்தாள்.

107

காதல் என்ற உணர்வை..
உன் கண்கள் சொன்ன கதையை..
என்னவென்று நான் சொல்ல...?



''எப்படி வந்தது?'' குழந்தையாகக் கேட்டாள் மாலினி.

''ம்ம்.. அதை என் கிட்ட கேளு..'' செல்லமாக அவள் கன்னத்தில் தட்டினான் பிரபாகரன்.

''இல்லை அத்தான்.. செந்தாமரை பொய் சொல்ல மாட்டாள்..''

''நிச்சயமாய் அவள் பொய் சொல்லமாட்டாள். அவள் மட்டுமில்லை.. என் வீட்டிலும் சரி.. என் தொழில்களிலும் சரி.. என்னிடம் வேலை செய்பவர்கள் பொய் சொல்ல மாட்டார்கள்..''

''கான்பிடென்ஸ்?''

''யெஸ்.. அதிலும் குறிப்பாக என் வீட்டு வேலையாள்கள் பொய் சொல்ல மாட்டாங்க.. நம்பிக்கைக்குரியவங்களா இருப்பாங்க. செந்தாமரை வெகுளி... பொன்னியிடமெல்லாம் இந்த வேலை நடந்திருக்காது..''

''அதைச் சொல்லுங்க.. அவ படுவிவரமான ஆளு...''

''ம்ம்ம்.. ஸ்வேதாவையெல்லாம் வந்து பாரு வட்டப் பாறைக்குன்னு சொல்லி விடுவாள்..''

''வட்டப் பாறைக்கு வருவதா?''

''அது சவாலுக்கு அழைக்கும் லாங்வேஜ்..''

''இன்ட்ரஸ்டிங்...''

''ஏண்டி... காதலிக்கிறவனைக் குற்றவாளியாக்கி விட்டு.. நீ இன்ட்ரஸ்டிங்குன்னு கதை கேட்கிறயா?''

''சும்மா ஒரு இன்ட்ரஸ்டில சொல்லிட்டேன் அத்தான்.. நீங்க இதுக்குப் போயி கோவிச்சுக்கலாமா?''

மாலினி அவனுடைய சட்டை பித்தானைத் திருக ஆரம்பித்தாள்.

''அதுக்கு ஏன் பட்டனை பிய்க்கிற?''

''அத்த்தான்...''

''வெட்கமாக்கும்.. அது ஏண்டி இந்த பொம்பளைக எல்லாம் வெட்கம் வந்தால் ஆம்பளைகளின் சட்டைப் பொத்தானை பிய்த்து எறியணும்னு ஒரு வெறியோட கிளம்பு கிறீங்க...''

''இதைப் பற்றி வேணும்னா நான் பிஹெச்.டி. பண்ணி விட்டு.. என் ஆராய்ச்சிக் கட்டுரையை உங்க கிட்ட சமர்ப் பிக்கிறேன்..''

''அதுதானே.. என்னடா.. இவ அதிசயமா வாயை அடக்கி பொத்தான் மேலே குறியாய் இருக்கிறாளேன்னு நினைச்சேன்.. நான்தான் ஏற்கெனவே சொல்லிட்டே னில்ல..''

''என்ன சொன்னீங்களாம்?''

''வாய்தான் உன்னை வாழ வைக்குதுன்னு சொன் னேன்..''

''செந்தாமரை ஏன் அந்தப் பூவை அத்தை கொடுத் ததாகச் சொல்லி என்னிடம் கொடுத்தாள்னு சொன்னீங் களா?''

''எங்கே நீ சொல்ல விட்ட?''

''உங்க வாயைப் பொத்தினேனா?''

''அதையெல்லாம் எங்கே நீ செய்கிற... அன்றைக்கு அணைக்கட்டில் அணை உடைந்த வெள்ளமாய் என்னை மூச்சுத் திணற வைத்தவள்தான்... அதுக்குப் பின்னால.. அந்த தோட்டத்துக் கதை நடந்தப்போ.. நடுராத்திரியில தீவிரம் காட்டிவை.. அடுத்த நாளே.. என்னை

*அவள் பறந்து போனாளே..*
*என்னை மறந்து போனாளே...* -ன்னு பாட்டுப் பாட



வைத்துவிட்டுப் பறந்துவிட்டாயே... இப்பவும் நான்தான் உன் வாயைப் பொத்த வேண்டியிருக்கிறது..''

பிரபாகரனின் இதழ்கள் மாலினியின் இதழ் மீது படிந்தன. மாலினி பொங்கி வரும் உணர்வுப் பிரவாகத்தில் அடித்துச் செல்லப்பட்டவளாக கண்மூடிக் கொண்டாள். பிரபாகரன் கள்ளுண்ட வண்டாக மயங்கிப் போனான்.

''மாலினி...''

''ம்ம்ம்..''

''ஐ லவ் யூடி..''

''எனக்கு இது தெரியாது பாருங்க.. இதையே எத்தனை தடவைதான் சொல்வீங்க?''

''மூச்சுக்கு முந்நூறு தடவை.. என் வாழ்நாள் பூராவும் சொல்வேன்..''

மாலினி அவன் கழுத்தை கைகளால் வளைத்துக் கொண்டாள்.. அவன் கண்களுக்குள் எதையோ தேடினாள்.

''என்னடி?''

''நான் என்ன அத்தனை அழகா அத்தான்.. என் மேல் ஏன் இத்தனை உயிராய் இருக்கீங்க?''

''இதே கேள்வியை நானும் கேட்கலாமில்லையா.. நான் கோடீஸ்வரன்னு சொல்லாதே.. நான் நாடோடியாக இருந்திருந்தாலும் நீ என்னை இதே ஆவேசத்துடன் காதலித் திருப்பாய்..''

'இதுபோதும்..' என்று மனதிற்குள் சொல்லிக் கொண் டாள் மாலினி.

இந்தப் புரிதல்.. அவளது காதலின் அளவையும் வேகத்தையும் அவள் வாய் விட்டுச் சொல்ல வேண்டிய அவசியமில்லாத புரிதல்.. அது அவளுக்கு கிடைத்தது மிகப் பெரிய வரமல்லவா?

அவளது காதலின் எல்லை.. வானத்தின் அளவு.. அதைப் புரிந்து கொண்டவன் அவளது காதலன்.

அதைப் போல அவனது காதலின் அளவுக்கும் வானம் தான் எல்லை... அதை மாலினியும் புரிந்து வைத்திருந்தாள்.

மனநிறைவுடன் அவனது விரல் கோத்துக் கொண்டாள் மாலினி. காதலியின் சரணாகதியைப் புரிந்து கொண்டாலும்.. அவளது குற்றச்சாட்டிற்கான விளக்கத்தை சொல்லியாக வேண்டும் என்று பிரபாகரன் நினைத்துக் கொண்டான்.

அரைகுறையாக இதை விட்டால்.. என்றேனும் ஒரு நாளில் மீண்டும் இந்தக் கேள்வி வெடித்து எழுந்துவிடும் அபாயம் இருந்தது.

தன்னிலை விளக்கத்தை பிரபாகரன் சரிவரக் கொடுக்காவிட்டால்.. இன்று பிரபாகரனைப் பிரிந்து செல்லத் துணிந்த மாலினி.. நாளை.. அதே வேலையைத் திரும்பவும் செய்து விடுவாள்.

அதனால் மாலினியின் மீதிருந்த மயக்கத்திலிருந்து வெளிவந்து அவளது விரல்களை நீவி சொடக்கெடுத்தபடி பிரபாகரன் தொடர்ந்து பேச ஆரம்பித்தான்.

''செந்தாமரையிடம் அப்படிச் சொல்லி ஸ்வேதா பூவைக் கொடுத்திருக்கிறாள்..''

''ஸ்வேதா மிரட்டினாளா?''

''ஹூம்.. மிரட்டலுக் கெல்லாம் செந்தாமரை பயப்பட மாட்டாள். ஒருவேளை ஸ்வேதா அப்படிச் செய்திருந்தால் செந்தாமரை அந்தப் பூவை வாங்கியிருக்கவே மாட்டாள். அப்பவே அம்மாவிடம் போய் சொல்லியிருப்பாள். ஸ்வேதா கெட்டிக்காரி..''

''என்ன பாராட்டெல்லாம் பலமாயிருக்கு?''



''கெட்டிக்காரின்னுதானேடி சொன்னேன்..''

''அதைக்கூட நீங்க எதுக்கு சொல்கிறீங்க...''

''சரி, தாயே.. இனி சொல்லவில்லை...''

''அஃது.. அந்த பயம் இருக்கட்டும்..''

''செந்தாமரைக்கு உன் மேல் பிரியம் ஜாஸ்தி..''

அதைக் கேட்ட மாலினியின் முகம் கனிந்தது. அவள் 'ஆம்' என்ற பாவனையில் தலையை ஆட்டினாள்.

''செந்தாமரைக்கு மட்டுமில்லை... நம் வீட்டில் வேலைபார்க்கிற எல்லோருக்குமே உன்மேல் பிரியம் ஜாஸ்தி தான்..''

''ம்ம்ம்..''

''வீட்டு எஜமானனுக்கு.. அவங்க எல்லோரையும்விட பிரியம் ஜாஸ்தி..''

''இதுதான் சாக்குன்னு கொஞ்ச ஆரம்பிக்காம விஷயத்தை சொல்லுங்க..''

''அம்மா.. அன்னிக்கு காலையில தோட்டத்துக்குப் போனாங்களாம்..''

''போயி?''

''அந்த ரோஜாப் பூவை பார்த்தாங்களாம்..''

''உங்க வீட்டுத் தோட்டத்தில் ரோஜாக் கூட்டமே இருக்கே.. அதில அந்தப் பூவை மட்டும் அத்தை உற்றுப் பார்த்தாங்களாமா?''

''இது உனக்கும் எனக்கும் தெரியும். செந்தாமரைக்கு தெரியுமா?''

''அதை சொல்லுங்க..''

''அது அன்னிக்குதான் மலர்ந்த பூவாம்..''

''அட...''

''அதனால்.. அதைப் பறித்து உன்கிட்ட மட்டும் கொடுக்கச் சொல்லி ஸ்வேதா கையில் அம்மா கொடுத்து விட்டாங்களாம்..''

''அதுக்கு அவங்களுக்கு வேறு ஆளே கிடைக்காதா.. ஸ்வேதாவிடம் போய் அத்தை அதைக் கொடுப்பாங்களா?''

''இதை பொன்னின்னா யோசித்துப் பார்த்திருப்பா.. செந்தாமரைதான் களிமண்ணாச்சே.. அதனால்தானே செந்தாமரையை இந்தக் காரியத்துக்கு ஸ்வேதா செலக்ட் பண்ணியிருக்கிறா...''

''கெட்டிக்காரிதான்..''

''இதை நீ சொல்லலாம்.. நான் மட்டும் சொல்லக் கூடாதா?''

''சொல்லக் கூடாது..''

''சொல்லலை.. போதுமா. இப்ப விஷயத்துக்கு வா...''

''வந்தேன்..''

''செந்தாமரை கிட்ட இதை சோகமாய் சொல்லி.. பாரு செந்தாமரை.. என் அத்தைக்கு இருக்கிற ஓரவஞ்சனையை... இந்த ஸ்பெஷல் பூவை எனக்குக் கொடுக்காம.. என் கையிலயே கொடுத்து மாலினிகிட்ட கொடுக்கச் சொல்லி என் அத்தை சொல்கிறாங்க.. என் மனது தாங்குமா.. நீயே சொல்லுன்னு நியாயம் கேட்டிருக்கிறாள்..''

''அடக்கடவுளே...''

''உனக்குத்தானே மனசு தாங்காது.. எனக்குத் தாங்கும்னு சொல்லி.. செந்தாமரை அந்தப் பூவை ஸ்வேதா கிட்ட வாங்கிக்கிட்டு வந்து உன்கிட்ட கொடுத்து.. சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளையாய் ஸ்வேதா சொன்னதை உன்னிடம் ஒப்பித்துவிட்டும் போய் விட்டாள்..''



''பெருமாளே.. அது தெரியாமல் நான் அந்தப் பூவை தினகரனின் கண் எதிரிலேயே கொண்டாடினேனே.. அங்கே ஸ்வேதாவும் இருந்து தொலைத்தாளே.. உங்க மனசு என்ன பாடுபட்டிருக்கும்?''

''இப்ப வந்து இதைச் சொல்லு.. எனக்கு நல்லா வந்திரும் வாயில... அப்பக்கூட நான் உன்னிடம் கோபப் பட்டேனாடி?''

''உம்முன்னு இருந்தீங்க..''

''அதைக்கூடச் செய்யலைன்னா நான் ஆம்பளையாடி?''

''ஐ ஆம் ஸாரி அத்தான்..''

''இதுக்கொண்ணும் குறைச்சலில்லை. செய்வதையெல்லாம் அறியாமல் செய்துவிட வேண்டியது.. விஷயம் தெரிந்தவுடன் பச்சைப் பிள்ளை போல முகத்தை வைத்துக் கொண்டு 'ஸாரி'ன்னு சொல்ல வேண்டியது. உனக்கு இதே வேலையாப் போச்சுடி..''

''நானும் பச்சைப் பிள்ளை போலத்தான்.. அத்தான்..''

''யாரு.. நீ பச்சைப் பிள்ளை? அதை அணைக்கட்டுக்குப் போவதற்கு முன்னால் சொல்லியிருந்தா நம்பியிருப்பேன்..''

மாலினி லஜ்ஜையுடன் பிரபாகரனின் கையைக் கிள்ளினாள்.

''ஸ்ஸ் ஆ.. வலிக்குதுடி...''

''இதைவிட என் மனம் வலிக்குது. உங்களுக்கு எப்படிப்பட்ட தர்மசங்கடமான நிலையை உண்டாக்கியிருந்தேன்?''

''நீ என்னடி செய்வ.. இது ஸ்வேதா ஆடிப் பார்த்த விளையாட்டு.. தினகரன் கொடுத்த பூவை நீ கை நீட்டி வாங்கியிருக்க மாட்டாய்னு எனக்குத் தெரியும். ஆனால், அந்தப் பூ உன்னிடம் எப்படி வந்ததுன்னு என் மனதைப் போட்டு கேள்வி குடைந்து கொண்டிருந்தது. உன்னிடமும் அதைக் கேட்க முடியாது. நீ சுயமரியாதை சுந்தரி.. இப்ப பெட்டியைக் கட்டினவ அப்பவே பெட்டியைக் கட்டித் தொலைச்சிருப்ப...''

பிரபாகரன் அலுத்துக் கொள்ளவும்.. மாலினி உதட்டைக் கடித்துக் கொண்டாள். அவனது பார்வை அவளது இதழ் மீது படிய... அவசரமாக சரிசெய்து கொண்டாள்.

''தற்காப்பு எச்சரிக்கை?'' அவன் கண்சிமிட்டினான்.

அவள் முகம் சிவந்தாள். அவன் உல்லாசமாக நகைத்தான்.

''நீயாக பூ மேட்டரை எடுத்து நியாயம் கேட்ட.. அது அம்மா கொடுத்துவிட்ட பூவுன்னு நீ சொன்னதும் எனக்கு சிக்கலின் நூல் முனை கிடைத்துவிட்டது. உன்னை மில்லில் இறக்கிவிட்டு.. வீட்டுக்குப் போனேன். அம்மாவிடம் கேட்டேன். அவங்க பூவைக் கொடுக்கலைன்னு சொல்லி.. செந்தாமரையைக் கூப்பிட்டு விசாரித்தாங்க. பூனைக்குட்டி வெளியே வந்து விட்டது...''

''கடவுளே.. அத்தையிடம் தினகரனைப் பற்றிச் சொல்லிட்டீங்களா...''

''இல்லையில்லை.. ஆனால் ஸ்வேதா இனிமேல் நம்ம வீட்டில் இருக்க கூடாதுன்னு சொல்லிட்டேன்..''

''அத்தான்...''

மாலினிக்கு ஆளவந்தாரின் குடும்பத்தின் அருமை தெரியும். நர்மதாவிற்கு அவர்கள் எந்த அளவிற்கு முக்கியமானவர்கள் என்பதை புத்திசாலியான அவள் புரிந்து வைத்திருந்தாள். அதனாலேயே பவித்ராவின் காதல் நிறைவேற அவள் ஆணை செய்யத் துணிந்தாள்.



அப்படிப்பட்ட நர்மதாவிடம்.. அவளின் அண்ணன் மகள் அந்த வீட்டில் இருக்கக் கூடாதென்று மாலினிக்காக பிரபாகரன் சொன்னானா?

''என்னடி அப்படிப் பார்க்கிற?''

''அவள் உங்க மாமாவின் மகள்.. அத்தான்..''

''இருக்கட்டுமே..''

''எனக்காக அவளை வீட்டை விட்டுப் போகச் சொன்னீங்களா?''

''அடிதான் வாங்கப் போகிற.. நீ என் உயிர்டி..''

''அவளை வீட்டை விட்டுப் போகச் சொன்னது எனக்குத் தெரியும். ஆனால், எனக்காக வீட்டை விட்டுப் போகச் சொன்னது இப்போதுதான் தெரியும்..''

''இப்போ சொல்லு.. நானா உன்மேல் சந்தேகப் படுகிறவன்?''

''இல்லைதான்.. ஆனாலும்...''

மாலினி இழுத்தாள்.. இன்னும்கூட அவள் முழுதாக சமாதானமாகவில்லை என்று பிரபாகரனின் மனம் உணர்ந்தது.

'எப்படிச் சமாதானமாவாள்?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டான் அவன். அவன் பேசிய வார்த்தைகள் அப்படிப்பட்டவை.. சகோதரனைப் போல் உன்னை நினைக்கிறேன் என்று தினகரனிடம் சொன்னவள் மாலினி..

அப்படிப்பட்டவளிடம் போய்.. தினகரனுக்கும் நூல் விட்டாயா என்று கேட்டுத் தொலைத்தவன் பிரபாகரன்.

அப்புறம் எப்படி அவள் சமாதானமாவாள்?

''பார்.. மாலினி...'' என்று அவன் ஆரம்பித்தான்..

அவள் உடனே அவனைக் காதலுடன் பார்க்க ஆரம்பித்து விட்டாள்.

கண்களில் மயக்கத்துடன்.. ஆவலாக.. அவனையே அள்ளிப் பருகுவதைப் போல அவள் பார்த்ததைக் கண்டவன் மனம் கிறங்கிப் போனான்.

''இப்படிப் பார்த்தால் எப்படிடீ விளக்கம் சொல்வது?'' அவன் முகம் தாபத்துடன் அவள் முகத்தை நெருங்கியது.

108

*தொலைதூரம் பிரிந்து நீ சென்றபோதும்..*
*மனதாலே நீ என்னருகிலிருக்கும் உணர்வை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

''நீங்கதானே அத்தான்.. என்னைப் பாருன்னு சொன்னீங்க?'' மாலினி சிணுங்கினாள்.

''அதுக்காக இப்படியா என்னைப் பார்த்து வைப்ப?''

''எப்படிப் பார்த்தேனாம்?''

''அப்படியே பார்வையிலேயே என்னைச் சாப்பிட்டுட்டடீ...''

மாலினி அவனது சட்டையின் வாசம் பிடித்து கண் மூடிக் கிறங்கினாள். அவளது காதோரமாக இதழ் பதித்த பிரபாகரன்,



''எல்லாம் சரிதான்.. இவ்வளவு காதலை என்மீது வைத்திருக்கிறவள்.. பிரிஞ்சு ஓடுகிறயே.. அதைத்தான் என்னால் தாங்கிக் கொள்ள முடியலை..'' என்றான்.

மாலினி பதில் சொல்லவில்லை. அவளது மனதின் சிணுக்கம் பிரபாகரனுக்குப் புரிந்தது.

''ஸ்வேதாவை ஊருக்கு அனுப்ப அம்மா முயற்சி செய்தாங்க. ஆனால், இத்தனை மாதங்களாக இங்கே இருந்தவளை காயத்ரியின் கல்யாண சமயத்தில் திருப்பி அனுப்பினா தேவையில்லாத விமரிசனங்கள் வரும்.. அதனால.. அவளோட கல்யாண வாழ்க்கை பாதிக்கப் படும்னு தாத்தா சொல்லியிருக்கிறார். அம்மாவால் அதை மறுத்துப் பேச முடியல..''

''ஒருவகையில் அது நியாயம்தான் அத்தான்..''

''அதனால்தான் நான் காயத்ரியின் கல்யாணம் முடிகிற வரை அவள் இங்கே இருக்க அனுமதித்தேன்..''

''நீங்க... அதை தவிர்த்திருக்கவே முடியாது..''

''அறுபது நாள்கள்... ஸ்வேதாவிற்கு அது மிக அதிகமான நாள்கள். ஒரு நாள் கிடைத்தாலே அவள் அதில் விளையாடிப் பார்த்துவிடுவாள். அறுபது நாள்கள் என்பது அவளுக்கு அல்வா சாப்பிடுவது மாதிரி..''

''ம்ம்ம்..''

''நான் ஜாக்கிரதையாகத்தான் இருந்தேன்.. என்றைக்கு அவள் என் வீட்டிலேயே விளையாடிப் பார்க்க ஆரம்பித்து விட்டாளோ... அதற்குப் பின்னால் அவளைப் பெண் ணென்று எளிதாக நினைத்துவிட முடியவில்லை..''

''பெண்ணென்றால் உங்களுக்கு எளிதா?''

''எந்த மடையனாவது அப்படிச் சொல்வானா.. பெண் ஆதிசக்தியாச்சே..''

''இப்படிச் சொல்லிச் சொல்லியே எங்களுக்கு சூடம்.. சாம்பிராணி காட்டி வீட்டுக்குள் அடைச்சு வச்சிருங்க..''

''வீட்டுக்குள் அடைந்து கிடந்தாலும்.. எங்களை ஆட்டிப் படைக்கிற சக்தி நீங்கதானேடி.. நான் பெண்ணுங் கிறதால் எளிதாகச் சொல்லவில்லை. பெண்கள் பொதுவாக இரக்கம் காட்ட வேண்டிய லிஸ்டில் இருப்பவர்கள்..''

''ஐயோ பாவம் கேஸுன்னு சொல்கிறீங்க..''

''ஏண்டி.. முன்னால் போனால் கடிக்கிற.. பின்னால் வந்தால் உதைக்கிற. ஒரு நிலையில் இருக்க மாட்டயா... ஒண்ணு இப்படி இரு.. இல்லைன்னா அப்படி இரு. ஒரு மனுஷன் உன்னைக் காதலிச்சுத் தொலைத்ததிற்காக இப்படியா பாடாய்ப்படுத்துவ?''

பிரபாகரனின் வார்த்தைகள்தான் சுள்ளென்று வந்தன. அவன் என்னவோ அவளுடைய கன்னத்தோடு கன்னம் வைத்து இழைந்து கொண்டிருந்தான்.

அதைக் கண்ட மாலினிக்கு சிரிப்பு வந்துவிட்டது.

''ஏண்டி.. உனக்கு ரோஷமே இல்லையா?''

''யாரு.. எனக்கு ரோஷமில்லை?''

''ஆமாம்.. நான் திட்டிக்கிட்டு இருக்கேன்.. என்னவோ.. உன்னைக் கொஞ்சிக்கிட்டு இருப்பதைப் போல மகிழ்ந்து போய் சிரிக்கிறயே...''

''இந்த லட்சணத்தில் திட்டினால் மகிழாமல் என்ன செய்வாங்களாம்..''

இப்போது மாலினியின் சிரிப்பு பிரபாகரனையும் தொற்றிக் கொண்டது.

''போடி அரட்டை... ஸ்வேதா விளையாடிப் பார்க்க நினைத்தது நம் வாழ்க்கையில்டி. அவள் உன்னையும் என்னையும் பிரிக்கப் பார்த்தாள். தினகரனையும் என்னை யும் பிரிக்கப் பார்த்தாள். அவள் ஆபத்தானவள்னு தெரிந்த பின்னால் நான் அலர்ட்டாகத்தான் இருந்தேன். ஆனால், அவள் சைலண்டாக விளையாடிப் பார்த்துட்டாள்...''



''என்னிடம் அவளது பாச்சா பலிக்காது அத்தான்..''

''பவித்ராவிடம் பலித்து விட்டதே...''

பவித்ராவின் பேச்சு வந்ததும் மாலினி மௌனமாகி விட்டாள். அவளது மனநிலையை புரிந்தவனாக பிரபாகரன் அவளது பதிலை எதிர்பார்க்காமல் பேச்சைத் தொடர்ந்தான்.

''பவித்ராவின் ஆங்கிளில் இருந்து இதைப் பார்க்க வேண்டும் மாலினி.. தினகரன் உன்னிடம் வழிந்ததென் னவோ உண்மைதான். அவள் தினகரனை எவ்வளவு காதலிக்கிறாள் என்று உனக்குத் தெரியும்தானே. நீயும் காதலித்துக் கொண்டிருப்பவள் மாலினி. அப்படி உயிருக் குயிராக காதலிக்கும் காதலனின் மனதில் வேறொரு பெண ணின் மீது ஆர்வம் இருப்பது தெரிந்தால் அவளுக்கும் பொறாமை வரும்தானே...''

மாலினி பதில் பேசவில்லை.

''அதுக்கு நீ பொறுப்பாக முடியாதுதான். ஆனாலும் மாலினி.. நீ அவளைப் புரிந்துகொள்ள டிரை பண்ண வேண்டும்..''

மாலினி, பிரபாகரனிடமிருந்து விலகி அமர்ந்து.. கை விரல் நகங்களை ஆராய ஆரம்பித்தாள்.

''உனக்கு பவித்ராவைப் பத்தின பேச்சு பிடிக்க லைன்னு தெரியுது. ஆனாலும் பேச வேண்டியதை பேசித் தானே ஆகணும்.. ஸ்வேதா, பவித்ராவின் மனதில் மெல்ல மெல்ல விஷத்தை ஏற்றியிருக்கிறாள். அறுபது நாள்களில் அவள் மனதை கலங்கடித்திருக்கிறாள். பாவம் பவித்ரா..

பேதைப் பெண். ஸ்வேதாவின் பேச்சை அவள் நம்பாவிட்டாலும் தினகரன் உன் மேல் ஆர்வமாய் இருக்கிறான்னு தெரிந்ததும் உடைந்து போய்விட்டாள்...''

'நீ என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்.. நான் வாயைத் திறக்கவே மாட்டேன்' என்று கங்கணம் கட்டிக் கொண்டவளாக மாலினி பிடிவாதமாக மௌனம் சாதித்தாள்.

''என்னைப் பற்றி எல்லோரும் 'இரும்பு மனிதன்'னு தான் சொல்வாங்க..''

''நானும் அப்படித்தான் சொல்வேன்..''

''அப்படிப்பட்ட என்னையே கலங்கடிக்கப் பார்த்தவள் ஸ்வேதா. பவித்ராவை விட்டு வைப்பாளா? அன்றைக்கு தோட்டத்துக்கு தினகரனை சந்திக்க நீ வரப் போவதாக இவள் வாசலிலேயே காத்துக் கொண்டிருந்து என்னிடம் சொன்னபோது எனக்கு தூக்கிவாரிப் போட்டுவிட்டது. வாசல் போர்டிகோபில் கொஞ்சம் வெளிச்சம் கம்மியாக இருந்தது. சட்டுன்னு அவ கழுத்தைப் பிடித்து நெரித்து விட்டேன். இன்னும் ஒரு விரல் ஆழமாகப் பதிந்திருந்தால் கூட அவள் உயிரை விட்டிருப்பாள்..''

''ஐயோ..''

மாலினி பதற்றத்துடன் வாய் பொத்திக் கொண்டாள். பிரபாகரனின் முகத்தில் கோபம் வந்திருந்தது.

''அவள் அன்றைக்கே என் கையில் சாக வேண்டியவள் தப்பித்து விட்டாள்..''

''என்ன அத்தான் இது?''

''வேறு என்ன செய்ய மாலினி.. உன்னைப் பற்றி அபாண்டமாக அப்படி ஒரு வார்த்தையைச் சொல்கிறாள். அவளை உயிரோடு விடுவதா?''



மாலினி ஸ்தம்பித்துப் போய்விட்டாள். அவளுடைய பிரபாகரன் அவளை உடனே சந்தேகித்து விடவில்லை. பழி சொன்னவளை கொல்லத் துணிந்திருக்கிறான் என்ற நினைவு அவளது நெஞ்சத்தை நிறைத்தது.

''காயத்ரியின் கல்யாண சமயம் என்பதால் கையை எடுத்தேன். அவள் மூச்சுவிடத் திணறுகிற அந்த நிலைமையிலும் என்னைப் பார்த்து சவால் விட்டாள் மாலினி...''

''என்ன சவால்?''

''தினகரன் நைட் பதினோரு மணிக்கு தோட்டத்துக்கு வருவான். அவனிடம் போய் அவன் யாருக்காக காத்திருக்கிறான்னு கேளுங்க. அதை விட்டுட்டு என் கழுத்தை நெரிக்காதீங்கன்னு சொன்னா. அவ்வளவு ஆணித்தரமா அவள் சொன்னபின்னாலும்.. நான் உன்னிடம் கேள்வி கேட்கவில்லை மாலினி. இதை நினைவில் வைத்துக்கொள்..''

அது உண்மையென்பதை மாலினியும் உணர்ந்துதான் இருந்தாள்.

''என்ன நடக்கிறது என்று மாடி பால்கனியிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தேன். தினகரன்.. தோட்டத்துக்குப் போனான். இந்த நடுராத்திரியில் அவனுக்கு தோட்டத்தில் என்ன வேலைன்னு கோபம் வந்தது. ஸ்வேதா விளையாடிப் பார்க்கிற விளையாட்டில் தெரியாமல் அவன் மாட்டிக் கொண்டானா என்ற யோசனையுடன் அதை ஊர்ஜிதம் பண்ணிக் கொள்ளத்தான் தோட்டத்துக்குப் போனேன். உன்மேல் சந்தேகப்பட்டு போகவில்லை..''

''எனக்கு இது எதுவும் தெரியாது அத்தான்..''

''அதுதான் எனக்கு அன்னிக்கே தெரியுமே.. நீ ஏதோ சிக்கலில் மாட்டியிருக்கிறது மட்டும் எனக்குத் தெரிந்தது. என்ன சிக்கல்னு எனக்குத் தெரியவில்லை...''

''எனக்கே அது தெரியாதே.. நான் நிம்மதியாக தூங்கப் போய்விட்டேனே..''

''அது தெரியாமல் இந்தப் பைத்தியக்கார தினகரன் தோட்டத்தில் உனக்காக காத்துக் கொண்டிருந்தான்..'

''நீங்களாச்சும் என்னிடம் இப்படியிப்படின்னு சொல்லி யிருக்கலாமில்ல?''

''எப்படியெப்படின்னு சொல்லுவேன்.. இது கத்தி முனையில் நடக்கிற சமாசாரம்டி. அத்தனை தூரத்துக்கு ஜாக்கிரதையாக இருந்தும். கடைசியில் என்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள முடியாமல் போய்விட்டது மாலினி. நீயும் நானும் பிரியும் நிலை வந்து சோ்ந்தது..''

''நானும் நிறையத் தடவை யோசித்து விட்டேன் அத்தான்.. என்மேல் எந்தத் தவறும் இருக்கிறதாக எனக்குத் தெரியவில்லை...''

''இல்லை மாலினி.. உன்மேல் ஒரு தவறும் இல்லை. பவித்ரா கேட்டதைப் போல நீ தினகரனிடம் போய் என்னைக் காதலிப்பதை பட்டுன்னு சொல்லிவிட முடி யாது...''

''உங்களுக்கு என்னைப் புரிகிறதா அத்தான்?''

''நல்லா புரிகிறது..''

''காதல் என்பது மிகவும் தனிப்பட்ட.. அந்தரங்கமான உணர்வு. அதை நெருங்கிய தோழியிடம் பகிர்ந்துகொள் ளலாம்.. அந்நிய ஆளிடம் பகிர்ந்துகொள்ள முடியாது. உங்களுக்கு ஒன்று தெரியுமா?''

''என்னடி?''

''சசியிடம்கூட நான் இதை பகிர்ந்துகொண்ட தில்லை. அவளாகத் தெரிந்துகொண்டதுதான். அந்த வகையில் என் மனதிலிருந்ததை நான் பகிர்ந்துகொண்ட ஒரே ஜீவன் பவித்ரா மட்டும்தான். அவளை அந்த அள வுக்கு உயர்வாக நினைத்தேன். மதித்தேன்..''



''இப்போது அவள் வருத்தப்படுகிறாள் மாலினி..''

''காலங் கடந்த வருத்தத்தால் யாருக்கு என்ன பயன்? என் அம்மா அடிக்கடி சொல்வாங்க.. வார்த்தைகளைக் கொட்டாதே.. அதைத் திரும்பவும் அள்ள முடியாதுன்னு. அது எந்த அளவுக்கு உண்மையாகிருச்சுன்னு பாருங்க. பவித்ரா பேசியதை அவளால் திரும்ப வாங்கிக்க முடியுமா?''

''அவ சூழ்நிலை அப்படி...''

''எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் நீங்கள் என்னைக் கேள்வி கேட்கவில்லையே அத்தான்.. என்னைக் கேள்வி கேட்கும் உரிமை உங்கள் ஒருவருக்கு மட்டும்தான் உள்ளது. அவள் யார் என்னைக் கேள்வி கேட்க?''

''அறியாப் பெண்ணுடி.. விட்டுத் தள்ளு...''

''இல்லை அத்தான்.. அவள் எல்லாம் அறிந்தவள் தான். அவ்வளவு சுலபமாக உங்களைப் போல என்னால் விட்டுத் தள்ளுன்னு போய் விட முடியாது..''

''ஒரு காலத்தில் உனக்கு அவள் பெஸ்ட் ஃப்ரெண்ட் மாலினி..''

''அதுக்காகத்தான் அந்தக் கருமாந்திரம் பிடித்த காதல் தூது போகும் வேலையைச் செய்ய நான் ஒப்புக்கொண் டேன். அவள் மனதிலிருப்பதை மறைக்காமல் என் ஒருத்தி யிடம்தான் சொன்னாள். அவளுடைய காதல் நிறைவேறா மல் போய்விடுமோன்னு பயந்து அழுதாள். அவள் மேல் இரக்கப்பட்டேன். அதற்கு கைமேல் பலன் கிடைத்து விட்டது. நீங்க மேலே சொல்லுங்க..''

''இந்தத் தினகரன் பயல் குட்டிப் போட்ட பூனை யைப் போல தோட்டத்தில் உலாத்திக்கிட்டு இருந்தான். ஆனா ஒண்ணு மாலினி.. பயல் என்னிடம் விஷயத்தை மறைக்கவே நினைக்கலை..''

''அதை நீங்கதான் மெச்சிக்கனும்.. தப்புத் தப்பாய் யூகம் பண்ணிவிட்டு.. அண்ணனின் காதலிக்காக தோட் டத்தில் உலாவுவாராம். அந்த மன்மதக் கொடுக்கிற்காக இந்த அருமை அண்ணன் பரிந்துக்கிட்டு வருவாராம்..''

''அண்ணனின் காதலின்னு அவனுக்குத் தெரியு மாடி?''

''ஏன்.. ஹிட்லர் சார்.. அதைத் தம்பியிடம் சொல்ல வேண்டியதுதானே.. ஏன் இந்த விஷயத்தில் தம்பியிடம் ஊமையாகிப் போனார்?''

''அது வந்து..''

''என்னத்தை வந்து.. போயின்னு இழுக்கறீங்க. பெரிதாய் உங்க மாமன் மகளுக்காக வக்காலத்து வாங்கி னீங்களே.. அவ எதுக்கு என்னைக் குத்தம் சொன்னா? உங்களைக் குற்றம் சொல்ல வேண்டியதுதானே..?''

''உனக்குத் அது ஒரு குறையா?''

''பின்னே.. இல்லையா.. உங்க தம்பிதான் என்னிடம் ஒரு மார்க்கமாய் வழிகிறாருன்னு உங்களுக்குத் தெரியும் தானே. அவரைக் கூப்பிட்டு.. தம்பி.. தம்பி.. நீ வழிகி றாயே.. அவள் உனக்கு அண்ணின்னு சொல்ல வேண்டி யதுதானே..''

''தானாய் தெரியட்டும்னு விட்டுவிட்டேண்டி... வீட்டில் கல்யாண வேலைகள் நடந்து கொண்டிருந்த போது இதைச் சொல்லாட்டி என்ன.. எப்படியும் காயத்ரி கல்யாணம் முடிந்தவுடன் அடுத்த முகூர்த்தத்தில் உன் கழுத்தில் தாலியைக் கட்டப் போகிறேன்.. அப்ப அவனாகத் தெரிந்து திருந்திக் கொள்ளட்டும்.. அதுக்குள்ள அவசரப் பட வேணாம்னு நினைச்சேண்டி..''



''நீங்க அமைதியாய் இருந்தீங்க.. சரி.. குடும்பத்திற்கு மூத்தவர்.. காதல் அது இதுன்னு தம்பி.. தங்கையிடம் சொல்லச் சங்கடப்படுகிறான்னு நினைத்து நானும் ரகசியம் காத்தேன். இது ஒரு தப்பா?''

''தப்புன்னு நான் சொன்னேனா?''

''அன்னிக்கு சொன்னீங்களே..''

''அதுக்குத்தான் பட்டு அனுபவித்து விட்டேனே.. உனக்கு அது போதாதா?''

பிரபாகரன் இப்படிக் கேட்டதும்.. மாலினிக்கு கண் கலங்கிவிட்டது. அவள் அவனது கையைப் பிடித்துக் கண் ணில் ஒற்றிக்கொண்டாள்.

''ஐ ஆம் ஸாரி அத்தான்..''

''எத்தனை தடவைதான் ஸாரி கேட்ப?''

''உங்களை பனீஷ் பண்ணிட்டேன்..''

''உன்னையும் சேர்த்துத்தானே தண்டித்துக் கொண் டாய்.. என்னைப் பிரிந்து நீ இருந்து விடுவாயா?''

'முடியாது..' என்ற பாவனையில் தலை அசைத்த மாலினி.. பிரபாகரனின் மார்பில் சாய்ந்து கொண்டாள்.

''உங்க அம்மா கேட்டபோதுகூட நான் நம் காதலைப் பற்றி அவங்களிடம் சொல்லவில்லை அத்தான்.. அப்படி யிருக்கும்போது தினகரனிடம் போய் எப்படி நம் காதலைப் பற்றிப் பேசுவேன்.. அவரிடம் நான் பொதுவாகத்தான் பேசுவேன் அத்தான்.. அதிகமாக பேச மாட்டேன்..''

மாலினியின் கண்ணிலிருந்து பெருகிய நீர் பிரபாகர னின் சட்டையை நனைக்க.. அவன் இரக்கத்துடன் அதைத் துடைத்து விட்டான்..

109

கொட்டுகிற அருவியைப் போல...
என்னைக் கட்டிவைக்கும் உன் நினைவை..
என்னவென்று நான் சொல்ல..?

பிரபாகரனின் மனம் துயர் கொண்டது. அவனுடைய காதலி அப்பழுக்கற்றவள். ஆனாலும் அவன் வார்த்தைகளால் காயப்பட்டாள். அவனைப் பிரிந்தும் சென்றாள். பிரபாகரன் ஏன் அவளுக்கு அந்தத் துன்பத்தைக் கொடுத்தான்?

யோசித்துப் பார்க்கும்போது.. சொல் பொறுக்காத அவனுடைய குணம்தான் காரணம் என்று அவனுக்குப் பிடிபட்டது.

இந்த ஒன்றை வைத்தே ஆதிமுதல் இன்று வரை மனிதர்கள்.. மற்றவர்களின் வாழ்வில் விளையாடிப் பார்க்கிறார்கள் என்பதும் அவனுக்குப் புரிந்தது.

எப்படியும் வாழலாம் என்று இருப்பவர்களுக்கு இந்தச் சொல்லால் ஒரு பிரச்னையும் இல்லை. இப்படித்தான் வாழ வேண்டும் என்ற நியதியுடன் வாழ்பவர்களைத்தான். இந்தச் சொல்லானது துரத்தி வந்து பந்தாடுகிறது.

''ஏய்ய்.. நான் உன்னைக் குற்றம் சொல்லணும்னு நினைக்கலைடி. தினகரனிடம் என்னடான்னு கேட்டேன். அவன், மாலினிக்காக காத்திருக்கிறேன்னு என்னிடமே சொல்கிறான். என் நிலைமையையும் கொஞ்சம் நீ யோசித்துப் பார்க்கணும்.. இதுவே ஸ்வேதா எனக்காக காத்திருக்கிறேன்னு உன்னிடம் சொன்னால் உனக்கு ரத்தம் கொதிக்குமா கொதிக்காதா?''



''அவளைக் கொன்றே விடுவேன்..''

''ஆத்திரம் ஆத்திரமாக வருதில்ல.. அதுபோலத்தானே எனக்கும் இருக்கும். உனக்கே தெரியும்.. எனக்கு ஸ்வேதாவைக் கண்டாலே ஆகாதுன்னு. அப்படியிருந்தும் அவளை நீ கொல்வேன்னு சொன்னால் என்ன அர்த்தம்.. என்னிடம் யாரும் உரிமை கொண்டாடினால் நீ சகித்துக் கொள்ள மாட்டாய்னுதானே அர்த்தம்?''

''அதில் தப்பொன்றும் இல்லையே..''

''அதே கோபம்தான் எனக்கும் வந்தது..''

''ஆனால், அந்தக் கோபம் தினகரனின் மேல் வரவில்லை.. என்மீது வந்தது..''

''தப்பு.. தினகரனின் மேல்தான் கோபம் வந்தது. அவனை அதட்டினேன். அவன் சொன்ன செய்தி என்னைக் குழப்பியது..''

''அதுதான்.. பவித்ராவின் காதல் கடிதம்..''

''அதை நீ கொடுத்ததாக அவன் சொன்னான். அவன் பொய் சொல்ல மாட்டான்..''

''அது உண்மைதானே. அதை நான்தானே கொடுத்தேன். நான் கொடுத்ததால் அது நான் எழுதிய கடிதமாக ஆகிவிடுமா?''

''கெட்டிக்காரத்தனமாகப் பேசாதே. இந்த இடத்தில் தவறு உன் மீதுதான் இருக்கு மாலினி. நீ அதை பவித்ராவின் கடிதம்னு சொல்லிக் குடுத்திருக்கணும்..''

''நான்தான் ஸ்வேதாவைப் பார்த்தவுடன் அதை சொல்ல முடியாமல் போச்சுன்னு சொன்னேனே. அதில் கையெழுத்தைப் போடாமல் பவித்ரா எழுதியிருப்பாள்னு நான் கனவா கண்டேன்?''

''அவளிடம் அதைக் கேட்டிருக்க வேண்டாமா?''

''லவ் லெட்டர்.. அவளோட பர்சனல் இஷ்யூ இல் லையா.. அதைப் போய் நான் கேட்கலாமா?''

''உன் டீஸன்ஸியைத் தூக்கி குப்பையில் போடு. இதைச் சொல்லித்தான் பவித்ராவின் காதலையும் என்னிட மிருந்து மறைத்துத் தொலைத்தாய். அவள் தன்னோட பர்சனல் மேட்டரில் உன்னைச் சம்பந்தப்படுத்துகிறோ முன்னு கொஞ்சமாவது நினைத்துப் பார்த்தாளா?''

''அவள் வேறு.. நான் வேறு அத்தான். என்னால் இப்படித்தான் இருக்க முடியும். அவளைப் போல முதுகில் குத்த என்னால் முடியாது..''

''மாலினி.. மாலினி.. உனக்கு எப்படிச் சொல்லிப் புரிய வைக்கிறதுன்னே எனக்குத் தெரியலை. உனக்கும் எனக்குமிடையே ரகசியம் எதுக்குடி?''

''இனி மறைக்கமாட்டேன் அத்தான்..''

''இதுபோதும் எனக்கு தினாவிடம் ரூமுக்குப் போன்னு சொன்னா அவன் லெட்டரைக் கொடுத்தான். அது உன் கையெழுத்தில்லை. அதைச் சொன்னால்.. உனக்கு எப்படித் தெரியும்னு அவன் என்னிடம் கேள்வி கேட்டு வைப்பான். அதனால்தான் உனக்குப் போன் பண்ண வைத்தேன். அந்த ராஸ்கல் என்னடாவென்றால் என் முன்னாலேயே உன்னைக் கண்ணம்மான்னு கொஞ்ச ஆரம்பித்துவிட்டான். எனக்கு உடம்பெல்லாம் மிளகாயை அரைத்துப் பூசியதைப் போல ஆகிவிட்டது...''

''எனக்கும் அதைவிட கொடுமையாக இருந்தது. திடீர்னு போன் பண்ணி கண்ணம்மாங்கிறார்.. அதிர்ச்சி யாகிட்டேன்..''

''அப்பவும் நீ பவித்ராவின் பெயரைச் சொல்லித் தொலைக்கவில்லை..''



''அவளைக் கேட்காமல் எப்படிச் சொல்வது?''

''நீ அவளுக்காகப் பார்த்தாய்.. அவள் உனக்கு கிரீடமா சூட்டினாள்? தினகரனை அனுப்பிவிட்டு உன் னிடம் விவரம் கேட்க போனை எடுத்தால்.. 'அத்தான்'னு அழுதுகிட்டு முன்னால் வந்து நிற்கிறாள். ஒரு நிமிஷம்.. அர்த்தராத்திரி நேரத்தில் மோகினிப் பேய் வந்துருச் சேன்னு பயந்து போயிட்டேண்டி..''

அதைக் கேட்ட மாலினி சிரிக்கவில்லை. அவள் மனம் அன்றைய இரவின் நிகழ்வுகளில் மூழ்கி இருந்தது.

''அவபாட்டுக்கு லட்டு லட்டாய் கேள்விகளை கேட்க ஆரம்பித்துவிட்டாள். கடைசியில் பொறுக்க மாட்டாமல் அடிக்கக் கை ஓங்கினதற்கு அப்புறம்தான் அடங்கினாள்...''

மாலினி உதட்டைக் கடித்து தன் உணர்வுகளை கட்டுப்படுத்திக் கொண்டாள்.

''தினகரன் உன்னிடம் கொஞ்சிய ஆத்திரம் ஒருபுறம்.. பவித்ரா உன்மீது சொன்ன குற்றச்சாட்டுகள் இன்னொரு புறம்னு நான் கொந்தளிச்சுட்டேன் மாலினி.. அதனால் தான் என்னைக் கண்ட்ரோல் பண்ணிக்க முடியாம வாய்க்கு வந்தபடி பேசிட்டேன். ஐ ஆம் ஸோ ஸாரி...''

இந்த வார்த்தைகளுக்கு என்ன பதிலைச் சொல்வது?

மன்னிப்பு கேட்கிறவனிடம்.. அதனால் என்ன பரவா யில்லை என்று சொல்ல அவளுக்கு மனமில்லை. அவன் பேசிய வார்த்தைகளின் தன்மை அப்படிப்பட்டது. அவை மன்னிக்கக்கூடிய வார்த்தைகள் அல்ல..

அதே சமயம்.. அவனிடம் கடுமை காட்டி விலகிச் செல்லவும் அவளால் முடியவில்லை. அவன் அவளுடைய காதலன். அவளுடைய உயிர். அவளுடைய சுவாசம்.

அவளுக்கு அனைத்துமாக ஆகிப் போனவன். அவன் மன்னிப்பென்று அவள் முன் நிற்கும்போது.. அவனை மறுத்து விலக அவளால் எப்படி முடியும்?

மாலினி எதுவும் பேசாமல் அவனது தோளில் முகம் புதைத்தாள். பிரபாகரனுக்கு அவளது மனம் புரிந்தது. அவளுடைய குண இயல்புக்கு அவள் அவனைத் தேடி வந்ததே அவன் மேல் அவள் கொண்டிருக்கும் கரை காணாத காதலினால்தான் என்பதை அவன் உணர்ந்து தான் இருந்தான்.

''இனி இப்படி நடக்காது கண்ணம்மா..'' என்று குற்ற உணர்வுடன் கூறினான்.

மாலினிக்கு மனம் தாங்கவில்லை. அவளுடைய பிரபாகரன் மனம் வருந்துவதா.. அதை அவள் பார்த்துக் கொண்டிருப்பதா?

''அட.. ஹிட்லருக்கு தணிந்து பேசவும் தெரியுமா?'' என்று கலகலவென்று சிரித்தாள் அவள்.

'மன்னித்து விட்டேன்' என்றும் கூறாமல்.. அதே சமயம்.. 'மன்னிக்க மாட்டேன்...' என்றும் முகம் திருப்பாமல்.. அந்தப் பேச்சையே தவிர்த்து பழைய கலகலப்புடன் ஒட்டிக் கொண்ட காதலியின் மேல் அவனுக்கு இன்னும் காதல் கூடியது.

''மாலினி...''

''ம்ம்ம்..''

''இந்த ஹிட்லர் உன்னிடம் மட்டும்தான் தணிந்து போவான்.. இது உனக்குத் தெரியும்தானே?''

அவளுக்கா தெரியாது. சிங்கத்தை தன் சிறு கம்மலில் சிறைபிடித்துக் கொண்ட அந்த வசீகரி.. அவனைப் பார்த்துக் கண்சிமிட்டினாள்.



''ஸோ.. நான் ஹிட்லரிடம் மாட்டிக்கிட்டேன்னு சொல்லுங்க..''

''என்னடி கண்ணடிக்கிற?''

பிரபாகரன் கிளர்ந்து.. அவளது கன்னம் தேட.. அவள் முகம் திருப்பிச் சிரித்தாள்.

''கண்ணடித்தேனா.. எப்போ அத்தான்.. எப்படிக் கண்ணடிக்கிறதுன்னுகூட எனக்குத் தெரியாதே...''

அவள் அப்பாவியாக முகத்தை வைத்துக் கொள்ள.. இப்போது பிரபாகரன் சிரித்தான்.

''ஹிட்லரிடம் மாட்டிக்கிட்டதில் நீ வருத்தப்பட்டதைப் போல எனக்குத் தெரியலையே!''

''இதையெல்லாம் சொல்லிக்கிட்டா இருப்பாங்க?''

''சொல்லாமல் தெரியும்ங்கிறயா?''

''ஆமாம்.. வேற என்ன..''

''சொல்லாமல் தெரிஞ்சுக்கிட்டது.. வேறு விஷயங்களைடி..''

மாலினி கன்னம் சிவந்து.. அவனது கை பிடித்துக் கிள்ளினாள்.

''சரக்குன்னா கையிலிருந்து கால் கிலோ சதையை எடுத்து விடுவதுன்னு ஒரு முடிவோட இருக்க போல..''

''ஆமாம்.. இப்ப என்னாங்கறீங்க அதுக்கு?''

மாலினி நழுவி.. கட்டிலை விட்டு கீழே இறங்க முயன்றாள். பிரபாகரன் கை பிடித்து அவளை நிறுத்தினான்.

''பேசியது போதும் அத்தான்.. இது ஹாஸ்பிடல் ரூம்..''

''நம் வீடு அரண்மனைதாண்டி.. ஆனால் அங்கே இப்படி தனியாய் ஒரு ரூமுக்குள்ள உட்கார்ந்து நாம் பேச முடியாது. அதுக்குத்தான் இந்த ஹாஸ்பிடலில் வந்து படுத்தேன்..''

''கெட்டிக்காரர்தான்.. இதையெல்லாம் திட்டம் போட்டுச் செய்யறதில் கில்லாடியாச்சே நீங்க...''

''அதனால்தான் சொல்கிறேன்.. மீதியையும் கேட்டு விட்டுப் போ..''

''என்ன சொல்லப் போகுறீங்க?''

''இப்படியே நீ வீட்டுக்கு வந்துவிடு மாலினி..''

''வந்து?''

''உன் ரூமில் தங்கிக் கொள்..''

''தங்கி?''

''என்னடி கேள்வி மேல் கேள்வியா கேட்கிற...''

''நான் வேலையை விட்டு விட்டேன் அத்தான்.. மறந்துட்டீங்களா?''

''உன்னை யாரு வேலைக்குப் போகச் சொன்னது?''

''உங்க வீட்டில் தங்க எனக்குக் காரணம் வேண் டாமா?''

''நான் காரணத்தைச் சொல்லவா?''

''சொல்லுங்க..''

''என் பெண்டாட்டி என்னுடன்தான் நிழலாக இருப் பாள்..''

''கேட்க நன்றாகத்தான் இருக்கு..''

''பார்க்கவும் நன்றாகத்தான் இருக்கும்..''

''நடக்கிறதைப் பேசுங்க அத்தான்..''



''நடக்கிறதுதானே... பேசிட்டால் போச்சு. உனக்கும் எனக்கும் கல்யாணம் நடக்கும்.. அது வரை நீ நம் வீட்டில் உன் ரூமில் இரு... நம்ம கல்யாணத்துக்கு பின்னால்.. நம் ரூமுக்கு வந்துவிடு..''

''நீங்க ரூமிலேயே இருங்க...''

மாலினி சிரித்தபடியே கிளம்ப முயன்றாள். பிரபா கரன் தீவிரமான முகபாவத்துடன் அவளைத் தடுத்து நிறுத்தினான்.

''இப்ப என்னதான் சொல்ல வரீங்க..''

''நீ போகக்கூடாது..''

''அத்தான்... முதலில் நான் சென்னைக்குப் போனது வேறு... இப்போது போகப் போவது வேறு.. புரிந்துக்கங்க...''

''இரண்டு தடவையும் பிரிந்துதான் ஓடுகிறாய்.. இதிலென்னடி பெரிய ஆறு வித்தியாசம் இருக்கு?''

''முதலில் போனதுதான் பிரிந்து போனது. இந்தத் தடவை போவது.. நீங்க பெண் கேட்டு வருவதற்காக போவது. நம் கல்யாணம் வரைக்கும் நான் சென்னையில் தான் இருந்தாகணும்... புரிஞ்சுக்கங்க...''

அவர்கள் ஹாஸ்பிடல் அறையை விட்டு இயல்பாக பேசிச் சிரித்தபடி வெளியேறினார்கள்.

''சசி... அங்கே பார்..'' என்றான் காரில் காத்துக் கொண்டிருந்த கருணாகரன்.

''ஹப்பா.. ஒற்றுமையாக ஆகிட்டாங்க.. இப்பத்தான் நிம்மதியாச்சு..'' என்றாள் சசிரேகா.

''அண்ணன்கூட சோர்ந்து போவாருன்னு நான் இப்பத்தான் பார்க்கிறேன். அந்த அளவுக்கு அண்ணி அவரைப் பாதிச்சிருக்காங்க..'' கருணாகரன் கார் கதவைத் திறந்தபடி கூறினான்.

''அண்ணியா?'' சசிரேகா வியப்புடன் கேட்டாள்.

''அண்ணிதான்..''

''யாரைச் சொல்கிறீங்க.. மாலினியையா?''

''வேறு யாரைச் சொல்வாங்க.. மக்கு...''

''அவளை.. அவங்க இவங்கன்னு வேற சொல்கி றீங்க..''

''அண்ணனின் மனைவியை வேற எப்படிக் கூப்பிடு வாங்க?''

''அவ என் சித்தப்பாவின் மகள்.. எனக்குச் சம வயது..''

''ஸோ வாட்... யாராக இருந்தாலும் என் அண்ண னுக்கு மனைவியானால் எங்களுக்கு அண்ணிதான். நாங்க 'அவங்க.. இவங்க..'ன்னுதான் பேசுவோம்..''

''எப்படியோ கூப்பிட்டுக்கங்க.. என்னை மட்டும்.. 'வாங்கக்கா.. போங்கக்கா'ன்னு கூப்பிட வைச்சுராதீங்க. மாலினி என்னை அடித்து விடுவாள்..''

சசிரேகா சொல்லிக் கொண்டிருக்கும்போதே பிரபாகரனும் மாலினியும் சமீபித்து விட்டனர்.

''யாரை சசி அக்கா என்கிறாய்?''

''வேறு யாரை அப்படிச் சொல்வேன். எல்லாம் உன்னைத்தான் சொல்லிக்கிட்டு இருக்கேன்..''

''அப்படிக் கூப்பிட்டு நீ என்னைவிட இளம் வயதாகிக் கலாமுன்னு பார்க்கிறயா?''

''கேட்டீங்களா அத்தான்.. இது எனக்குத் தேவை தானா?''

''ஓ.. இதை உன் வீட்டுக்காரர் சொல்லிக் கொடுத் தாரா?''



''ஆமாமாம்.. நீ பெரியத்தானை கணக்கு பண்ணிட் டல்ல.. அதனால் இவருக்கு நீ அண்ணியாகி விட்டாயாம்..''

''யாரு கணக்கைப் பற்றிப் பேசுவது? என் பெரியப்பா மகள் சசிரேகாவா? அன்னிக்கு ஒரு நாள் நான் கணக்கைப் பற்றிப் பேசியதும்.. கன்யாகுமரிக் கடலில் விழப்போன மாதர் குல மாணிக்கமா பேசுவது? என் காதுகள் என்னை ஏமாற்றுகின்றனவா?''

மாலினி காதுகளுக்கு மேல் கையைக் குவித்துவைத்த வண்ணம் கேட்கவும், சசிரேகாவுக்கு வெட்கமாகிவிட்டது. அவள் மரியாதையுடன் பிரபாகரனை பார்த்த வண்ணம் அமைதியாகி விட்டாள்.

''ஏ.. வாலு... இப்பத்தான் சசி இயல்பாக பேசி சிரிக்கிறாள். உனக்கு அது பொறுக்கலையா?'' பிரபாகரன் சிரித்தவாறு மாலினிக்கு கார் கதவை திறந்துவிட்டான்.

110

*சொட்டும் மழைத்துளி போல......*
*என் நெஞ்சில் ஒட்டும் உன் நினைவை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

கருணாகரன் காரை ஓட்ட.. பிரபாகரன் லேசாக திரும்பிய வாக்கில் அமர்ந்து பின்ஸீட்டில் அமர்ந்திருந்த மாலினியிடமும் சசிரேகாவிடமும் பேசிக் கொண்டிருந் தான்.

''கணித மேதை ராமானுஜம்கூட கணக்கைப் பற்றி இவ்வளவு ஆராய்ச்சி பண்ணியிருக்க மாட்டார்.. உன்

சித்தப்பா மகள் அவரையும் மிஞ்சி விட்டாள் இல்லையா சசி?''

சசிரேகா புன்னகைத்தாள். மாலினி அவளைப் பார்த்த படி..

''உங்க முன்னால் இவ என்னிக்கு வாயைத் திறந்து பேசினாள்?'' என்று பிரபாகரனைப் பார்த்துக் கேட்டாள்.

''அதுக்கு ஏன் என்னை முறைக்கிற?''

''நீங்க என் பெரியப்பா மகளை அப்படி அரட்டி வச்சிருக்கீங்க..''

''நான் பூச்சாண்டி பாரு.. அரட்டி வச்சிருக்கேன்..''

''ஆக்சுவலா நான் உங்களைப் பார்க்கிறதுக்கு முன் னால உங்களைப் பத்தி அப்படித்தான் நினைச்சுக்கிட்டு இருந்தேன்..''

''ஹிட்லருன்னு இல்ல நினைச்சே..''

''ஹிட்லர் பூச்சாண்டிதானே.. அந்தப் பஞ்சாயத்தை விடுங்க. இப்ப இந்தப் பஞ்சாயத்துக்கு வாங்க..''

''ஊம்.. என்னைச் சின்ன கவுண்டராக்கிட்ட..''

''சும்மாவா கோட்டையூர் ஜமீன்தாருன்னு சொல்லிக் கிறது. அப்பப்ப இப்படி நாட்டாமை வேலையெல்லாம் பார்க்க வேண்டாமா?''

''உன்கிட்ட நாட்டாமை வேலை பார்த்தாலும்...''

''ஏன்.. எனக்கென்னவாம்..''

''நான் தீர்ப்புச் சொன்னா.. மகாராசி.. உடனே கேட்டுவிட்டுத்தான் மறு வேலை பார்ப்பே...''

''கேட்காமல் என்ன செய்வேனாம்?''

''நாட்டாமை.. தீர்ப்பை மாற்றிச் சொல்லுன்னு சவுண்டு கொடுப்ப..''



இதைக் கேட்ட சசிரேகா அடக்க முடியாமல் சிரித்து விட.. கருணாகரன் காரை ஓட்டியபடி பின்பக்கம் திரும்பி மாலினியைப் பார்த்து புன்னகைத்தான்.

''நீங்களும் உங்க அண்ணன்கூட சேர்ந்துட்டீங்களா அத்தான்?'' மனத்தாங்கலுடன் மாலினி வினவினாள்.

''ஆமாங்க அண்ணி..'' என்றான் கருணாகரன்.

மாலினிக்கு தூக்குவாரிப் போட்டது.

''என்னையா சொன்னீங்க?'' என்று சந்தேகத்துடன் கேட்டாள்.

''உங்களைத்தான் அண்ணி..'' என்று தெளிவாக கூறினான் கருணாகரன்.

''ஐயையோ.. நிஜமாகவே நீங்க என்னை வாங்க அண்ணி.. போங்கண்ணின்னு சொல்கிறீங்களா.. நான் விளையாட்டுக்கு இல்லை பஞ்சாயத்து வைத்தேன்..'' மாலினி அலறினாள்.

''ஏன்.. இப்ப அவன் கூப்பிட்டதில் என்ன தப்பு இருக்கு?'' பிரபாகரன் நிதானமாக வினவினான்.

''என்ன.. தப்பு இருக்கா.. இவர் யாரு தெரியுமில்ல..''

''இது என்ன கேள்வி.. என் தம்பி..''

''என் பெரியப்பா மகளின் ஹஸ்பெண்ட்..''

''அதுக்கு முன்னாலேயே இவன் என் தம்பி..''

''விளையாடாதீங்க.. சசியின் ஹஸ்பெண்ட் எனக்கு அத்தான்.. அவர் போய் என்னை வாங்க.. போங்கன்னு சொல்வதா?''

''இதோ பார்.. என்னைக் கல்யாணம் பண்ணுவதற்கு முன்னால் நீ அவனுக்கு மைத்துனி.. 'வா.. போ'ன்னு பெயர் சொல்லிக் கூப்பிட்டிருப்பான். என்னைக் கல்யாணம்

பண்ணிக்கொண்ட பின்னால் நீ அவனுக்கு அண்ணி. வாங்க.. போங்கன்னுதான் கூப்பிடுவான்..''

கருணாகரன் தமையன் பேசுவதை ஆமோதிப்பது போலத் தலையை ஆட்டினான். மாலினி தலையில் கை வைத்துக் கொண்டாள்.

''ஜாடிக்கு ஏத்த மூடி...'' என்று சசிரேகாவிடம் சொன்னாள்.

''அப்படின்னா?'' சசிரேகா ஆவலுடன் அர்த்தம் கேட்டாள்.

''அண்ணனுக்கு ஏத்த தம்பின்னு அர்த்தம்டி...''

''பார்த்தாயா.. அவங்க இரண்டு பேரும் எவ்வளவு ஒற்றுமையாய் இருக்காங்க...''

''இதை எதுக்கு இப்ப என்னிடம் சொல்கிற?''

''நாமளும் அவங்களைப் போல இருக்க வேண்டாமா?''

''இந்த ஈயடிச்சான் காபியெல்லாம் எனக்கு வேலைக்கு ஆகாது..''

''அதுதானே பார்த்தேன்..''

வீடு நெருங்கவும்.. மாலினி பதற்றத்துடன் நகத்தை கடிக்க ஆரம்பித்தாள்.

''நகத்தை எச்சில் பண்ணாதே..'' பிரபாகரன் அதட்டினான்.

மாலினி அவசரமாக நகம் கடிப்பதை நிறுத்தினாள்.

''இப்ப எதுக்கு இவ்வளவு டென்ஷன் ஆகிற?''

''அத்தை கேட்டால் என்ன பதிலைச் சொல்வது?''

''எதைக் கேட்பாங்கன்னு நினைக்கிற?''



''என் வேலையை ரிஸைன் பண்ணிட்டு சொல்லாமல் கொள்ளாமல் சென்னைக்கு ஓடினேன்னு கேட்டால் என்ன செய்வது?''

''கேட்டால் பதிலைச் சொல்லு..''

''ஐயையோ..''

''இவ்வளவு பயமிருக்கிறவள் சொல்லாமல் கொள்ளாமல் கம்பியை நீட்டியிருக்கக் கூடாது. உன் அத்தையிடம் இதைச் சொல்லு..''

''எதைச் சொல்ல?''

''நல்லவர்க்கு அழகு சொல்லாமல் கம்பியை நீட்டுவது.. நான் நல்லவள் அத்தை.. அதனால்தான் சொல்லாம கம்பியை நீட்டிட்டேன்னு சொல்லு..''

''அத்தான்..'' மாலினி அழமாட்டாத குறையாக கெஞ்ச ஆரம்பித்தாள்.

''போகுது போ.. இப்ப சசியும் கருணாவும் உன்னிடம் ஏதாவது கேட்டாங்களா.. அதுபோல அம்மாவும் எதையும் கேட்க மாட்டாங்க..''

''சசி கேட்டாள்..''

''உடனே நீ பதிலைச் சொல்லிட்டுத்தான் மறுவேலை பார்த்தியாக்கும்..''

''ஹி.. ஹி.. ஹி..''

''போதும்.. அசடு வழியாதே.. அம்மா எதுவும் கேட்க மாட்டாங்க. கேட்டால் நான் பார்த்துக் கொள்கிறேன்..''

''நான் இன்றைக்கே சென்னைக்குத் திரும்ப வேண்டும்..''

பிரபாகரன் திரும்பி மாலினியை முறைத்தான். அவள் அடங்கிப் போனாள்.

''நீ சென்னைக்குத் தனியாகப் போக முடியுமா? துணைக்கு சசிரேகாவும் வர வேண்டாமா?

''அவள் எதுக்கு?''

''அவள்தானே உன்னைக் கூப்பிட்டுக் கொண்டு வந்தாள்..''

''நான் தனியாக பஸ்ஸில் போய்க் கொள்வேன் அத்தான்..''

திரும்பவும் பிரபாகரன் முறைக்க ஆரம்பிக்க...

''நான் என்ன சொல்லிட்டேன்னு இப்படி அனல் பார்வை பார்க்கறீங்க?'' என்று சந்தேகம் கேட்டாள் மாலினி.

''பிரபாகரனின் பெண்டாட்டி.. மார்த்தாண்டத்தி லிருந்து சென்னைக்கு தனியாக பஸ்ஸில் போவதா?''

''இது வேற இருக்கா?''

''இனி கடைசிவரை இப்படித்தான் இருக்கும்..''

''இப்ப என்னை என்னதான் செய்யணும்னு சொல்கி றீங்க?''

''சசியும் கருணாவும் இன்றைக்கு ரெஸ்ட் எடுத்து விட்டு நாளைக்கு காலையில் உன்னைக் கூப்பிட்டுக் கொண்டு சென்னைக்கு கிளம்புவாங்க..''

''அப்பாடி...'' நிம்மதிப் பெருமூச்சு விட்ட மாலினி.. பிரபாகரனின் விசித்திரமான பார்வையில் எதையோ உணர்ந்தவளாக..

''என்ன ஆச்சு?'' என்று வினவினாள்..

''சென்னைக்குப் போவதில் உனக்கு அவ்வளவு நிம்மதியா?'' அவன் ஒரு மாதிரியான குரலில் வினவினான்.



''பாருடி சசி... உன் பெரியத்தான் பேசுவதை. சென்னையில் அப்பாவும் அம்மாவும் என்னைப் பற்றிக் கவலைப்பட மாட்டாங்களா.. இதுக்கு முன்னால் எனக்கு இங்கே வேலையிருந்தது.. இப்ப வேலையை ரிஸைன் பண்ணிட்டேன். எந்தக் காரணத்தைச் சொல்லிக்கிட்டு நான் இங்கே தங்க முடியும்?'' மனத்தாங்கலுடன் சசிரேகா விடம் மாலினி நியாயம் கேட்டாள்.

''இவள் சொல்வதும் சரிதானே பெரியத்தான்..'' சசிரேகா, மாலினிக்காக பரிந்து பேசினாள்.

பிரபாகரன் பதில் சொல்லாமல் நேராக அமர்ந்து கொண்டான். வீட்டுக்குள் கார் நுழைந்தது. மாலினி அந்த வீட்டையும் தோட்டத்தையும் ஆவலுடன் பார்த்தாள்.

இனி பார்க்கவே பார்க்க முடியாது என்று நினைத்த நினைவுச் சின்னங்களை மீண்டும் பார்த்தபோது அவளுக்கு கண் கலங்கி விட்டது.

''என்னடி..'' என்றாள் சசிரேகா.

''இனி இங்கே திரும்பி வரவே மாட்டேன்னு நினைத் திருந்தேன் சசி..'' மாலினியின் குரல் கம்மியது.

பிரபாகரனின் உடல் விறைப்பானதை கருணாகரன் கவலையுடன் உணர்ந்தான். மாலினி காரை விட்டு இறங் கியதும் செந்தாமரை அருகே ஓடி வந்தாள்.

''இத்தனை நாளா என் கண்ணுக்குள்ளேயே இருந் தீங்கம்மா..''

''இவ்வளவு பெரிய உருவத்தை உன் கண்ணுக்குள் வச்சிருந்தியா.. எப்படி செந்தாமரை... உனக்கு கண் வலிக் கலையா?''

''ஹா.. ஹா.. சோக்கும்மா.. சோக்கு..''

செந்தாமரை சிரிக்க ஆரம்பிக்க..

''ஆரம்பிச்சுட்டியா?'' என்றாள் சசிரேகா.

''நான் எங்கேடி ஆரம்பிச்சேன். அவளா ஆரம்பிச்சு வைக்கிறா..'' என்றாள் மாலினி.

''என்னவோ போ.. இவ உன்னைக் காணாம ரொம்பத் தான் ஏங்கிப் போயிருந்தா.. நீ வந்துட்ட இல்ல. இனிமே குட்டி போட்ட பூனையைப் போல உன்னையே சுற்றிச் சுற்றி வரப்போகிறா பாரேன்...''

சசிரேகா சொல்லியதற்கு ஏற்ப.. செந்தாமரை, மாலினியின் பின்னாலேயே செல்லப் பிராணியைப் போல தொடர்ந்தாள்.

ஹாலின் சோபாவில் அமர்ந்திருந்த நர்மதாவைக் கண்டதும் மாலினிக்கு என்னவோ போல் ஆகிவிட்டது.

''வாம்மா..'' என்று வரவேற்றாள் நர்மதா.

மாலினி பதில் சொல்லாமல் அவளருகே சென்று அவள் பாதம் தொட்டு வணங்கி நிமிர்ந்தாள்.

நர்மதாவின் முகம் மென்மையானது.

''நல்லாயிரும்மா..'' என்றாள் கனிவாக.

''அத்தை.. நான் வந்து.. என் வேலையை.. வந்து..'' மாலினி திணறினாள்.

''வேண்டாம் மாலினி.. விட்டுவிடு..'' என்றாள் நர்மதா.

''அத்தை...''

''நீ புத்திசாலி.. எதையும் காரணமில்லாமல் செய்ய மாட்ட. அதைப் போல என் மகன் தீவிரவாதி. அவனுடையதை விட்டுக் கொடுக்கமாட்டான். எது நடந்திருந்தாலும் அது உங்களுடையது. நான் தலையிடக்கூடாது. ஆனால், ஒன்று.. நீ இந்த வீட்டுக்குள் இருந்து கொண்டே போராடியிருக்கலாம். ஏன் சென்னைக்குப் போனாய்?''



''வேலை செய்ய எனக்கு சக்தியில்லை அத்தை.. வேலையை விட்டு விட்டு என்ன காரணத்தைச் சொல்லி நான் இந்த வீட்டில் தங்க முடியும்?''

''இனி காரணம் தேடும் நிலையை என் மருமகளுக்கு நான் வைக்க மாட்டேன்..''

மாலினி, காயத்ரியைப் பற்றி விசாரித்தாள். நர்மதா கல்யாண வீடியோவை போட்டுக் காட்ட.. ஆர்வமாக சசிரேகாவுடன் பேசியபடி அதைப் பார்த்தாள். கல்யாண ஆல்பத்தை ரசித்தாள். பொன்னிக்கும் செந்தாமரைக்கும் ஜோக்குகளைச் சொன்னாள். மதிய உணவிற்கு பிறகு அவளது அறையில் நன்றாகத் தூங்கி எழுந்தாள். மாலையில் குளித்து.. உடைமாற்றி.. தோட்டத்தில் நடந்தாள். நீச்சல்குளத்தின் அருகே இருந்த மரப்பெஞ்சில் அமர்ந்து பழைய நினைவுகளை அசை போட ஆரம்பித்தாள்.

''எப்போ வந்தீங்க அண்ணி?'' என்ற குரலைக் கேட்டதும் திடுக்கிட்டு நிமிர்ந்தாள்..

எதிரே தினகரன் நின்றுகொண்டிருந்தான். மாலினி பதறிபோய் எழுந்து கொள்ள முயன்றாள்.

'இத்தனை நாள் கழித்து இப்போதுதான் என் பிரபாவுடன் சேர்ந்திருக்கிறேன். மறுபடியும் இவனா?

அவள் விழிகளில் அப்பட்டமான பயம் தெரிந்ததை தினகரன் வருத்தத்துடன் கவனித்தான்.

''என்ன அண்ணி எழுந்திருக்கறீங்க. என்னைப் பார்த்தால் பயமாய் இருக்கா.. நான் அந்த அளவுக்கு உங்க வாழ்க்கையைப் பாதிச்சுட்டேனா?''

மாலினி நிதானித்தாள்.. தினகரன் 'அண்ணி..' என்று அழைத்து 'வாங்க... போங்க..' என்று மரியாதையுடன் பேசுவது அப்போதுதான் அவளுடைய புத்திக்கு உறைத்தது.

'உனக்கு நானிருக்கிறேன் கண்ணம்மா..' என்று பிதற்றியவனா இவன். மாலினி ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்தாள்.

'நான் காண்பது கனவா.. இல்லை நனவா.. என் கண்ணெதிரே நிற்பது மன்மத ராசா தினகரனேதானா?'

''என்னண்ணி அப்படிப் பார்க்கறீங்க..'' தினகரன் இதமான குரலில் வினவி வேறு வைத்தான்..

''ஒன்.. ஒன்று.. ஒன்றுமில்லை..'' மாலினி வார்த்தைகளால் தந்தியடித்தாள்.

''உட்காருங்க அண்ணி...'' தினகரன் மரப்பெஞ்சில் அமர்ந்து கொண்டான்.

''இருக்கட்டும்...''

'இருந்திருந்து இவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு உரையாடுவதா?' என்ற நினைவில் மறுத்தாள் மாலினி.

''என் கூட உட்கார்ந்து பேசக்கூட நீங்க யோசிக்கிற அளவுக்கு நான் உங்களைக் கொடுமைப் படுத்திட்டேன். எனக்கு மன்னிப்பே கிடையாது அண்ணி...'' தினகரன் குழந்தையாக கண்கலங்கினான்.

111

*முத்திரை பதித்து நீ விலகிய போது...*
*நித்திரை துறந்து.. நான் சிலையாகிப் போனதையே*
*என்னவென்று நான் சொல்ல..?*

தினகரன்... நர்மதாவின் செல்லப்பிள்ளை.. பிரபாகரனுக்கு பிரியமான தம்பி.. தீராத விளையாட்டுப் பிள்ளையாக



துறுதுறுப்பாக வளைய வந்தவன். அழகான பெண்களைக் கண்டால் அலைபாயும் மனத்தையுடையவன். அதை மறைக்காமல் பார்வையில் வெளிப்படுத்தி விடுபவன்.

அப்படிப்பட்ட தினகரன், மாலினியிடம் கண்கலங்கினான்.

''என்னை மன்னிக்க மாட்டீங்களா அண்ணி?'' என்று மன்னிப்பை வேண்டினான்.

மாலினி மனம் கசிந்துவிட்டாள். அவன் அருகே பெஞ்சின் ஓரமாக இடைவெளிவிட்டுத் தள்ளி அமர்ந்தாள்.

''எனக்குத் தெரியாது அண்ணி.. உங்க மனசுக்குள்ள பெரியண்ணா இருப்பாருன்னு நான் நினைத்துக்கூடப் பார்க்கலை..'' தினகரனின் குரலில் தவிப்பு தெரிந்தது.

''போனதைப் பேச வேண்டாம் தினகரன். விட்டு விடுங்க..'' மாலினி ஆறுதலாகப் பேசினாள்.

''எப்படி அண்ணி விட முடியும். அன்றைக்கு ராத்திரி அண்ணனின் எதிரேயே நான் உங்களிடம் என்னவெல்லாம் பேசிவிட்டேன்.. அண்ணன் ஒரு வார்த்தை.. ஒரேயொரு வார்த்தைகூட என் மனம் புண்படப் பேசாமல் பல்லைக் கடித்துக் கொண்டு நின்றார். நானெல்லாம் ஒரு மனுஷனா அண்ணி?''

''சேச்சே.. பெரிய வார்த்தைகளையெல்லாம் பேச வேண்டாம் தினகரன். நீங்க என்ன தெரிந்தா செய்தீங்க?''

மாலினி சமாதானப்படுத்தும் விதத்தில் பேசினாள்.. ஆனால், சமாதானமாக மாட்டேன் என்ற ரீதியில் தலையை ஆட்டி தினகரன் அதை மறுத்தான்.

''இல்லை அண்ணி.. நீங்க என்னிடம் அதிகமாக பேச மாட்டீங்க. விலகி விலகிப் போவீங்க. அதுவே எனக்கு உங்க மேல் இருந்த ஆர்வத்தை அதிகமாக்கிருச்சு...''

'இது என்னடா வம்பா போச்சு...' மாலினி தர்ம சங்கடத்துடன் மௌனமானாள்.

''எங்க பெரியண்ணனை மனதில் நீங்க வைத்து இருப்பது தெரிந்திருந்தால் நான் உங்கள் பாதம் தொட்டு வணங்கி விட்டு விலகிப் போயிருப்பேன் அண்ணி..''

தினகரனின் வார்த்தைகள் இப்போது மாலினியை குற்ற உணர்வில் ஆழ்த்தியது.

'இதைத்தானே பவித்ராவும் சொன்னாள்.. ஒருவேளை நான் இவனிடம் உண்மையைச் சொல்லியிருக்க வேண் டுமோ..'

இப்போது மனம் தவிப்பது மாலினியின் முறையாகிப் போனது.

''தப்பெல்லாம் என் மேல்தான் தினகரன். நான் உங்களிடம் உண்மையைச் சொல்லியிருக்க வேண்டும். அப்படிச் சொல்லியிருந்தால்.. நீங்களும் விலகிப் போயிருப் பீங்க. எல்லோருக்கும் இத்தனை மனவருத்தம் வந்திருக் காது...''

''நீங்க என்ன செய்வீங்க அண்ணி.. அண்ணனைக் காதலிப்பதை உங்கள் வாயால் என்னிடம் சொல்ல முடி யாமல் போனதுக்கு காரணம் இல்லாமல் இருக்காது...''

''ம்ம்ம்.. உங்க பெரியண்ணன்.. எல்லோருக்கும் முன்னுதாரணமாக இருப்பவர். காயத்ரியின் கல்யாண சமயத்தில்தான்.. நாங்க எங்க மனதிலிருப்பதை ஒருவரிடம் ஒருவர் சொல்லிக் கொண்டோம். அந்தச் சமயத்தில் அதை வெளியே சொல்வது காயத்ரியின் கல்யாணத்தைப் பாதிக் கும் என்ற நினைவுதான் எனக்கு..''

''நினைத்தேன் அண்ணி.. நீங்கள் இப்படித்தான் எதையாவது யோசித்திருப்பீங்கன்னு. எங்க வீட்டுக்கு



மருமகளாக வருவதற்கு முன்னாலேயே நீங்க எங்க வீட்டைப் பற்றி இவ்வளவு யோசிச்சிருக்கீங்க. ஆனா நான்.. அண்ணியாக வரப் போகிறவங்களிடம் அதிகப்படியா பேசிவிட்டேன்..''

''நீங்க இவ்வளவு தூரத்திற்கு வருத்தப்பட்டால்.. உங்க பெரியண்ணனும் வருத்தப்படுவார். வேண்டாம் தினகரன்.. நடந்ததை மறந்துவிடுங்க. நான் என்றைக்குமே உங்களை என் கூடப் பிறந்த பிறப்பாகத்தான் நினைக் கிறேன்..''

''நான் உங்களை என் அம்மாவாகவே நினைக் கிறேன்..''

ஆயிரம் முறை மன்னிப்புக் கேட்டுவிட்டு தினகரன் எழுந்து போய்விட்டான்.

மாலினி திரும்பி அந்த மாளிகை போன்ற பிரமாண் டமான வீட்டைப் பார்த்தாள்.

அந்த வீட்டைப் போலவே அதில் இருப்பவர்களின் மனதும் பெரியது விசாலமானது. பரந்த விரிந்தது என்று நினைத்துக் கொண்டவளின் மனம்.. சொல்லத் தெரியாத ஒரு நெகிழ்ச்சியில் அமிழ்ந்திருந்தது.

முதல் நாள் வரை அவள் பின்னால் சுற்றியவன்.. அவள் மனதில் வேறு ஒருவனின் நினைவும் காதலும் இருப்பதைத் தெரிந்ததும் பின் வாங்குகிறான்.

அவனது அண்ணன்தான் அந்தக் காதலன் என்று தெரிந்ததும் அலறி அடித்துக் கொண்டு அவளது பாதம் தொட்டு மன்னிப்பை வேண்டுகிறான்.

இப்படிப்பட்ட மனிதர்களின் மத்தியில் வாழ்வதல் லவோ வாழ்க்கை.

இவர்கள் யார்.. மாலினி யார்? புகழ்பெற்ற கோட்டையூர் ஜமீன் வம்சத்தைச் சேர்ந்தவர்கள். ஒரு சாதாரண நடுத்தரக் குடும்பத்தில் பிறந்த மாலினியிடம் பாசத்தோடும் பயபக்தியோடும் பேசுகிறார்கள். சுற்றியுள்ள அனைத்துக் கோடீஸ்வரக் குடும்பங்களும் அந்தக் குடும்பத்தில் பெண் கொடுத்து.. பெண் எடுப்பதை மிகப் பெரிய வரமாக நினைத்து ஏங்கிக் கொண்டிருக்கையில்.. அவர்கள் அந்த மணமாலையை மனப்பூர்வமாக மாலினியின் கழுத்தில் சூட்டுகிறார்கள்.

இதெல்லாம் யாரால் நடந்தது?

பிரபாகரன் என்னும் இரும்பு மனிதனால் நடந்தது.

மாலினியின் மனம் தளும்பியது.. அவள் வாய் விட்டு பாட நினைத்தாள்..

*''அந்த வானத்தைப் போல..*
*மனம் படைத்த மன்னவனே...*
*பனித்துளியைப் போல...*
*குணம் படைத்த தென்னவனே...*
*மஞ்சளிலே... ஒரு நூலெடுத்து...*
*அந்த விண்ணுக்கும்.. மண்ணுக்கும்*
*சம்பந்தம் உண்டுன்னு...*
*சொன்னது யாரு...?*
*அது மன்னவன் தேரு....''*

மாலினி மெல்லிய குரலில் கண்மூடிப் பாடிக் கொண்டிருந்தபோது.. அவள் தோளில் கரம் விழுந்தது. கண் திறவாமலே அது யார் என்பதை உணர்ந்தவள்.. அறியாதவள் போல வினவினாள்.

''யாரு?''

''உன் மன்னவன்..''



மாலினி கண் விழிக்காமலே நகைத்தாள்.. அவனது தோள் சாய்ந்தாள்.

''நான் விண்... நீ மண்ணா?''

''ஆமாம்..''

''நீ இந்த விண்ணிலிருக்கும் தேவதைடி..''

மாலினி அதைக் கேட்டதும் கண் விழித்து.. அவனைக் காதலோடு பார்த்தாள்.

''என்னை தேவதையாக்கியது நீங்கள்தான்..''

''என்னைக் காதலனாக்கியது நீதான். அப்பா.. நான் கொஞ்சம்கூட நினைச்சுப் பார்த்ததில்லைடி..''

''எதை?''

''இப்படி சென்னையிலிருந்து ஒரு புயல் வந்து மார்த்தாண்டத்தில் மையம் கொண்டு.. என்னைச் சிக்க வைத்து திணறடிக்கும்னு..''

''நான் புயலா?''

கேட்டவள் தென்றல் என்பதை உணர்வுபூர்வமாக உணர்ந்திருந்த பிரபாகரன் மனம்விட்டுச் சிரித்தான். மையலுடன் அவளை இறுக்கிக் கொண்டான்.

இருள் போர்வை அவர்களைச் சுற்றி கவிழ்ந்திருக்க.. அவர்கள் வழக்கமாக பேசிக்கொள்ளும் ரகசிய பாஷைகளை பேசிச் சிரித்துக் கொண்டார்கள்.

''ஆமாம்.. காரில் வரும்போது ஏன் அவ்வளவு கோபப்பட்டீங்க..''

''உன்னைத் திரும்பவும் என் வாழ்க்கைக்குள் இழுப்பதற்குள் எனக்கு மூச்சு முட்டிவிட்டது. ஒருவழியாய் உன்னை என்னிடம் இழுத்து வந்துவிட்டேன்னு நினைத்து நான் நிம்மதிப் பெருமூச்சு விட்டால்.. நீ திரும்பவும்

சென்னைக்கு ஓடுவதை நிம்மதியாக நினைத்தால் எனக்கு எப்படியிருக்கும்.. அதில் 'அப்பாடி'ன்னு நிம்மதிப் பெரு மூச்சை வேற விடற..''

''த்சு.. காலா காலத்தில் என் கழுத்தில் மூன்று முடிச்சைப் போடுகிற வழியைப் பாருங்க. எனக்குத் தாங்கலை..''

''ஏய்ய்.. மாலினி.. உனக்குமா?''

பிரபாகரன் தாபத்துடன் அவளை நெருங்க.. மாலினி அவசரமாக தள்ளி அமர்ந்தாள்.

''பொறுங்க.. பொறுங்க.. இப்ப எதுக்கு இந்தப் பாய்ச்சல்?''

''நீதானேடி சொன்ன?''

''என்னன்னு சொன்னேன்?''

''என்னைப் போல உனக்கும் தாங்கலைன்னு...''

மாலினிக்கு வெட்கமாகி விட்டது. அவள் தாள முடியாத நாணத்துடன் பிரபாகரனின் தோள்பட்டையைக் கிள்ளினாள்.

''ஆரம்பிச்சுட்டியா.. இப்ப எதுக்கு கிள்ளறே...''

''வலிக்குதா?''

''நீ கிள்ளினால் எல்லாம் வலிக்குமா? எறும்பு கடிச்சதைப் போல இருக்கு.. நீதானேடி.. எனக்குத் தாங்க லைன்னு இப்பச் சொன்ன?''

''ராமா.. இதையே எத்தனை தடவைதான் சொல் வீங்க?''

''இதுக்கெல்லாம் கிருஷ்ணான்னு சொல்லணும்..''

''ஏன்.. இரண்டும் பெருமாளின் பெயர்தானே...''



''இருந்தாலும்.. காதல்னு வந்துட்டா.. கிருஷ்ணன் தான் சூப்பர்மேன்..''

''இதில ஆராய்ச்சி பண்ணவிட்டா பிஹெச்.டி. வாங்கிட்டுத்தான் வேற வேலை பார்ப்பீங்க. நான் தாங்க லைன்னு அதைச் சொல்லலை..''

''வேற எதைச் சொன்னாய்?''

''அத்தான்.. இந்தக் கல்யாணம்.. தாலி.. சடங்கு.. சம்பிரதாயமெல்லாம் இந்த ஊருக்காக இனி நடக்க வேண டியது. என்றைக்கு நீங்க.. அருவிக்கரையில் என் கழுத்தில் இந்தச் சங்கிலியை தாலியாக நினைச்சுக்கன்னு சொல்லிப் போட்டீங்களோ.. அன்றைக்கே நமக்கு கல்யாணமாகி விட்டது...''

''அன்னிக்கு அந்த நடுராத்திரியில் ஃபார்ஸ்ட் நைட் டும் நடந்துவிட்டது..''

''நீங்க அதிலேயே இருங்க..''

''இல்லைடி செல்லம்.. நீ சொல்ல மறந்துவிடக் கூடாது பாரு. அதுதான் எடுத்துக் கொடுத்தேன்..''

''ஐய்யே... வழியுது..''

''எதுடி?''

''ஜொள்ளு.. துடைத்துக்கங்க..''

''அது எதுக்கு வேஸ்டா.. இருந்துட்டுப் போகட்டும். பாரதியாரே 'ஜொள்ளு விடத் தவறேல்..'ன்னு பாடி வச்சி ருக்கார்..''

''அவர் 'ஆண்மை தவறேல்'ன்னு சொன்னதாகத் தான் எனக்கு நினைவு...''

''நான் இப்படித்தானே படிச்சேன்..''

''படிப்பீங்க.. படிப்பீங்க.. பாரதியார் உயிரோடு இல்லைங்கிற தைரியம் உங்களுக்கு..''

மாலினி, பிரபாகரனின் தோள்மீது செல்லமாக குத்த... அவள் கைபற்றி அதில் முத்தம் பதித்து.. தன் கன்னத்தில் பதித்துக் கொண்டான் பிரபாகரன்.. மாலினி பேச்சிழந் தாள்...

''சொல்லுடி...''

''எதைச் சொல்ல..''

''உனக்கு தாங்க முடியாத உணர்வைக் கொடுக்கும் விஷயம் எதுன்னு சொல்லு..''

''எனக்கு நீங்க வேற்று மனிதன் இல்லை..''

''நீ என் பெண்டாட்டிடீ.. இதையா தாங்க முடி யலை...''

''அத்தான்.. இப்படிப் பேசினா நான் அழுதுடுவேன்..''

*''உன் கண்ணில் நீர் வழிந்தால் - என் நெஞ்சில்*
*உதிரம் கொட்டுமடி....*
*என் கண்ணில் பாவையன்றோ - கண்ணம்மா*
*என்னுயிர் நின்னதன்றோ...''*

பிரபாகரன், மாலினியின் உச்சந்தலையில் முகம் புதைத்து அவளது காதோரமாக பாட.. மாலினி வானில் பறந்தாள்.

''இப்படியெல்லாம் பாடாதீங்க..''

''ஏன்...''

''எனக்கு மனதைப் பிசையுது..''

''ஹௌ டு எக்ஸ்பிளெயின் இட்?''

''என்ன?''



''என்னவென்று நான் சொல்ல?''

''எதை?''

''என் மனதிலிருக்கும் உணர்வுகளை.. அதைத்தான் பாட்டால் வெளிப்படுத்தினேன்.. ஐ லவ்யூடி கண்ணம்மா..''

''எனக்கு உங்க பக்கத்திலேயே இருக்க வேண்டும் போல இருக்கு அத்தான்.. நொடிப் பொழுதுகூட விலக மனமில்லை..''

''அப்போ.. சென்னைக்குப் போகாதே..''

''போக மாட்டேன்.. இந்த ஊரும் உலகும் அறிய.. உங்கள் பெண்டாட்டின்னு என்னைச் சொல்லிவிட்டு கூப்பிட்டுக்கிட்டு வந்து விடுங்க. அதன் பின்னால்.. என் உயிருள்ள வரை ஏன் உயிர் மறைந்த பின்னாலும் உங்களை விட்டுப் பிரிய மாட்டேன். சுற்றிச் சுற்றி வருவேன்..''

''மாலினி.. என் கண்ணம்மா..''

''இதைத்தான் தாங்கவில்லைன்னு நான் சொன் னேன்..''

''சொல்லிட்ட இல்ல.. இனி பாரு.. ஜெட் வேகத்தில் எல்லாத்தையும் முடிச்சிட்டு.. உன்னைக் குதிரையில் தூக்கிக் கொண்டு வந்து விடுகிறேன்..''

''இது என் வீடு அத்தான். ஆனால்.. இதிலிருக்க நான் என் அப்பா அம்மாவிடம் இப்போது அனுமதி வாங்க வேண்டும்..''

''தேவையில்லை.. நீ நாளைக்கு சென்னைக்கு கிளம்பிப் போ.. நான் அம்மாவுடன் வந்து பெண் கேட் கிறேன்..''

''என் அத்தான்..''

மாலினி மனம் நிறைந்து போனவளாக அவளது மனதில் நிறைந்தவனின் தோள் சாய்ந்து கண் மூடினாள்.

## 112

*உன் சிரிப்பின் என்னிதயம்..*
*உலகை கொள்ளுவதையே...*
*என்னவென்று நான் சொல்ல...?*

ராதிகாவிற்கு மர்மம் தாங்கவில்லை. வேலை பார்க்கப் போன நாத்தனார் அவளுடைய மூன்று விட்ட பெரியப்பாவின் மகள் வீட்டில் தங்குகிறாள். ஓசியில் இருக்க இடம் கொடுத்து.. வயிற்றுக்கு சாப்பாட்டையும் போட்ட அந்த கோடீஸ்வரக் குடும்பத்துப் பெண்ணுக்கு கல்யாணம் நடக்கிறது. அந்தக் கல்யாணத்துக்கு ராதிகா வின் மாமனார்.. மாமியாரை அழைக்க அந்தக் கோடீஸ் வரியே நேரில் வருகிறாள். திருமணத்துக்குப் போன இடத்தில் தடபுடலாக வரவேற்பு கிடைக்கிறது.

'சரிதான்.. நாத்தனார் இங்கே பலமாய் காலை ஊன்றி விட்டாள் போல'..

என்று நினைத்தால்.. கல்யாணம் முடிந்த கையோடு.. இவர்களின் குடும்பத்தோடு நாத்தனாரும் மூட்டை முடிச் சைக் கட்டிக் கொண்டு கிளம்புகிறாள். 'என்ன ஆச்சு..?' என்று கேட்டால்.. 'வேலை போச்சு..' என்று பதிலைச் சொன்னாள்.

'ஏன் வேலை போச்சு..' என்று பார்த்தால்.. அவள் வேலையை விட்டுவிட்டு கிளம்பியிருக்கிறாள்.



'எதுக்கு வேலையை விட்டுவிட்டா உங்க தங்கை..?' என்று கேட்டால்.. எப்போதும் குழைகின்ற கணவன்.. அப்போது மட்டும் முறைக்கிறான்.

'என்னவாக இருக்கும்..' என்று மாமியாரின் வாயைக் கிளற முனைந்தால் மற்ற நேரங்களில்.. மகனைக் கூப்பிட் டுக் கொண்டு மருமகள் தனிக்குடித்தனம் போய்விட் டால் என்ன செய்வது என்று பயந்து பதில் சொல்லும் மாமியார்.. அந்தக் கேள்விக்கு மட்டும் அனல் பறக்கப் பார்க்கிறாள்.

மற்றவர்களிடம் கேட்பானேன்.. சம்பந்தப்பட்ட வளிடமே கேட்டுவிடலாம் என்று நாத்தனாரின் மேல் பாச மழையைப் பொழிந்து கேள்வி கேட்டால்... அவள் பக்கத்து தெரிவிலிருக்கும் பானுவின் வீட்டு விஷயம் வரை ஒளிவுமறைவில்லாமல் சொல்லிவிட்டு.. அவளுடைய விஷயத்தை மட்டும் அம்போவென்று விடுகிறாள்.

'அட.. அந்த பானுவின் வாயையாவது கிளறலாம்..' என்று பார்த்தால்.. அவள் என்றைக்கோ ராதிகாவின் கணவன் ரஞ்சித்தின்மேல் ஆசைப்பட்டதை நினைவில் வைத்துக் கொண்டு ராதிகாவை சக்களத்தியை முறைப் பதைப் போல முறைத்துக் கொண்டு முகம் திருப்பிக் கொள்கிறாள்.

'சோதனை மேல் சோதனை...

போதுமடா சாமி...'

என்று ராதிகா வாய்விட்டுப் பாடாத குறைதான்.. நாத்தனாரைப் பற்றிய வம்புச் செய்தியை பிறந்த வீட்டில் ஒளிபரப்ப முடியாத சூழ்நிலையில் அவள் நொந்து நூலாகிப் போனாள்.

அந்த வார இறுதியில் அவள் பிறந்தவீட்டிற்குப் போனபோது..

அவளின் அம்மா ஆவலுடன்..

''ராதிகா.. கேட்டாயாடி இந்தச் சேதியை...'' என்று ஏதோ ஒரு செய்தியைச் சொல்வதற்காக அருகில் வந்து அமர்ந்தாள்.

''அட போங்கம்மா.. நீங்க வேற வயித்தெரிச்சலை கிளப்பாதீங்க..'' ராதிகா அலுத்துக் கொண்டாள்.

''என்னடி மகளே.. இவ்வளவு விரக்தியாய் பேசற?''

''பின்னே என்னம்மா.. வாழுகிற வீட்டில் என்ன நடக்குதுன்னே என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. இதில் ஊர் கதையைக் கேட்டு நான் என்ன செய்யப் போகிறேன்?''

''அதைத்தாண்டி நானும் சொல்ல வந்தேன்..''

''எதைம்மா..''

''எல்லாம் உங்க வீட்டுக் கதைதான்..''

''எங்க வீட்டு ராமாயணம் எனக்கே தெரியலை.. உங்களுக்கு எப்படித் தெரிஞ்சுச்சு..''

''உன் நாத்தனாரின் ஒன்றுவிட்ட பெரியப்பா இருக்காரில்ல.. அதுதாண்டி.. அந்த சசியின் அப்பா..''

''அவர் ஒன்றுவிட்ட பெரியப்பா இல்லை..''

''பின்னே.. சொந்தப் பெரியப்பாவா..''

''நீ வேற.. மூன்றுவிட்ட பெரியப்பா..''

''மூன்றுவிட்ட பெரியப்பாவா?''

ராதிகாவின் அம்மா முகவாயில் கை வைத்துக் கேட்க..

''அட.. ஆமாம்மா.. அப்படி.. சுற்றி வளைத்து சொந்தம் வருது..'' என்று சுவாதீனமாகச் சொன்னாள் ராதிகா.



''என்னடி இது ஆச்சரியக் கழுதையாக இருக்கு. சொந்த அண்ணன் தம்பி வீட்டிற்குப் போனாலே பல்லில் பட பச்சைத் தண்ணி கிடைக்காது. இதில் சுற்றி வளைச்சு வாற சொந்தக்காரங்க வீட்டிலயா உன் நாத்தனார் ஒரு வருஷமா பேரா போட்டிருந்தா?'' ஆச்சரியப்பட்டுப் போனாள் ராதிகாவின் அம்மா.

''ஆமாம்மா..'' என்று பொறாமையுடன் கூறினாள் ராதிகா.

''ம்ஹூம்.. அதுக்கெல்லாம் ஒரு முகராசி வேண்டும்..'' என்று நொடித்துக் கொண்டாள் ராதிகா அம்மா.

''அந்த சசிரேகாவின் அப்பாவுக்கு சொந்தக்காரர் ஒருத்தரை உன் அப்பா போன வாரம் நடந்த நம்ம உறவுக் காரங்க வீட்டுக் கல்யாணத்தில் பார்த்தாராம்.. அப்போ அவர் ஒரு செய்தியைச் சொன்னாராம்..''

''என்னவாம்?''

''அந்த சசிரேகாவின் மாமியார் வீடு பெரிய கோடீஸ்வரக் குடும்பமாமே..''

''ஜமீன் பரம்பரைம்மா..''

''அந்த வீட்டுக்காரங்களுக்கு உன் நாத்தனாரை பிடித்துப் போச்சாம்..''

''இதுதான் எனக்குத் தெரியுமே..''

''சசிரேகாவின் மச்சினர் ஒருத்தர் இருக்காராமில்ல..''

''ஆமாம்மா.. அண்ணனுக்கு முன்னாலே தம்பிக்கு கல்யாணமாகிருச்சு...''

''அவளுக்கும் உன் நாத்தனாரை பிடிச்சுப் போச்சாமே...''

இது ராதிகாவிற்கு புதிய செய்தி. அவள் மார்த்தாண்டத்திற்கு போயிருந்தபோது பிரபாகரன் நிற்க நேரமில்லாமல் ஓடிக் கொண்டிருந்தான். அதனால் அவன் மனதில் மாலினியின் மேலிருக்கும் மையல் அவளுக்குத் தெரியாமலே போய் விட்டது.

''நிஜமாகவா சொல்கிறீங்க?''

''ஆமாண்டி.. அவங்க வீட்டிலிருந்து மாலினியைப் பெண் கேட்டு வரப் போகிறாங்களாம்.. உன நாத்தனாருக்கு வந்த வாழ்வைப் பார்த்தாயாடி...''

ராதிகாவிற்கு பிரமிப்பாக இருந்தது. மாலினி சென்னையில் பிறந்து வளர்ந்த பெண். எங்கேயோ.. மார்த்தாண்டத்தில் அவளுக்கு மாப்பிள்ளை அமைந்திருப்பதை ஆச்சரியத்துடன் அவள் நினைத்துப் பார்த்தாள்.

அதிகமாக அண்ணியின் வம்புக்கு வராமல்.. தான் உண்டு தன் வேலையுண்டு என்று ஒதுங்கிப் போகும் மாலினியிடம் என்றுமே ராதிகா விரோதம் பாராட்டியதில்லை.

''அவளுக்கென்னம்மா.. அவ படிப்புக்கும் அழகுக்கும் இப்படிப்பட்ட மாப்பிள்ளைதான் அமையும்னு எனக்கு என்னிக்கோ தெரியுமே..''

''என்னடி இது இப்படிச் சொல்கிற.. உனக்கு அவளைப் பிடிக்காதே...''

''பிடிக்காதுதான்.. அவ குணம் சரியில்லைன்னு பிடிக்காமல் போகலை. அவளுக்கு பெத்தவங்க அவமேல உயிராய் இருப்பாங்க. என் புருஷன் பாசமலராய் பாசத்தை அவமேல் கொட்டுவார். இப்படி என் மாமனார் மாமியாரின் பாசத்தையும் என் புருஷனின் பிரியத்தையும் பங்கு போட வந்துவிட்டாளேங்கிற பொறாமைதான் எனக்கு. மற்றபடி மாலினி நல்ல பெண்.. அவள் நல்லபடி வாழட்டும்ங்கிற எண்ணம் எனக்கிருக்கும்மா...''



## 113

*ராத்திரியில் காணும் ரகசியக் கனவில்...*
*உன் முகம் மட்டுமே... உனை வருவதையே...*
*என்னவென்று நான் சொல்ல..?*

ஒவ்வொரு மனிதர்களின் மனதிலும் ரகசிய அறைகள் பல உண்டு.. காலம் வரும்போது அது திறக்கும்.. அப்படித் திறக்கும்போது வெளிப்படும் அவர்களின் மனஉணர்வுகள் அவர்களை மேலும் அழகுபடுத்தும்.

ராதிகாவின் மனதிலிருந்த ரகசிய அறைகளில் ஒன்று அன்று திறந்து கொண்டது. அதில் வெளிப்பட்ட அவளது பெருந்தன்மை உணர்வைக் கண்ட ராதிகாவின் அம்மா ஆச்சரியப்பட்டுப் போனாள்.

எந்தப் பெண்தான் நாத்தனாருக்கு பிறந்தவீட்டில் கிடைக்கும் பாதுகாப்பையும் பாசத்தையும் கண்டு தனக்கு பொறாமை ஏற்படுவதை ஒப்புக்கொள்வாள்?

ராதிகா அதை ஒப்புக்கொண்டாள். அவளின் அம்மாவிற்கு மகளின் அந்தச் செயல் கண்டு பெருமை ஏற்பட்டது.

''அம்மா.. எனக்கென்று சொந்தமாக இருக்க.. நான் உரிமை கொண்டாட ஒரு வீடு வேண்டாமா? அதற்காகத்தான் என் புருஷனோடு தனிக்குடித்தனம் போகணுமுன்னு நினைத்தேன். மற்றபடி எனக்கு மாலினியின் மேல் விரோதம் கிடையாது..''..

''இவ்வளவு பெரிய வீட்டில இருந்து உன் நாத்தனாரைப் பெண் கேட்டு வரப் போகிறாங்களே.. என்னவாக இருக்கும்?''

''அவங்க மகனுக்கு கல்யாணம் செய்து கொள்வதாக இருக்கும்..''

''என்னடி இப்படிச் சொல்கிற?''

''வேற எப்படிச் சொல்லச் சொல்கிறீங்க. எதுக்குப் பெண்கேட்டு வருவாங்க.. கல்யாணம் பண்ணிக்கத்தானே பெண் கேட்டு வருவாங்க?''

''பெரிய கண்டுபிடிப்பைச் சொல்லிட்ட போ.. எதுவும் காதல் விவகாரமா இருக்குமோன்னு கேட்டேன்..''

''அப்படி ஒண்ணும் எனக்குத் தெரியலைம்மா..''

''பின்னே எதுக்கு உன் நாத்தனார் வேலையை விட்டுவிட்டு மூட்டையைக் கட்டிக்கிட்டு வந்துவிட்டாளாம்?''

''அதுதான் எனக்கும் புரியலைம்மா. வீட்டில யாரு கிட்ட கேட்டாலும் இதைப் பற்றி வாயே திறக்க மாட்டேங்கறாங்க..''

''அதனாலதான் காதல் விவகாரமான்னு கேட்டேன்..''

''காதல் விவகாரமாக இருந்தால்.. அவ எதுக்கு வேலையை ரிஸைன் பண்ணிட்டு வரணும்? எனக்கென்னவோ அவ வேலைபார்த்த இடத்தில் ஏதாவது பிரச்னை வந்திருக்கணும்னு தோணுது..''

''அப்படியா சொல்கிற?''

''ஆமாம்மா.. காதலிச்சிருந்தா அவ நிச்சயம் மார்த்தாண்டத்தை விட்டு வந்திருக்க மாட்டா..''

''அதுவும் சரிதான்..''

''அவங்களுக்கு இவளைப் பிடிச்சிருந்திருக்கும். அவங்க வீட்டுப் பெண் கல்யாணத்தை நடத்திவிட்டு வந்து பெண் கேட்கலாமுன்னு நினைத்திருப்பாங்க.. இவ வேலை பார்க்கிற இடத்தில் பிடிக்காம போய் வேலையை ரிஸைன் பண்ணிவிட்டு வந்திருக்கணும். சரி.. இப்பப் போய் பெண் கேட்கலாமுன்னு நினைத்து கிளம்பியிருப்பாங்க..''



''நீ சொல்றதைப் போலத்தான் இருக்குமா?''

''அம்மா.. மாலினி.. சசியின் மச்சினரைக் காதலிச்சிருந்தா.. வேலையில் ஏற்படும் பிரச்னைகளை சமாளிச்சுக்கிட்டு மார்த்தாண்டத்திலேயே மையம் கொண்டிருப்பா. அவ அங்கிருந்து கிளம்பி வந்தப்பவே.. இது காதல் விவகாரமில்லைன்னு நமக்குத் தெரிய வேணாமா?''

ராதிகா வீட்டுக்கு வந்தவுடன்.. கணவனைத் தேடிப் போனாள். அவன் காபியுடன் உட்கார்ந்திருந்தான்.

''என்னங்க காபி சாப்பிடுகிறீங்களா?''

''இல்லைடி.. பீர் சாப்பிடுகிறேன்..''

''என்னங்க இப்படிப் பேசுகிறீங்க?''

''வேற எப்படிச் பேசச் சொல்கிற. அம்மா வீட்டுக்குப் போனா காலா காலத்தில வீட்டுக்கு வரணும்கிற அறிவு வேணாமா.. ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்தால்.. ஒரு வாய் காபித் தண்ணி கொடுக்க பெண்டாட்டி இல்லே.. அம்மா போட்டுத் தருகிற காபியைக் குடிச்சுக்கிட்டு இருந்தால்.. அதுக்கும் ஒரு கேள்வியைக் கேட்கிறா. இதைப் பார்த்தா காபின்னு தெரியுதில்ல.. அப்புறமும் என்ன கேள்வி வேண்டிக்கிடக்கு கேள்வி...''

ரஞ்சித்திற்கு ராதிகாவின் மேல் அபாரமான காதல்.. அவன் வீட்டுக்கு வரும்போது மனைவி அங்கிருக்காவிட்டால் அவனுக்கு கண் மண் தெரியாமல் கோபம் வந்துவிடும்..

''அம்மா வீட்டில் அம்மாவோடு பேசிக்கிட்டு இருந்தேங்க.. அதான் கொஞ்சம் நேரமாகிருச்சு...''

''உன் அம்மா வீட்டுக்குப் போனால் நீ உன் அம்மாவோட மட்டும்தான் பேச முடியும்.

ரஞ்சித்தின் குத்தல் மொழி சுருக்கென்று அம்பாக ராதிகாவின் இதயத்தில் தைத்தது. எதிர்த்து ஒரு கேள்வி

கேட்க முடியாத நிலையில் அவள் பல்லைக் கடித்துக் கொண்டு கணவனைப் பார்த்தாள்.

''எதுக்கு என்னைத் தேவையில்லாம வம்புக்கு இழுக் கறீங்க..''

''அப்படிப்பட்டவங்க வீட்டுக்கு நீ ஏன் போகணும்?''

''இது நல்ல கதையாய் இருக்கே.. இன்னும் இருக்கப் போவது எத்தனை காலமோ.. இருக்கிற வரைக்கும் பெத்த வங்களையும் கூடப்பிறந்தவங்களையும் பாசமா பார்த்து விட்டு வந்தால்கூடவா தப்பு?''

''என்னை வம்பிழுக்காதீங்கன்னு சொல்லிட்டு.. நீதான் இப்ப வம்பைக் கட்டி இழுக்கறே...''

''இப்பத்தான் என் பிறந்த வீடு இப்படி ஆகிப் போயி ருச்சு.''

''சரி... சரி.. சண்டையை விடு..''

ரஞ்சித் வெள்ளைக் கொடியைக் காட்டி சமாதானத் திற்கு வந்தான். ராதிகா சற்று நேரம் முகத்தைத் தூக்கிக் கொண்டு இருந்துவிட்டு ஒருவழியாக சமாதானமானாள்.

''அம்மா ஒரு விஷயம் சொன்னாங்க..''

''அவங்க ஓராயிரம் விஷயம் சொல்லியிருப்பாங் களே...''

''அதில இந்த ஒரு விஷயம் மட்டும்தான் உங்களுக்கு தேவையானது..''

''என்னவாம்?''

''நம்ம மாலினியை சசிரேகாவின் மச்சினருக்குப் பெண் கேட்டு வரப் போகிறாங்களாமே.. என் அம்மா சொல்லித்தான் எனக்கு இந்த விஷயம் தெரியுது. நான் இந்த வீட்டு மருமகள்னுதான் பேரு.. எனக்கு இந்த விஷயம் தெரியலை. என் அம்மாவுக்கு இது தெரிஞ்சிருக்கு. இதை



எங்கே போய் நான் சொல்ல.. எந்த சுவரில் தலையை முட்டிக்க?''

மனைவியின் மனத்தாங்கலில் நியாயம் இருப்பதாக ரஞ்சித் நினைத்தான். அவன் மாலினியின் அண்ணன்.. அவனுக்கும் அவனுடைய மனைவிக்கும் மாலினியைப் பெண் கேட்டு பெரிய இடத்திலிருந்து வரப் போகிறார் கள் என்று தெரியவில்லை. அவனுடைய மாமியாருக்கு இந்த விஷயம் தெரிகிறது என்றால்.. அது அவனுக்கு குறைவு தான் என்று அவன் நினைத்தான்.

அவன் அறையை விட்டு வெளியே வந்து காவேரியை அழைத்தான்..

''அம்மா.. அம்மா..''

''என்னடா..'' சமையலறையில் கை வேலையாக இருந்த காவேரி.. ஈரக்கையை புடவை முந்தானையில் துடைத்துக் கொண்டே வெளியே வந்தாள்.

''அப்பா எங்கே?''

''ஹாலில் இருக்கிறார்..''

''நீங்களும் கொஞ்சம் ஹாலுக்கு வாங்க..''

ரஞ்சித்.. மனைவி பின்தொடர ஹாலுக்குப் போக வும்.. காவேரியைப் பயம் பிடித்துக் கொண்டது.

'இவன் தனிக்குடித்தனம் போகப் போகிறேன்னு சொல்லப் போகிறானோ..' அவசரமாக அடுப்பை அணைத்து விட்டு ஹாலுக்கு விரைந்தாள் காவேரி.

தொலைக்காட்சியில் செய்தியில் ஆழ்ந்திருந்த ஜானகி ராமனின் எதிரே அமர்ந்தான் ரஞ்சித்.

ராதிகா கதவோரமாக நின்றுகொள்ள.. காவேரி பதற்றத் துடன் கணவன் முகத்தையும் மகனின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தாள்.

'இவ ஏன் இப்படி முழிக்கிறா...'

நாட்டு நடப்பை விட்டு விட்டு வீட்டு நடப்பில் கவனத்தை திருப்பின ஜானகிராமன்.. ஊழலை மறந்து உள்வீட்டு விவகாரத்திற்கு வந்தார்.

''என்னப்பா.. என்ன விஷயம்?''

''நான் யாருப்பா?''

ஜானகிராமன் திகைத்துப் போனார். மகனிடமிருந்து இப்படி ஒரு கேள்வியை அவர் எதிர்பார்க்கவில்லை.

''என்னடி.. இவன் இப்படிக் கேட்கிறான்?'' என்று மனைவியைப் பார்த்துக் கேட்டார்.

'அப்பாடி... இவன் தனிக்குடித்தனத்தைப் பற்றி பேச வரவில்லை. இது வேற ஏதோ ஒரு விஷயம்..' காவேரி நிம்மதியாகி.. அந்த பேச்சு வார்த்தையில் கலந்துகொள்ள ஆயத்தமானாள்.

''எனக்கும் இவன் ஏன் இப்படிக் கேட்கிறான்னு தெரியலையேங்க. ஏண்டா ரஞ்சித்.. யாரு என்ன சொன்னாங்கன்னு இப்படிப் பேசிக்கிட்டு வருகிற...'' என்று மகனைப் பார்த்து கேட்டும் வைத்தாள்.

உடனே ராதிகாவிற்கு கோபம் வந்துவிட்டது. அவள் கச்சை கட்டிக் கொள்ளாத குறையாக மாமியாரின் மேல் பாய்ந்தாள்.

''ஏன்.. உங்க மகனுக்கு சுயபுத்தி கிடையாதா.. நான் சொல்லித் தந்துதான் பேசுகிறாருன்னு நீங்க எப்படிச் சொல்லலாம்?''

''ஏம்மா.. நான் உன்னை எப்போ குற்றம் சொன்னேன்.. யாரு என்ன சொன்னாங்கன்னுதானே கேட்டேன்?''

''அதுக்கு என்ன அர்த்தம்?''



''அதுக்கு இப்படியா அர்த்தம்..''

''வேறு எப்படித்தான் அர்த்தம்..''

''எனக்கு இந்த சூட்சுமம் எல்லாம் தெரியாதும்மா.. நான் யதார்த்தமான பொம்பளை..''

''அப்போ.. நான்தான் சூட்சுமக்காரி. யதார்த்தமில்லாத பொண்ணு..''

''ஏம்மா.. நான் அப்படியா சொன்னேன்?''

''கேட்டீங்களா.. கேட்டீங்களா.. உங்க கண் எதிரிலேயே உங்க காதுபடவே உங்க அம்மா என்னை எப்படியெல்லாம் பேசுகிறாங்க. இதைக் கேட்டுக்கிட்டு சும்மா உட்கார்ந்திருக்கிறீங்களே..''

''இப்ப எதுக்கும்மா என் மகனைக் கிளப்பி விடுகிற...''

''அவர் என் புருஷன்..''

''அதுக்கு முன்னாலேயே எனக்கு மகன்...''

''அப்போ.. என் புருஷன்மேல எனக்கு உரிமையில்லையா? இதுக்குத்தானுங்க.. உங்ககிட்ட படிச்சுப் படிச்சுச் சொன்னேன்..''

''என்னத்தம்மா பள்ளிக்கூடத்தில் படிச்சுப் படிச்சு சொல்லாம வீட்டுக்குள்ள வந்து என் மகன்கிட்ட படிச்சுப் படிச்சு சொன்ன?''

''எப்ப.. சரிப்பட்டு வரலைன்னு தெரிஞ்சு போச்சோ அப்ப சேர்ந்து இருக்கிறதும் சரிப்படாதுன்னு...''

மறைமுகமாக தனிக்குடித்தன எச்சரிக்கையை ராதிகா அறிவுறுத்த.. பொங்கிய பாலில் தண்ணீரைத் தெளித்த கதையாய் காவேரி உடனடியாக அடங்கிப் போனாள்.

''ஏம்மா ராதிகா.. குடும்பமுன்னு இருந்தா ஆயிரம் இருக்கும். அதுக்காக சரிப்பட்டு வரலைன்னு நீ சட்டுன்னு ஒரு முடிவுக்கு வந்தா எப்படிம்மா.. இது உன் வீடு. நாங்க

உன் புருஷனைப் பெற்றவங்க. உனக்கும் பெற்றவங்க போலத்தான். நீரடிச்சு நீர் விலகுமா?''

காவேரி.. பரிபூரண சரணாகதிக்கு வந்துவிட...

'அஃது.. அந்த பயம் இருக்கட்டும்' என்ற முறைப்புடன் ராதிகாவும் அமைதியாகப் போனாள்.

பெண்களின் உள்வீட்டுப் போரினால்.. தலையில் கை வைத்துக் கொண்ட ஜானகிராமன்.. பரிதாபமாக..

''என்னடா ரஞ்சித் இது..'' என்று மகனிடம் அழ மாட்டாத குறையாக வினவினார்.

''ராதிகா கொஞ்சம் பேசாமல் இருக்கியா..'' ரஞ்சித் மனைவியிடம் திரும்பிச் சொன்ன இந்த வார்த்தைகளுக்கு..

'ஏய்ய்.. அடங்குடி...' என்ற அர்த்தம் என்பதை அறிந்து வைத்திருந்த ராதிகா அடங்கிப் போனாள்.

''உன் பெண்டாட்டியை ஏண்டா அடக்குகிற.. ஆரம்பித்து வைத்தது நீதானே...''

''என்னத்தை ஆரம்பித்து வைத்தேன்?''

''நான் யாருன்னு கேட்டா.. அதுக்கு என்னடா அர்த்தம்? நீ யாருன்னு உனக்குத் தெரியாதா.. அது தெரியாமலா இத்தனை நாளும் இருந்த?''

''கடுப்பை கிளப்பாமல் பதில் சொல்லுங்கப்பா..''

''நீ என் மகன்..''

''மாலினிக்கு யாரு?''

''உனக்கே இது நியாயமாய் இருக்காடா?''

''பதிலைச் சொல்லுங்கப்பா..''

''மாலினிக்கு அண்ணன்..''

''அவளைப் பெரிய இடத்திலிருந்து பெண் கேட்டு வரப்போகிறாங்க.. இதைப் பற்றி ஒரு வார்த்தை என்கிட்ட நீங்க சொன்னீங்களா?''



காவேரிக்கு புரிந்துவிட்டது. அவளிடம் ரகசியமாக சசிரேகா கூறிய செய்தியை கணவனிடம்கூடப் பகிர்ந்து கொள்ளாமல் அவள் மனதிற்குள் வைத்திருந்தாள். இப்போது அது வெளியே தெரிந்துவிட்டதால் மகன் கோபம் அடைந்திருக்கிறான்.

'யார் சொல்லியிருப்பா..' என்ற யோசனையுடன்,

''யாருடா உனக்கு இதைச் சொன்னது?'' என்று கேட்டுவிட்டு.. அதற்கும் மகனிடம் வாங்கிக் கட்டிக் கொண்டாள் அவள்.

ஜானகிராமன் புருவங்கள் முடிச்சிட மனைவியைப் பார்க்கவும்.. அதைப் பற்றி எதுவும் தெரியாதவளைப் போல இருக்கவேண்டிய அவசியத்துக்கு ஆளானாள் காவேரி.

## 114

*உன் நினைவில் எனது மனம்...*
*உல்லாசம் கொள்வதையே....*
*என்னவென்று நான் சொல்ல?*

சசிரேகா கூறிய செய்தியைக் கேட்டவுடன் இறக்கையில்லாமலே வானத்தில் பறந்தாள் காவேரி.

''மாலினியின் மேல் என் பெரியத்தானுக்கு நோக்கமிருக்கு சித்தி... என் மாமியாரும் நாத்தனாரும் அதை ஆதரிக்கிறாங்க. எங்க வீட்டுக்காரருக்கு இதில் பூரண சம்மதம். நாங்க நல்ல நாள் பார்த்து மாலினியைப் பெண் கேட்டு அங்கே வரதா இருக்கோம் சித்தி..''

''இதை உங்க சித்தப்பாவிடம் சொல்லிவிடவா சசி..''

''இப்ப வேணாம் சித்தி.. அவர் மாலினியை தப்பா

நினைச்சுக்குவார். நானே போன் பண்ணி சித்தாப்பாவிடம் சொல்கிற விதமாய் சொல்கிறேன்..''

''அதுவும் சரிதான்.. அம்மாடி சசி...''

''என்ன சித்தி?''

''ரஞ்சித்தும் ராதிகாவும்கூட மாலினியின் கல்யாணத்தைப் பத்தி யோசிக்கல. நீ அவளோட பெரியப்பா மகள். நீ இந்த அளவுக்கு யோசித்து அவளுக்கு ஒரு நல்லது பண்ணியிருக்கயே.. உனக்கு எப்படி நன்றி சொல்கிறதுன்னே எனக்குத் தெரியலைம்மா..''

''பெரிய வார்த்தையெல்லாம் பேச வேண்டாம் சித்தி.. மாலினி என் பெரியத்தானைக் கல்யாணம் பண்ணிக் கொண்டால்.. எனக்கும் இந்த வீட்டில் ஆதரவு கூடும் சித்தி. என் சுயநலமும் இதில் இருக்கு..''

''எப்படியோ.. முன்னே பின்னே தெரியாத குடும்பத்தில் பெண்ணைக் கொடுத்துவிட்டு கவலைப்பட்டுக் கொண்டிருக்கவேண்டிய தேவையில்லாமல் உன் மாமனார் வீட்டிலேயே பெண் கொடுப்பதைப் பற்றி எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா?''

''புரியுது சித்தி..''

''நீங்க.. கூடப் பிறந்தவங்க மாதிரி ஒற்றுமையா இருந்த பொண்ணுக.. உங்க மனசுப்படியே ஒரே வீட்டில் வாழப் போகிறீங்க..''

''அந்த சந்தோஷம்தான் சித்தி எனக்கு...''

''நல்ல வார்த்தை சொல்லியிருக்க.. சீக்கிரமாவே உன் சித்தப்பாவிடமும் அண்ணனிடமும் இதைப் பற்றிச் சொல்லி விடு...''

''கட்டாயம் சொல்லி விடுகிறேன் சித்தி.. இப்பவே சொல்லியிருப்பேன். ஆனால்.. இதை என் மாமியாரே சித்தப்பாவிடம் சொன்னால்தான் முறையாக இருக்கும். அவங்க சொல்லாமல் நான் சொல்லக் கூடாது..''



''வேண்டாம்.. வேண்டாம்.. அவங்களே சொல்லிக் கட்டும். ஏன்.. மாலினி வேலையை விட்டுவிட்டு வந்து விட்டாளாம்?''

''அவளுக்கு அந்த மில்லில் ஏதோ பிரச்னையாம்..''

''உன் பெரியத்தானுடன் மாலினி எப்படிப் பழகினாள்?''

''வித்தியாசமாய் பழகவில்லை சித்தி..''

''அன்னிக்கு திடீர்னு வந்து மாலினியை.. மார்த்தாண்டத்திற்கு கூப்பிட்டுக் கொண்டு போனயே.. அதுதான் கேட்டேன்..''

''மாலினியின் மில்லில் பெரியத்தான் ஏதோ பேசி சமரசம் பண்ணி வைத்தாராம். இவகிட்டச் சொன்னால் இவ ஈகோவை பிடிச்சுத் தொங்கிக்கிட்டு வர மாட்டேன்னு சொல்லுவா. அதனால.. அவ கூட வேலை பார்க்கிற ஒருத்தருக்கு உடம்பு சரியில்லைன்னு ஒரு பொய்யைச் சொல்லி அவளைக் கூப்பிட்டுக்கொண்டு போனேன் சித்தி..''

''மில்லில் பேசி சமாதானம் பண்ணினாங்களா?''

''அது ஆச்சு. ஆனால்.. அதுக்குள்ள எங்க வீட்டில் மாலினியைக் கல்யாணம் பண்ணிக்கிற பேச்சு வந்துருச்சு. மாலினியும் சமாதானமாகிட்டாலும் அங்கே தொடர்ந்து வேலை பார்க்கப் பிரியப்படலே. அதனால.. அவளை இங்கே இருக்கச் சொல்லாம கொண்டு வந்து விட்டுட்டு வந்துட்டேன்..''

''அவ்வளவுதானே.. நான் என்னவோ ஏதோன்னு பயந்துட்டேன்..''

''நானிருக்கிறேனே சித்தி.. நீங்க பயப்படுகிறதைப் போல எதையும் நடக்க விடுவேனா?''

காவேரி மனநிம்மதியுடன் போனை வைத்தாள். அவளது மனதின் ஒரு மூலையில்.. மகளைப் பற்றி எழுந்த சந்தேகம் மறைந்துவிட்டது.

'சே.. வீணாய்.. எதையெதையோ நினைத்துவிட்டேன். அவங்களாக ஆசைப்பட்டுத்தான் பெண் கேட்டு வருகிறாங்க போல..'

மகளின் எதிர்காலம் அவர்கள் கனவில்கூட நினையாத அளவிற்கு வளமாய் அமைந்துவிட்டதில் காவேரிக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி. அந்த மகிழ்ச்சியில் மருமகளைப் பற்றிய எரிச்சல்களை மறந்து தானே வேலைகளை இழுத்துப் போட்டுச் செய்து கொண்டிருந்தாள் காவேரி.

திடீரென்று மகன் போர்க்கொடி தூக்கி நியாயம் கேட்பானென்றோ... அதை கணவரும் ஆதரித்து வைப்பார் என்றோ எதிர்பார்த்திராத காவேரி.. எப்படி இந்த நிலைமையை எதிர்கொள்வது என்று யோசிக்க ஆரம்பித்தாள்.

''என்ன காவேரி.. இங்கே என்னதான் நடக்குது?''

''எனக்கும் ஒன்றும் தெரியலைங்க. நம்ம ரஞ்சித்துதான் எதையோ சொல்கிறான். அவன்கிட்டயே என்னான்னு கேட்போம். ஏண்டா ரஞ்சித்.. உன் தங்கையைப் பெரிய இடத்திலிருந்து பொண்ணு கேட்டு வரப் போகிறாங்கன்னு யாரு உனக்குச் சொன்னது?''

''ஏன்.. சொன்னவங்களைப் பிடிச்சு சண்டை போடப் போகிறீங்களா?''

''நான் எதுக்குடா அவங்ககிட்ட சண்டை போடப் போகிறேன்?''

''எதுக்கு இந்த விஷயத்தை என் மகன்கிட்ட சொன்னீங்கன்னுதான்..''

''ராமா.. நீ சொல்லித்தான் எங்களுக்கே இந்த விஷயம் தெரியும். ஆமா.. அந்த பெரிய இடம் எந்த இடம்டா?''

காவேரி.. மகளின் வாழ்க்கைக்காக சிறப்பாக நடித்து விட்டாள். ஜானகிராமன்.. தன் மனைவி.. தன்னிடமிருந்து எதையும் மறைக்கவில்லை என்று மனது சமாதானம் அடைந்தார்.



''ஆமாம்டா ரஞ்சித்.. அந்த இடம்.. எந்த இடம்?'' ஜானகிராமனும் சேர்ந்து கேள்வி கேட்க.. ரஞ்சித் குழம்பிப் போனான்.

''என்னப்பா இது.. உண்மையிலேயே உங்களுக்கு இந்த விஷயம் தெரியாதா?''

''தெரியாதே..''

''நம்ம சசியின் மச்சினருக்கு மார்த்தாண்டத்திலிருந்து நம்ம மாலினியைப் பெண் கேட்டு வரப் போகிறாங்களாமே?''

''என்னது?''

ஜானகிராமன் 'ஆ' வென்று வாய் பிளந்தார்.

''காவேரி.. நிஜமாகச் சொல்லுடி.. இதைப் பற்றி உனக்கு எதுவும் தெரியுமா?''

''சசி.. உங்க மூன்று விட்ட அண்ணனின் மகள். அவள் உங்களை விட்டுவிட்டு என்னிடம் வந்து செய்தியைச் சொல்லுவாளா? ரஞ்சித்.. எனக்கென்னவோ.. உன் அப்பா.. விஷயத்தை தெரிந்துகொண்டே நம்மகிட்ட இருந்து அதை மறைத்திருக்கிறாருன்னு தோணுதுடா...''

காவேரி மகனை முடுக்கிவிட.. அவன் தகப்பனாரைச் சந்தேகத்துடன் பார்த்தான்.

''ஏண்டா நீ வேற.. இந்தப் பார்வை பார்க்கிற? எனக்குத் தெரிந்தால் உனக்குச் சொல்லாமல் இருப்பேனா.. நீதானே மாலினிக்கு அண்ணன்.. உன் உதவியில்லாம.. தனியாய் மாலினியின் கல்யாணத்தை நான் நடத்திவிட முடியுமா?''

ஜானகிராமன் இந்தக் கேள்வியைக் கேட்டதும்..

'ஆஹா...' என்று மனதிற்குள் சுதாரித்துக் கொண்டாள் ராதிகா.

''ஏங்க.. அதுதான் மாமாவே அவருக்கு எதுவும்

தெரியாதுன்னு சொல்கிறாரே... நீங்க ஏன் அவருகிட்ட மேலே மேலே கேள்வி கேட்கறீங்க. அவருக்கு இல்லாத பொறுப்பா நமக்கு வந்துவிடப் போகுது.. பெண்ணைப் பெற்றவருக்கு எதையெதை எப்படியெப்படிச் செய்யணு முன்னு தெரியாதா?''

மருமகளின் பேச்சைக் கேட்டு பல்லை நறநறவென கடித்துக் கொண்டாள் காவேரி.

'எதையெதை எப்படியெப்படிச் செய்யணுமுன்னு எங்களுக்குத் தெரியுதோ.. இல்லையோ.. எதையெதை புருஷனிடம் எப்படியெப்படிப் பேசணுமுன்னு இவளுக்கு நல்லாத் தெரிஞ்சிருக்கு..'

''இது அப்பாவுக்கும் எனக்குமான பேச்சு... நீ கொஞ்சம் பேசாமல் இருக்கயா ராதிகா..'' ரஞ்சித் கடுமை யான குரலில் கூறினான்.

தன்னிடமிருந்து பெற்றவர்கள் எதையும் மறைக்க வில்லை என்று தெரிந்ததுமே அவனுக்கு உச்சி குளிர்ந்து விட்டது.

அவனுக்குத் தெரிந்த செய்தியை உடனடியாகத் தந்தைக்கு தெரியப்படுத்திவிட்டு.. மேற்கொண்டு செய்ய வேண்டியதைப் பேச வேண்டுமென்ற எண்ணம் அவ னுக்கு.

'அதுதானே.. தங்கைன்னா உடனே இவருக்கு பாசம் பொத்துக்கிட்டு வந்துடுமே..' ராதிகா பல்லைக் கடித்துக் கொண்டாள்..

''இது எப்படிடா உனக்குத் தெரியும்?''

''ராதிகாதான் சொன்னாள்ப்பா...''

''ஏம்மா ராதிகா.. உனக்கெப்படித் தெரியும்?''

''என் அம்மா சொன்னாங்க மாமா...''

நதி மூலம்.. ரிஷி மூலத்தைக்கூட எளிதாக கண்டு பிடித்து விடலாம். ஆனால், இதுபோன்ற செவிவழிச் செய்திகளின் மூலத்தை எளிதில் கண்டுபிடித்துவிட முடியாது என்று தன் அனுபவத்தில் கண்டிருந்தார் ஜானகி ராமன்.



ராதிகாவின் அம்மா எதிரிலிருந்தாலாவது அவளிடம் எப்படித் தெரியுமென்று கேட்டு வைக்கலாம். அந்த இடத்தில் இல்லாத சம்பந்தாரம்மாவிடம் எப்படி கேள்வி கேட்பது?

அதற்குப் பதில்.. அவருடைய மருமகளிடமே செய்தியின் மூலத்தை அறிந்து கொள்ளக் கேள்வி கேட்க ஆரம் பித்தார் ஜானகிராமன்.

''அவங்களுக்கு யார் சொன்னதாம்?''

''நம்ம சசியோட அப்பாவோட ஊருக்காரர் ஒருத்தர் சொன்னாராம் மாமா..''

''அந்த ஊருகாரருக்கு யார் சொன்னதாம்?''

''நம்ம சசியோட அப்பாவோட தூரத்துச் சொந்தக் காரர் ஒருத்தர் சொன்னாராம்..''

''அந்த தூரத்து சொந்தக்காரருக்கு யார் சொன்ன தாம்?''

''சசியோட அப்பா சொன்னாராம்..''

''அவருக்கு யார் சொன்னதாம்?''

''சசி சொன்னாளாம்..''

''சசிக்கு யார் சொன்னதாம்..''

''இது என்ன மாமா கேள்வி? அவ வீட்டு ஆளுக சொல்லியிருப்பாங்க..''

''அதெப்படி.. என்னிடம் ஒரு வார்த்தை சொல்லாம.. ஊரு பூரா இந்தப் பேச்சை உலவ விட்டிருக்காங்க. பெண ணைப் பெற்றவன் குத்துக்கல்லைப் போல இருக்க... மத்த வங்க என் மக கல்யாணத்தைப் பத்தி பேசியிருக்காங்களா..

ரஞ்சித்.. சசிக்கு போனைப் போடு.. அவகிட்டயே என்னான்னு கேட்போம்..''

'இது என்னடா.. கிணறு வெட்டாமலே பூதம் கிளம்பு கிறது..' காவேரி கையைப் பிசைந்தாள்.

அவளது அபயக்குரல் காதில் விழுந்ததைப் போல.. போனின் மணி ஒலித்தது.

''ஏங்க.. உங்க செல்போன்தான் அலறுது..'' காவேரி.. ஜானகிராமனின் செல்போனை எடுத்துக் கொடுத்தாள்.

''ஏண்டி.. அருமையான பழைய பாட்டை ரிங் டோனாய் வச்சிருக்கேன்... இதைப் போய் அலறுதுன்னு சொல்கிறயே..''

மனைவியைக் கடிந்துகொண்டே போனை வாங்கிப் பேசிய ஜானகிராமன்... தடாலென்று சோபாவை விட்டு எழுந்தார்.

''வணக்கங்கம்மா.... சௌக்கியம்தானுங்க.. என் பெண்டாட்டியும் சௌக்கியம்தான். மகனும் மருமகளும் நல்லா இருக்காங்க. மாலினி லைப்ரரி வரைக்கும் போய் இருக்கிறா. அங்கே.. மார்த்தாண்டத்தில் எல்லாம் சௌக் கியங்களா...''

'ம்ஹூம்.. செல்போனில் பேசும்போது.. இந்த நலம் விசாரித்தலை கொஞ்சம் குறைத்துக்கிட்டுப் பேசினால் ஆகாதா. நலம்.. நலமறிய ஆவல்னு ஒற்றை வரியில் பேச இவங்களுக்கு யாராவது கற்றுக் கொடுத்தால் தேவலை..'

ரஞ்சித் மனைவியைப் பார்க்க.. அவள் கணவனின் எண்ணம் புரிந்தவளாக கேலியாக சிரித்தாள்.

''என்கிட்ட முக்கியமான விஷயம் பேசணுமா.. சொல் லுங்கம்மா... ம்ம்.. ம்ம்... ரொம்ப சந்தோஷம்ங்க.. நீங்க எங்க வீட்டில் பெண் எடுக்க நாங்க கொடுத்து வைத்திருக்கணும். வார வெள்ளிக்கிழமை நாள் நல்லாயிருக்கா? அன்னிக்கே வருகிறீங்களா.. சரிங்கம்மா.. நாங்க காத்திருக்கோம்...''



ஜானகிராமன் உடலை கேள்விக்குறியைப் போல வளைத்துப் பணிவுடனும் பவ்யத்துடனும் பேசினார்.

ரஞ்சித் தலையில் அடித்துக் கொண்டான்.

''ஏம்ப்பா.. இது சாதாரண செல்போன்தானே?''

''ஆமாம்ப்பா..''

''இதில் பேசினா.. உங்க உருவம் அங்கே தெரியுமா?''

''தெரியாதுதான்..''

''அப்புறம் எதுக்கு உடம்பை வில்லா வளைச்சு.. இப்படி போஸ் கொடுக்கறீங்க..''

''ஒரு மரியாதைதான்டா தம்பி..''

''நீங்களும் உங்க மரியாதையும். நிறைய பேர் இப்படித்தான் செய்கிறாங்க..''

''அதை விடு.... சசி சொன்னது நிஜம்தாண்டா ரஞ்சித். வர வெள்ளிக்கிழமை மார்த்தாண்டத்திலிருந்து மாலினியைப் பெண் கேட்டு நர்மதாம்மா வரப் போகி றாங்க..''

'கடவுளே! உனக்கு நன்றி..'

காவேரி பூஜையறையை நோக்கி விரைந்தாள். ஜானகிராமன்.. வெள்ளிக்கிழமை செய்ய வேண்டிய ஏற்பாடு களைப் பற்றி ரஞ்சித்திடம் கலந்து ஆலோசிக்க ஆரம் பித்தார். தங்கையின் திருமணம்.. தன்னை முன்னிறுத்தி நடக்கப் போகிறது என்ற நிறைவில் அவனும் பொறுப்பாக தகப்பனாருக்கு யோசனைகள் சொல்லிக் கொண்டிருந்தான்.

115

என்னருகே நீயிருக்கும் போது...
கத்தரி வெயிலும்.. சித்திரை மழைச் சாரலாவதை...
என்னவென்று நான் சொல்ல?

வீட்டின் பின்பக்கமிருந்த படிக்கட்டில் அமர்ந்து எதிரேயிருந்த துளசி மாடத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள் பவித்ரா. மாடத்தின் நான்கு பக்கமும் இருந்த சிறு பீடங்களில் அகல் விளக்கு எரிந்து கொண்டிருக்க.. அதன் நடுமையத்தில் துளசிச் செடி அழகாக.. கம்பீரமாக.. காற்றை வரவேற்பதைப் போல லேசாக தலையாட்டிக் கொண்டு நின்றிருந்தது.

'உடல்.. மனம்.. ஆன்மா.. பரிசுத்தம்..'

துளசிச் செடியின் பவித்ரத்தைக் குறிக்கும் வார்த்தைகள் இவை... துளசி புனிதமானது. வைகுண்டத்தில் வசிக்கும் அந்த அனந்தசயனனின் அன்புக்குரியது.

புராண காலத்து கதைகள் பல துளசியின் பெருமைகளையும் மகிமைகளையும் கூறுகின்றன.

ஒரு சமயம் கிருஷ்ணனின் எடைக்கு எடை தங்கம் தருவதாக சத்யபாமா கூறினாளாம். ஒரு பக்கம் கிருஷ்ணன் அமர்ந்திருக்க, மறுபக்க தராசுத் தட்டில் செல்வங்கள் அனைத்தும் குவிக்கப்பட்டன.

அகிலத்தை அளந்த அந்த உலகளந்த பெருமாளுக்கு ஈடாக தங்கத்தையும் வைரத்தையும் அளித்துவிட முடியுமா?

தராசுத் தட்டு இறங்கவில்லை. கிருஷ்ணன் ஹாயாக.. கால்நீட்டி சத்யபாமாவை ஒன்றும் அறியாதவர் போலக் கள்ளப்பார்வை பார்த்துக் கொண்டிருந்தார்.

சத்யபாமா கைகளைப் பிசைந்தாள். கண்ணீர் விட்டாள். செய்வதறியாதவளாக தவித்தாள். அப்பொழுது அங்கே ருக்மிணி வந்தாள். செய்தி கேட்டதும் அமைதியாக தன் கணவனின் இன்னொரு மனைவியிடம் கூறினாள்.

''கண்ணனுக்கு இந்த பொன்னும் மணியும் ஈடாகுமா? அவன் அன்பிற்கும் பக்திக்கும் கட்டுப்படுபவன். ஆசைக்கு கட்டுப்படுபவனல்ல... அவன் தண்ணீரைப் போன்ற தாயுள்ளம் கொண்ட தயாநிதி. அவனை வசப்படுத்த வைரங்களை அளித்தாயா... நீயே சரணம் என்று அவன் காலடியில் விழுந்து விட்டால் கண்ணன் நம்மைக் காக்க ஓடோடி வருவான்... என் குறை தீர்க்க உனக்கு மனமில்லையா என்று குற்றப்பத்திரிகை தாக்கல் செய்தால் தவறாமல் அதற்குப் பதிலளித்து நமக்கு அவன் மேலிருக்கும் உரிமையை உறுதி செய்வான். அப்பேர்ப்பட்ட காதலனை... கணவனைப் பெற்ற நாம் பாக்கியசாலிகள். நமக்கே அவனது மகிமை புரியாமல் போகலாகுமா? இனியொரு முறை இப்படிப்பட்ட அபத்தமான காரியத்தை செய்யாதே....''



ருக்மிணி, கண்ணனை வலம் வந்து கண் மூடி வேண்டிக்கொண்டாள். பின்னர் அருகிலிருந்த ஒரு துளசி இலையை எடுத்து பக்தியுடன் தங்கமும் வைரமும் குவிந்திருந்த தராசுத் தட்டில் வைத்தாள்.

உடனே அங்கொரு அதிசயம் நிகழ்ந்தது. துளசி வைக்கப்பட்டிருந்த தட்டு தாழ்ந்து இறங்கியது. பெருமாள் அமர்ந்திருந்த தட்டு உயர்ந்து ஏறியது. இரண்டும் சரிசமமாக ஆன காட்சியை வியப்புடன் கண்டாள் சத்யபாமா.

மகாவிஷ்ணுவின் எடைக்கு எடை ஈடாகக்கூடிய சக்தி வாய்ந்தது துளசி என்பது இதற்கு அர்த்தமல்ல.

தனக்கு ஈடான மதிப்பையும் மரியாதையையும் துளசிக்கு அந்த நாராயணனே வழங்கியிருக்கிறார் என்பது தான் இதன் அர்த்தம்.

அப்படிப்பட்ட துளசிக்கு ஈடானது மாலினி கொடுத்த கள்ளமற்ற அன்பு. அந்த துளசியின் நாயகன் கண்ணன் அர்ஜுனனிடம் அன்பு பாராட்டியதைப் போல மாலினியும் பவித்ராவிடம் நட்பு பாராட்டினாள்.

ஸ்வேதாவை மதித்துப் பேசாதவள்... பவித்ராவை மதித்துப் பேசினாள். உடன்பிறந்த சகோதரிக்கு நிகரான

சசிரேகாவிடம் வெளிப்படுத்தாத தன் அந்தரங்கத்தை பவித்ராவிடம் வெளிப்படுத்தினாள். ஆளவந்தாரின் குடும்பம் பெண் கொடுக்க வேண்டுமென்று கனவு கண்ட கோட்டையூர் ஜமீன் வம்சத்தின் மூத்த மகனான பிரபாகரனின் மனதை வசப்படுத்தியிருந்தவள் பவித்ராவிற்காக காதல் தூது சென்றாள்.

அந்த மாலினியின் மனதை பவித்ரா உடைத்துவிட்டாள். அவள் பிரபாகரனின் காதலை வேண்டாமென்று தூக்கி எறிந்துவிட்டு.. பார்த்துக் கொண்டிருந்த வேலையையும் விட்டுவிட்டு.. மார்த்தாண்டத்தைவிட்டு வெளியேற பவித்ரா காரணமாகி விட்டாள்.

'எனக்கு மன்னிப்பே கிடையாது...' பவித்ரா மௌனக் கண்ணீரை உகுத்தாள்..

'எனக்குப் பேய்தான் பிடித்துவிட்டது. இல்லாவிட்டால் பெரியத்தானிடம் கேட்கக்கூடாத கேள்விகளை நான் கேட்டிருப்பேனா..' தன்னைத் தானே வெறுத்தாள் பவித்ரா.

'என் காதல் வாழ வேண்டும்.. மாலினியின் காதல் அழிய வேண்டுமென்று நினைத்து விட்டேனே.. நான் எப்படிப்பட்ட ராட்சஸி? அந்த நடு ராத்திரியில் தோட்டத்திற்குப் போய் செடி மறைவில் ஒளிந்துகொள்ள தைரியமிருந்த எனக்கு தினா அத்தானிடம் காதலைச் சொல்ல ஏன் தைரியம் வரவில்லை?' பவித்ரா மனதிற்குள் கேட்டுக் கொண்டாள்.

'பயம்... எங்கே என் காதலை தினா அத்தான் மறுத்துவிடுவாரோ என்ற பயம். அந்த மறுப்பைவிட.. மற்றவர்களுக்கு அது தெரிந்துவிடுமோ என்ற பயம். 'பவித்ரா அடக்கமானவள். யாரையும் ஏறெடுத்துப் பார்க்காதவள்.. ஒன்றும் அறியாத பச்சை மண்...' என்ற பிம்பம் கலைந்துவிடுமோ என்ற பயம்...' பவித்ராவின் மனதை உண்மை சுட்டது.



அது அவளை கூறு கூறாக்கி சித்ரவதை செய்தது.

'நான் வேஷக்காரி...' பவித்ரா தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

'பொய் முகமூடியை அணிந்தவள். நல்லவள் போல வேஷம் போட்டவள். என்னிடம் உண்மை இல்லை. என் காதலைப் பற்றிய உறுதி இல்லை. நேர்மை இல்லை. நான் சாந்தமானவள் என்பது பொய். நான் கொடூரமானவள். என் காதலுக்காக மாலினியின் காதலை பலி கொடுக்கத் தயங்காதவள். நானும் ஒரு பெண்ணா... சே...' பவித்ரா தன் முகத்தை உலகத்திற்கு காட்ட விரும்பாதவள் போல முழங்கால்களில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

''எனக்காக போனாளே... என்னை நம்பி என் கடிதத்தைக் கொண்டு போய் தினா அத்தானிடம் கொடுத்தாளே. நான் எழுதிய கடிதத்தை அநாகரிகமாய் அவள் பிரித்துப் படிப்பாளென்று நான் எப்படி நினைத்தேன்?' பவித்ரா வெளிச்சத்தைப் பார்க்க அஞ்சியவளாக தன் கணகளை இறுக மூடிக்கொண்டாள்..

அத்தான் சொன்னாரே.. அவள் கடிதத்தை கொடுக்கும்போது.. எதையோ சொல்ல வாய் திறந்தாளாம். ஸ்வேதா வந்ததால் 'பிரித்துப் படித்துப் பாருங்க.. புரியும்..' என்று அவசரமாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டாளாமே. அவள் எதையும் சொல்லாமல் கடிதத்தை கொடுத்தாள் என்று நான் நினைத்தது எவ்வளவு பெரிய தவறு?' பவித்ராவின் விழிகளில் கண்ணீர் நிற்காமல் ஊற்றெடுத்தது.

'அவள் தினா அத்தானிடம், இது பவித்ரா கொடுத்த கடிதமென்று சொல்லவில்லையென்று நான் கோபப்பட்டேனே.. அதே சமயம்.. அவள் தான்தான் எழுதியதாகவும் சொல்லவில்லையே. இதை தினா அத்தான் பெரியத்தானிடம் சொன்னதை என் காதினில் கேட்ட பின்பும் எப்படி நான் பெரியத்தானிடம் அப்படிப்பட்ட கேள்வி

களைக் கேட்கத் துணிந்தேன்...' பவித்ராவின் கன்னங்கள் கண்ணீரில் நனைந்திருந்தன.

'பெரியத்தானே தினா அத்தானிடம் தன் காதலை வெளிப்படுத்தாதபோது.. மாலினி எப்படி வெளிப்படுத்துவாள்? என் அந்தரங்கம் வெளிப்படக்கூடாதென்று நான் நினைத்ததைப் போலத்தானே மாலினியும் நினைத்திருப்பாள். ஒரு பெண்ணாக இருந்தும் என் தோழியின் மனது எப்படி எனக்குத் தெரியாமல் போய் விட்டது?' பவித்ரா கண்மூடி இருளில் புதையுண்டு போக விரும்பினாள்..

'என் மனதில் தினா அத்தானின் மேல் உண்மையான காதல் இல்லை. உண்மையான காதலுக்கு உறுதி இருந்திருக்கும். தீவிரம் இருந்திருக்கும். நீ என்னை நினைக்காதபோதும்.. நான் உன்னை நினைக்காமல் இருக்க மாட்டேன் என்று அறைகூவும் தைரியம் இருந்திருக்கும். என்னிடம் இது எதுவுமே இல்லையே...' பவித்ரா... கடந்து போன காலங்களில் தன்னைப் பற்றிய சுய ஆராய்ச்சியில் ஈடுபட்டாள்.

'தினா அத்தான் என் காதலை ஏற்றுக்கொள்ளாவிட்டால்.. அது வெளியே தெரிந்துவிடக் கூடாது என்று ஏன் நான் நினைத்தேன்.. இன்னொருவனை திருமணம் செய்து கொள்ள.. அது தடையாக இருக்கும் என்பதனால் தானே.. நீயில்லாவிட்டால் எனக்கு வீட்டில் பார்க்கும் மாப்பிள்ளை என்ற நிலையில் இருந்து கொண்டு காதலைப் பற்றிப் பேச எனக்கு என்ன தகுதியிருக்கிறது..' பவித்ரா உதடு கடித்தாள்.

'வாசவனின் மகள் பவித்ரா.. பெயருக்கேற்றாற் போல பவித்ரமானவள். இந்தப் பெயர் மாறக்கூடாது என்றுதானே.. தினா அத்தானின் மீது எனக்கிருந்த காதலை நான் மறைத்தேன்? நான் பவித்ரமானவளா? ஒளிந்து மறைந்த தினா அத்தானை கள்ளப்பார்வை பார்க்க நான் தயார். அதுவே வெளிப்படையாக அவருக்கு எதிரே நின்று



முகம் பார்த்து காதல் சொல்ல நான் தயாரில்லை. ஏனென்றால்.. எனக்கு என் இமேஜ் மிக முக்கியம்.. யாரையும் ஏறெடுத்துப் பார்க்காத அடக்கமான பெண் என்ற என் பிம்பம் கலைந்துவிடக் கூடாது என்பதில் நான் கவனமாக இருப்பவள்..'

சுயபரிசோதனை எத்தனை வலி மிகுந்தது என்று பவித்ரா அன்று உணர்ந்தாள்.

அவள் மனதில் மாலினி எழுந்தாள்.. பால் போன்ற முகத்துடன் வெள்ளைச் சிரிப்புடன்.. அவள் நட்புக்கரம் நீட்டிய அந்த நாள் ஞாபகம் நெஞ்சினிலே வர.. பவித்ரா அப்படிப்பட்ட நட்பை இழந்துவிட்ட வலியை உணர்ந்தாள்.

தினகரனும் பிரபாகரனும் வாசலிலே நின்றுகொண்டிருந்த நாளில் தோட்டத்து இருளின் மறைவில் நின்று கொண்டு தினகரனை தான் பார்த்ததை நினைவுகூர்ந்தாள் பவித்ரா.

'அன்னிக்கே நான் தினா அத்தானைத்தான் பார்க்கிறேன்னு தெரிஞ்சதும் மாலினி சந்தோஷப்பட்டாளே.. அப்படிப்பட்டவளைப் போய் நான் என்னவெல்லாம் பேசிவிட்டேன்..' நினைத்து நினைத்து மனம் வெந்தாள் பவித்ரா.

அவளுக்குப் பின்னால் வேகமான காலடியோசை கேட்டது. உட்கார்ந்த வாக்கிலேயே தலை நிமிர்ந்து பார்த்தாள். வாசவன் பரபரப்புடன் அவள் முன்னால் வந்து நின்றார்.

''தினகரன் வந்திருக்கிறான் பவி...''

அவர் குரலில் கனவு நிறைவேறிவிட்ட சந்தோஷம் அப்பட்டமாகத் தெரிந்தது. வானத்து நிலாவை எட்டிப் பிடித்திருந்தால்கூட அவர் அந்த அளவுக்கு சந்தோஷம் கொண்டாடியிருக்க மாட்டார். கோட்டையூர் ஜமீன் வம்சத்தில் பெண்ணைக் கொடுக்கப்போகும் அதிர்ஷ்டம் கைகூடிவிட்டதில் அவர் திக்குமுக்காடிப் போயிருந்தார்.

அவரது சந்தோஷத்தில் கொஞ்சம்கூடப் பாதிக்கப் படாதவளாக அவரை வெறுமையுடன் பார்த்தாள் பவித்ரா.

''என்னம்மா இப்படிப் பார்க்கிற? தினகரன் வந்திருக் கிறான்ம்மா..''

''அப்படியா?''

உயிரில்லாத வார்த்தையை உதிர்த்த மகளைக் கவலையுடன் பார்த்தார் வாசவன்.. 'வெண்ணெய் திரள்கை யில் தாழி உடைந்துவிடுமோ...'

''ஏம்மா.. நான் என்ன சொல்கிறேன்னு காதில் வாங்கிட்டுத்தான் பேசறயா.. தினகரன் வந்திருக்கிறான்னு சொன்னேன்ம்மா..''

''வரட்டுமேப்பா..''

''ஏம்மா... புத்தியோடதான் பேசுகிறாயா.. கோட்டை யூர் ஜமீன் வம்சத்தில் பெண்ணைக் கொடுப்பதை உன் பெரியப்பா லட்சியமா வைத்திருந்தார். அவர் நினைத்தது நடக்கலை. நான் நினைத்தது நடந்திருக்கு. எனக்கு அது கை கூடி வந்திருக்கு. அதிர்ஷ்டக் காற்று நம் பக்கம் அடிச்சிருச்சுன்னு நானே ஆனந்தத்தில் ஓடிவரேன். நீ என்னவோ இது சாதாரண விஷயம் போல அப்படியான்னு கேட்டு வைக்கறியே.. வந்திருக்கிறது தினகரன்ம்மா.. கோட்டையூர் ஜமீன் வம்சத்தின் இளைய வாரிசு...''

''அதுக்கு என்னை என்னப்பா செய்யச் சொல்கி றீங்க..''

வாசவனின் முகம் கடுமையாக மாறியது. அவர் மகளின் முகத்தை உறுத்துப் பார்த்தார்.

''என்னம்மா பழக்கம் இது.. பெரியவர்களின் வார்த் தையை மதிக்காமல் இருக்க எங்கு கற்றுக் கொண்டாய்?''

''அப்பா..''

''ஒன்றை நினைவில் வைத்துக் கொள் பவித்ரா.. நான் உனக்கு அப்பான்னு சொல்லிக் கொள்வதைவிட...



தினகரனுக்கு மாமனார்னு சொல்லிக்கத்தான் ஆசைப்படு கிறேன்.. அதுதான் எனக்குப் பெருமையும்கூட.. தினகரன் நம் வீட்டிற்கு வந்திருக்கிறான். வாங்கன்னு வரவேற்றால்.. பவித்ரா எங்கே மாமா.. நான் அவளைப் பார்க்கத்தான் வந்திருக்கிறேன்னு உரிமையோடு கேட்கிறான். இது எனக்கு எதிர்பாராமல் கிடைத்திருக்கும் சந்தோஷம். இது நிலைக்கணும்.. சொல்லிட்டேன்..''

அவர் படபடத்துக் கொண்டிருக்கும்போதே.. தினகரன் அங்கே வந்துவிட்டான். அவசரமாக எழுந்து நின்ற பவித் ராவை அவன் காதலுடன் பார்க்க... அவனது பார்வையை வாசவன் திருப்தியுடன் பார்த்தார்.

## 116

*நீ கிடைத்தபின்னும் கிடைக்காததைப்போல..*
*என் நெஞ்சகமே தவிப்பதையே...*
*என்னவென்று நான் சொல்ல?*

தினகரன், வாசவன் வீட்டிற்கு வருவதே அபூர்வம். அப்படி வந்தவன் ஹாலில் உள்ள சோபாவில் மிதப்பாக அமர்ந்து கால்மேல் கால் போட்டுக் கொண்டு குசலம் விசாரிக்காமல் வீட்டின் பின்பக்க முற்றத்திற்கே வந்து விட்டதைக் கண்டு உள்ளம் குளிர்ந்து போனார் வாசவன்.

''ஹி.. ஹி.. நான் சொல்லலையா பவிம்மா.. மாப்பிள்ளை வந்தவுடன் உன்னைத்தான் தேடினாருன்னு..''

தினகரன் காதலுடன் பவித்ராவைப் பார்த்து.. அவள் கண்களில் பதிலுக்கு காதலைத் தேடி எதிர்பார்ப்புடன் நிற்கையில்.. பவித்ரா தனது பார்வையை விலக்கிக்

கொண்டாள். அவன் முகத்தில் ஏமாற்றம் படர்ந்தது. நெற்றி சுருங்கியது. புருவங்கள் முடிச்சிட.. அவள் முகத்தைப் பார்த்தான். எப்போது அவனைக் கண்டாலும்.. அவள் முகத்தில் தோன்றி நிற்கும் நாணம் அன்று இல்லை. மாறாக சஞ்சலம் இருந்தது. அவனைக் கண்டதும் அவளது உடலில் தோன்றும் நடுக்கமும் அன்று இல்லை. ஒரு சோர்வு தெரிந்தது.

''உடம்பு சரியில்லையா பவி..'' என்றான் கவலையுடன்.

''அதெல்லாம் இல்லை மாப்பிள்ளை..'' என்றார் வாசவன் அவசரமாக.

''சோர்ந்து தெரிகிறாயே..''

''மதியத் தூக்கம் இன்னும் போகவில்லை மாப்பிள்ளை.''

''எனிதிங் ராங்?''

''நத்திங் ராங் மாப்பிள்ளை..''

''நீங்கள்தான் பவித்ராவா?''

''ஹி.. ஹி.. அவளுக்காக நான் பேசினேன் மாப்பிள்ளை..''

''ஏன்.. அவளுக்கு வாயில்லையா? அவள் பேச மாட்டாளா?''

''அது வந்து மாப்பிள்ளை...''

''மாமா.. நான் பவித்ராவுடன் தனியாகப் பேச வேண்டும்..''

''அதுக்கென்ன... தாராளமாகப் பேசுங்க. பவி.. மாப்பிள்ளையை மாடிக்கு கூப்பிட்டுக் கொண்டு போம்மா...''

''அதுக்குப் பதில் நீங்க உள்ளே போகிறீங்களா மாமா..''

''அப்படியா சொல்கிறீங்க மாப்பிள்ளை..'' அப்போதும் போகாமல் வாசவன் தயங்கி நிற்க..



''அப்படித்தான் சொல்கிறேன்..'' என்று கடுமையுடன் சொன்னான் தினகரன்.

ஊரில் உள்ள தெய்வங்களையெல்லாம் அழைத்து.. மகள்.. தினகரனிடம் ஒழுங்காகப் பேசித் தொலைக்க வேண்டும் என்று வேண்டியவாறு அங்கே இருந்து நகர மனமில்லாமல் நகர்ந்தார் வாசவன்.

தனிமையில் விடப்பட்ட பவித்ராவின் முகத்தையே கூர்ந்து பார்த்தான் தினகரன்.

'இப்படி ஒரு நாளுக்காகத்தானே இத்தனை நாளாய் தவமிருந்தேன்..' பவித்ராவின் கண்கள் கலங்கின.

'இதற்காகத்தானே மாலினியின் மனதை கூறு போட்டாய்?' என்று அவளது மனம் கேள்வி கேட்டது.

வாசவனின் கனவும் பவித்ராவின் கனவும் ஒன்றுதான். ஆனால், நினைவுகளில் வேறுபட்டவை.

வாசவனின் கனவு.. கோட்டையூர் ஜமீன் வம்சத்தில் பெண்ணைக் கொடுக்க வேண்டும் என்பது.

பவித்ராவின் கனவோ தினகரனின் இதயத்தில் இடம் பிடிக்க வேண்டும் என்பது.

இன்று அவளின் கனவு பலித்துவிட்டது. ஆனால்.. அதற்கான சந்தோஷம்தான் அவள் மனதில் ஏற்படாமல் போய்விட்டது.

''என்ன விஷயம் பவித்ரா?'' தினகரன் உரிமையுடன் வினவினான். அதற்கு முன் அவனிடம் சகஜமாகப் பேசிப் பழக்கமில்லாத பவித்ரா.. மெல்ல தலைநிமிர்ந்து அவன் விழிகளைப் பார்த்தாள்.

உயிர்ப்பில்லாத அந்தப் பார்வையைக் கண்டதும் அவன் துணுக்குற்றான்.

''பவித்ரா..'' என்றான் திகைப்பாக.

''ம்ம்ம்..''

''ஏன் இப்படி இருக்கிறாய்?''

''எப்படி இருக்கிறேன்?''

''எதையோ பறிகொடுத்தவளைப் போல இருக்கிறாய்..''

'பறிகொடுத்தவளைப் போல....'

அந்த வார்த்தையைக் கேட்டதும் மீண்டும் கண்கலங்கினாள் பவித்ரா.

''பறிகொடுத்துவிட்டுத்தான் நிற்கிறேன்..'' உடைந்த குரலில் கூறினாள்.

தினகரனுக்கு அவள் ஏன் இந்த அளவுக்கு துக்கப் படுகிறாள் என்று புரியவில்லை. அவனுடைய காதலுக்காக ஏங்கியவளுக்கு அவனது காதல்தான் கிடைத்துவிட்டதே.. இன்னும் எதற்காக இந்தத் துக்கம்?

''எனக்காக ஏங்கினாய்..''

''ம்ம்ம்..''

''நான்தான் உனக்கு கிடைத்து விட்டேனே...''

''ஆனால்.. இதற்கு பணயமாக.. கிடைப்பதற்கரிய ஒரு நட்பை இழந்துவிட்டேனே...''

''என்ன சொல்கிறாய்.. எனக்கொன்றும் புரியவில்லை..''

''புரியாது அத்தான்.. உங்களுக்கு ஒன்றும் புரியாது. அது புரியும்போது என்னை நீங்கள் வெறுத்து விடுவீர்கள்..''

''முட்டாள்.. இதுதான் உனது பயமா.. உன் கலக்கத்திற்கு இதுதான் காரணமா? நீ தேவதை பவித்ரா.. உன்னைப் போய் நான் வெறுப்பதா?''

''உண்மை தெரியும்போது.. தேவதையாக உங்கள் கண்களுக்கு இப்போது தெரிபவள்.. பிசாசாக தெரிவேன் அத்தான்..''



''நீயே உன்னைக் குறைவாய் பேசாதே.. என்ன நடந்ததுன்னு சொல்லு..''

பவித்ரா சொன்னாள்.. ஒளிவுமறைவின்றி அனைத்தையும் சொன்னாள்.

''உங்கள் மேலிருந்த காதல் எனக்குள் பொறாமையைத் தூண்டிவிட்டு விட்டது அத்தான். நான் மாலினியை சந்தேகப்பட்டு விட்டேன். அதையும் பெரியத்தானிடம் போய் கேட்டுவிட்டேன்..''

''பெரியண்ணனிடம் கேட்டாயா.. சே.. என்ன பெண் நீ... மாலினி என் அண்ணி... எனக்குத்தான் அது தெரியாது. உனக்குமா அது தெரியாது?''

''தெரியும்.. அதை ஏன் அவள் உங்களிடம் தெரியப் படுத்தவில்லை என்று பெரியத்தானிடம் கேட்டுவிட்டேன்..''

''இவ்வளவு பேசுகிறவள்.. நீ வந்து என்னிடம் சொல்லியிருக்க வேண்டியதுதானே.. உனக்கென்ன வாயில்லையா.. உன் காதலைச் சொல்லத்தான் உனக்கு தைரியம் பத்தாது.. மாலினியின் காதலைப் பற்றிச் சொல்லவுமா தைரியம் பத்தாது?''

''அதைச் செய்திருக்க வேண்டும். அதைச் செய்யாமல் விட்டுவிட்டு அவள் மேல் பழியைப் போட்டு விட்டேன்..''

தினகரன் யோசனையுடன் குறுக்கும் நெடுக்குமாக நடந்தான். பவித்ரா நீதிபதியின் முன் தீர்ப்பை எதிர்பார்த்து காத்திருக்கும் குற்றவாளி போல தலைகுனிந்து நின்றாள்.

தினகரனின் நடை நின்றது. அவன் அவள் முகத்தைப் பார்த்தான். எப்போதும் பார்க்கும் பவித்ராவின் முகமாக அது அப்போது இல்லை. பவித்ராவின் முகம் தினகரனுக்கு அன்றுதான் மலர்ந்த பூவை நினைவுபடுத்தும். இன்றோ வாடிய பூவாக கண்கலங்கி நின்றாள் அவள்.

'இப்படியே இவளை மறுகவிட்டால்.. சருகாகி விடுவாள்..' தினகரனின் மனம் அவள் மேல் இரக்கம் கொண்டது.

''உன் மீது தவறில்லைன்னு என்னால் சொல்ல முடியாது பவித்ரா... நீ அந்தக் காரியங்களைச் செய்திருக்கக் கூடாது...''

''ம்ம்ம்..''

''காதலிக்கத் தெரிந்தவளுக்கு அதை வெளிப்படுத்தவும் தெரிந்திருக்க வேண்டும். அதை விட்டுவிட்டு.. அடுத்தவர்களை அந்தக் காரியத்தில் ஈடுபடுத்தியிருக்கக் கூடாது..''

''ம்ம்ம்..''

''ஈடுபடுத்தியவள் பேசாமல் வாயை மூடிக் கொண்டிருந்திருக்க வேண்டும். உதவி செய்ய வந்தவங்களின் மேல் சந்தேகப்பட்டிருக்கக்கூடாது..''

''ம்ம்ம்..''

''சந்தேகத்தை மனதில் புதைத்துக் கொண்டு விலகிப் போயிருந்திருக்க வேண்டும். அதை விட்டு விட்டு பழிவாங்கும் நடவடிக்கையில் இறங்கியிருக்கக் கூடாது. தேவதைகள் பழிவாங்க மாட்டார்கள்..''

இதுவரை அவன் பேசியதை பொறுமையாக கேட்டுக் கொண்டிருந்த பவித்ரா இதைக் கேட்டதும்.. கசப்புடன் சிரித்தாள்.

''நான் தேவதையில்லை அத்தான்..''

''தேவதையாகத்தான் இருந்தாய். என்னைப் போல ஒருவனை காதலித்து தொலைத்துவிட்டதால் இந்த நிலைமை உனக்கு வந்துவிட்டது. இல்லாவிட்டால் நீ தேவதையாகத்தான் இருந்திருப்பாய்...''

''என்னை உயர்வாக பேச வேண்டாம் அத்தான். அந்தத் தகுதி எனக்கில்லை. நான் தேவதையில்லை. ராட்சஸி...''

எனக்கு என்றுமே நீ தேவதைப் பெண்தான். வருத்தப்படாதே. செய்துவிட்ட காரியத்தை ஒளிவுமறைவில்லாமல் என்னிடம் சொன்னாயே.. அப்போதே நீ உயர்ந்து விட்டாய்...''



''அத்தான்..''

''மற்றவங்க உன்னைச் சுயநலமானவள்னு நினைக்கலாம்.. நான் நினைக்கமாட்டேன். காதல் பொதுநலம் பார்க்காது. சுயநலம் மட்டும்தான் பார்க்கும். அப்படிப் பார்க்கலைன்னா அது காதல் இல்லை...''

இப்போது பவித்ரா விசும்பி அழ ஆரம்பித்தாள். தினகரன் ஆதரவாக அவளை இழுத்து அணைத்துக் கொண்டான்.

அவனது காலடி நிழல் கிடைக்குமா என்று ஏங்கியவளுக்கு.. அவனது அன்பான அணைப்பே கிடைத்து விட்டது.

பசித்த வயிறுக்கு பழைய சோறே அமிர்தம்.. இங்கே தேவாமிர்தமே கிடைத்தும் அதை அள்ளிப் பருக முடியாத வறியவளாக பவித்ரா ஆகிப் போனாள்.

''அழாதேம்மா.. நீ நினைத்திருந்தால் இதையெல்லாம் என்னிடம் சொல்லாமல் மறைத்திருக்கலாம்.. பெரியண்ணா எந்தக் காலத்திலும் தம்பியின் மனைவியாக வரப் போகிறவளைப் பற்றி தம்பியிடம் குறைவாகப் பேசும் வேலையைச் செய்ய மாட்டார். மாலினி அண்ணியும் அன்றைக்கும் சரி.. அடுத்து வந்த நாள்களிலும் சரி.. நீ சொன்னவைகளைப் பற்றி ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை..''

''அவள் சொல்லமாட்டாள்.. நட்புக்காக தாமதத்தை அவள் காப்பாற்றினாள். நான் காப்பாற்றவில்லை. காட்டிக் கொடுக்காதது நட்பு. அப்படிப்பட்ட உயர்ந்த நட்பை அவள் எனக்குக் கொடுத்தாள். நான்தான் அதைக் காப்பாற்றி வைத்துக் கொள்ளாமல் கைநழுவ விட்டு விட்டேன்..''

''இதுக்கு என்ன சொல்வதுன்னே எனக்குத் தெரிய வில்லை பவித்ரா..''

''நீங்க என்ன சொல்ல முடியும்.. அவள் என் காதலைப் பற்றி உங்களிடம் சொல்லவில்லைன்னு குற்றம் சொன்னேனே.. நான் அவளைச் சொல்லச் சொல்லியிருந் தால்.. அவள் கட்டாயம் சொல்லியிருப்பாள். நான் அதைச் சொல்லவில்லை. கடிதத்தை கொடுக்கும்போது ஸ்வேதா கூட இருந்தாளாமே...''

''யெஸ்.. மாலினியண்ணி என்னிடம் கடிதத்தை கொடுத்துவிட்டுப் பேச ஆரம்பிச்சாங்க. கரெக்டா அந்த வினாடியில் ஸ்வேதா அங்கே ஆஜராகிவிட்டாள். அது தான் எப்படின்னு எனக்குப் புரியவே இல்லை...''

அவளையெல்லாம் புரிந்துகொள்ளணும்னு நமக்கு அவசியமில்லை..''

''யூ ஆர் கரெக்ட்.. கழுகுக்கு மூக்கு வியர்த்ததைப் போல வந்து நிற்கிறாளேன்னு நினைத்துக்கிட்டே கடிதத்தை வாங்கிக்கிட்டேன். பேச ஆரம்பித்த அண்ணியும்.. கடிதத் தைப் படிச்சுப் பாருங்க. புரியும்னு சொல்லிட்டுப் போயிட் டாங்க..''

அன்று இரவு தோட்டத்தில் மாலினியை வார்த் தைக்கு வார்த்தை கண்ணம்மா என்று அழைத்து வைத்த வன்.. இன்று மரியாதையுடன் 'அண்ணி..' என்று கூறுவதை வியப்புடன் கவனித்தாள் பவித்ரா.

எல்லோரும் உண்மையைத் தெரிந்துகொண்டவுடன் உடனடியாக மாறிவிட்டார்கள். அவரவர்களின் நிலைக்கு திரும்பி விட்டார்கள்.

அவளால்தான் அது முடியவில்லை. திரும்பி வர முடியாத ஒருவழிப் பாதையில் பயணித்து விட்டாள்.

'கண்ணம்மா' என்று அழைத்த தினகரனால்



மாலினியை 'அண்ணி' என்று அழைத்து மரியாதை காட்ட முடியும்.

ஆனால்.. அந்தக் கோட்டையூர் ஜமீன் குடும்பத்தின் ஆணிவேராகவும் அஸ்திவாரமாகவும் இருக்கும் அந்தக் குடும்பத்தின் தலைவனான பிரபாகரனை இனி பவித்ரா வினால் முகம் நிமிர்ந்து பார்க்க முடியுமா?

பழையபடி அவனிடம்.. 'பெரியத்தான்' என்று அழைத்து உரிமையுடன் பேசத்தான் முடியுமா?

ஆலமரம் போல அந்தக் குடும்பத்திற்கு நிழல் கொடுத்துக் கொண்டிருப்பவன் அவன்.

அவனது தம்பிக்கு மனைவியாக.. அந்த நிழலில் இளைப்பாற பவித்ராவினால் இனி முடியுமா?

அவனது மனைவியாக வரப் போகிறவளைப் பற்றி பவித்ரா பேசிய வார்த்தைகளை ஆயுளுக்கும் பிரபாகரன் மன்னிக்க மாட்டான். மறக்கவும் மாட்டான்.

அந்த நெருடலோடு அவனது குடும்பத்தில் மருமக ளாக பவித்ரா வாழ்வது சாத்தியமில்லாத ஒன்று.

மாலினியின் நட்பு.. இனி ஒரு நாளும் பவித்ராவிற்கு திரும்பிக் கிடைக்கப் போவதில்லை. அதைப்போல பிரபா கரனின் பாசமும் அவளுக்குக் கிடைக்கப் போவதில்லை.

117

*எல்லோரும் சிரித்திருக்க...*
*நான்மட்டும் அழும் நிலைமை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

கிடைப்பதற்கரிய நட்பையும் பாசத்தையும் தொலைத்துவிட்டதைப் பவித்ரா உணர்ந்தாள். இந்த

உலகில் எவ்வளவுதான் தேடினாலும் கிடைக்காதது உண்மையான அன்பும் பாசமும் நட்பும். அவை அனைத்தும் பிரபாகரனிடமிருந்தும் மாலினியிடமிருந்தும் அவளுக்குக் கிடைத்தன. அதை அவளே உடைத்து சுக்கு நூறாக்கி விட்டாள். இனி அவளை நினைத்துப் பயன் என்ன இருக்கப்போகிறது.

அன்போ.. நட்போ.. பாசமோ தானாக கிடைக்க வேண்டிய ஒன்றல்லவா? அதை வேண்டிப் பெற முடியுமா? இயல்பாக மனதில் சுரக்கவேண்டிய இந்த உணர்வுகளை இரந்து பெற முடியுமா?

பவித்ரா மனம் குமுறினாள். நந்தவனத்து ஆண்டியைப் பற்றிய பாடலை.. சிறுவயதில் அவள் படித்திருக்கிறாளே.. இருந்தும் ஏன் அதை மறந்து தொலைத்தாள்..

*'நந்தவனத்தில் ஒரு ஆண்டி - அவன்*
*நாலாறு மாதமாய் குயவனை வேண்டி...*
*கொண்டு வந்தானொரு தோண்டி - அதைக்*
*கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி...'*

பவித்ராவின் நிலையும் அந்த ஆண்டியின் நிலையும் வேறு வேறல்ல. இரண்டும் ஒன்றுதான். பவித்ரா ஏக்கப் பெருமூச்சு விட்டாள்.

''ஏன் இப்படி உன்னையே வருத்திக்கற பவித்ரா?''

''என்னால் முடியவில்லை அத்தான்..''

''எது முடியவில்லை.. என்னைக் காதலிக்க முடியவில்லையா?''

தினகரனின் கேள்வியைக் கேட்டதும் சட்டென்று விழியுயர்த்தி அவனது பார்வையோடு தன் பார்வையைக் கலந்தாள் பவித்ரா.

அடிபட்ட பறவையின் வேதனையும் எல்லையில்லாத காதலையும் ஒருசேர அந்தப் பார்வையில் கண்ட



தினகரன், மனம் தாளாமல் அவளைத் தன்னுடன் இறுக்கிக் கொண்டான்.

மனம் நிறைந்திருந்தவனின் மார்பில் முகம் புதைத்திருந்தும் பவித்ராவிற்கு எதிர்பார்த்த மன அமைதி கிட்டவில்லை. அதை உணர்ந்தவனாக தினகரன் அவளது காதோரம் கூறினான்..

''மறந்துவிடு பவித்ரா.. எல்லாத்தையும் மறந்து விடு..''

''முடியவில்லையே அத்தான்..''

''உன் வார்த்தைகளால் எந்தவிதப் பாதிப்பும் வரவில்லை பவித்ரா..''

''ஒருவேளை வந்திருந்தால்.. மாலினி ரோஷக்காரியென்பதை உடனடியாக நிரூபித்தாளே அத்தான்.. வேலையை ரிஸைன் பண்ணிவிட்டு பெரியத்தானிடம் சொல்லிக்காம மார்த்தாண்டத்தை விட்டுப் போய்விட்டாளே..''

''உனக்குப் பெரியண்ணனைப் பற்றித் தெரியாது. இந்த உலகத்தின் எந்த மூலைக்கு அண்ணி சென்றிருந்தாலும் தேடிப் பிடித்து அவங்களை சிறையெடுத்துக்கிட்டு வராம விடமாட்டார்..''

''ஒருவேளை பெரியத்தான் அப்படிச் செய்யாமல் விட்டிருந்தால்? நான் அவரிடம் கேட்ட வார்த்தைகளை நீங்கள் கேட்கவில்லை. அந்த வார்த்தைகளின் தன்மை அப்படிப்பட்டது. அதில் ஒரு நியாயம் இருப்பதாக அவர் நினைத்திருந்தால்?''

''அப்படித்தான் எதுவும் நடக்கவில்லையே...''

''ஒருவேளை நடந்திருந்தால்?''

''இப்படி.. ஒரு வேளை.. ஒரு வேளைன்னு நடக்காதவைகளைப் பற்றியே பேசிக் கொண்டிருப்பது புத்திசாலித்தனமில்லை பவித்ரா..''

''நான் புத்திசாலியில்லை அத்தான்.. முட்டாள்..''

''அதுதான் எனக்குத் தெரியுமே. எந்தப் புத்திசாலி யாவது ஸ்வேதாவின் வார்த்தைகளைக் காதில் போட்டுக் கொள்வாளா?''

''சசு.. நானாவது.. அவள் வார்த்தைகளைக் கேட்டுக் கொள்வதாவது. நான் என்றைக்குமே அவளை நம்பிய தில்லை அத்தான்..''

''அன்றைக்கு மட்டும் ஏன் அவளை நம்பினாய்?''

''அவளை யார் நம்பியது.. எனக்குத்தான் உங்களைத் தெரியுமே...''

''என்ன தெரியும்?''

''மாலினியின் மேல் உங்களுக்கு ஒரு மயக்கம் இருந்ததைப் பற்றித் தெரியும்...''

இதைக் கேட்டதும் தினகரன் சங்கடமுற்றான். அதை இல்லையென்று மறுக்க அவனால் முடியவில்லை.

''பவித்ரா.. மாலினி எனக்குப் பெரியண்ணி..''

''இப்போதுதான் அந்த உறவுமுறை... இதுக்கு முன்னால?''

''போனதை விட்டுவிடேன்.. ப்ளீஸ்...''

''விட்டுவிடத்தான் நினைக்கிறேன் அத்தான். மாலினியை மனதார நீங்க அண்ணியென்று சொன்ன பின்னால் நான் இதைப் பேசக்கூடாது.. பேசவும் மாட்டேன்.''

''அப்பாடி... காப்பாத்திட்ட பவி..''

''ஆனால்....''

''இன்னும் என்ன ஆனால்னு ராகம் போட்டு என்னைக் கலவரப்படுத்தறியே பவித்ரா..''

''என் கண்ணார உங்களின் மயக்கத்தைக் கண்ட பின்னால்.. ஸ்வேதாவின் வார்த்தைகளை அலட்சியம் செய்ய என்னால் முடியவில்லை...''



''உனக்கு இது ஒரு சாக்கு..''

''நிச்சயமாக இல்லை.. நான் என் காதலைச் சொல்லத் தான் தோட்டத்தில் உங்களைத் தேடி வந்தேன். நீங்க பக்கத்தில் நிற்கும் என்னை விட்டுவிட்டு பால்கனியில் நின்றுகொண்டிருந்த மாலினிக்கு கையாட்டினீங்க...''

''ஏய்ய்... அதையெல்லாமா நினைவில் வச்சிருக்க?''

''அது மட்டும்தானா... மாடி ஹாலில் என்னிடம் சுவாரஸ்யமாக பேசிக்கிட்டு இருந்தவர்.. மாலினி வந்த உடன் என்னை அம்போன்னு விட்டுவிட்டு அவளுடன் பேச ஆரம்பித்தீங்க...''

''என்ன பவித்ரா இது...''

''இன்னும் இருக்கு அத்தான்.. திருவனந்தபுரம் போயிருந்தப்போ.. கோவளம் பீச்சில்... என்னை மறந்து விட்டு வெள்ளைக்காரிக பின்னால் ஜொள்ளு விட்டுக் கிட்டு போய்விட்டீங்க..''

''அது ஒரு குற்றமா பவி.. இது வாலிப வயசு...''

''ஓஹோ.. அப்படிப்பட்ட வெள்ளைக்காரிக பக்கத் தில் இருக்கும்போதே மாலினியின் குரலைக் கேட்டதும் அவங்களை மறந்துட்டு மாலினிகூடப் பேச ஓடிவந்தீங்க...''

''இருந்தாலும் உனக்கு இவ்வளவு ஞாபகசக்தி இருக்கக்கூடாது பவித்ரா. எனக்கு பெண்டாட்டியாக ஆகப் போகிறவளுக்கு இவ்வளவு புத்திசாலித்தனமும் ஞாபக சக்தியும் இருக்கக் கூடாதே... அது தப்பாச்சே...''

''இதிலிருந்து எனக்கொரு விஷயம் மட்டும் தெளி வாகப் புரிந்தது அத்தான்..''

''இது வேறயா.. நீ கலங்கியிருக்கிற நிலைமை யிலேயே என்னைக் கலங்கடிக்கிறவ... இதில தெளிவாக வேறு புரிந்து வைத்தால் என் கதி என்ன ஆவது? இது எங்கே போய் முடியப் போகுதோ....''

''உங்கள் மனதிலிருந்து என்னை மறக்க வைக்கிற

சக்தி வேறு எந்த அழகான பெண்ணுக்கும் உண்டு. ஆனால்.. எந்தவொரு அழகான பெண்ணையும் மறக்க வைக்கிற சக்தி மாலினியிடம் மட்டும்தான் உண்டு..''

''ஸ்டாப் இட் பவித்ரா.. அவங்க இப்ப என் அண்ணி..''

''நான் நேற்றுக் கதையைப் பேசினேன்..''

''நேற்றிலேயே நீ இருப்பது நல்லதல்ல..''

''நிச்சயமாய்.. நான் பெரியத்தானிடம் கோபப்பட்ட தற்கான காரணத்தைச் சொன்னேன்..''

''நீ என்னிடம்தானே கோபப்பட்டிருக்கனும்.. நான் தானே தவறு செய்தவன்? அதை விட்டுவிட்டு ஒரு பாவமும் அறியாத என் பெரிய அண்ணனிடமும் அண்ணி யிடமும் ஏன் கோபப்பட்டாய்?''

''உங்களைத்தான் காதலித்து தொலைத்துவிட் டேனே..''

''அந்த உரிமை என்மேல் உனக்கிருந்துச்சில்ல.. அப்புறமும் ஏன் அவங்களிடம் கேள்வி கேட்டாய்?''

பவித்ரா மௌனமானாள். எரிச்சலடைந்திருந்த தினகரன்.. மெல்ல கோபம் தணிந்தான். பவித்ராவின் முகத்தைப் பார்த்தான். அவன் மனம் கனிந்தது.

இதுவரை அவனிடம் பெண்கள் மயக்கத்தைத்தான் சொல்லியிருக்கிறார்கள். காதலைச் சொல்லவில்லை. முதன்முறையாக அவனை உயிருக்குயிராய் காதலித்த ஒரு பெண்ணை அவன் சந்தித்து இருக்கிறான். அவளின் மனம் நோவதை அவனால் பொறுத்துக் கொள்ள முடிய வில்லை.

''ஏய்ய்.. இங்கே வா..''

அவன் கரம் நீட்டி அழைக்க.. அவள் பூக்குவியலாக அவனது கைக்குள் புகுந்து கொண்டாள்.

''என்னைப் பார்..''



பார்த்தாள்.

''நான் சொல்வதைக் கேள். ஒரு வார்த்தை... நீ உன் காதலைப் பற்றி என்னிடம் சொல்லியிருந்தால் இது நடந்திருக்காது. நீ சொல்லவில்லை. அதனால் நான் வழக்கம் போல ஜொள்ளு விட்டு விட்டேன்..''

பவித்ரா மனச்சிணுங்கலுடன் கண் மூடிக்கொண்டாள்.

''நடந்ததை மறந்து விடு.. பெரியண்ணனுக்காக மாலினியைப் பெண் கேட்க இந்த வாரம் நாங்க எல்லோ ரும் சென்னைக்குப் போகிறோம்..''

''நிஜமாகவா..''

பவித்ராவின் முகம் மகிழ்ச்சியில் மலர்ந்தது. அவளது தோழியின் காதல் ஜெயித்துவிட்டதில் அவளுக்கு எல்லை யில்லாத சந்தோஷம் ஏற்பட்டது.

''நிஜமாகத்தான்..''

அவளது உண்மையான மகிழ்ச்சியைக் கண்ட மன நிறைவில் தினகரன் முதன்முதலாக பவித்ராவின் நெற்றி யில் முத்தமிட்டான்.

அதை எதிர்பார்த்திராத பவித்ரா, உடல் நடுங்கிப் போனாள். நிற்கச் சக்தியில்லாமல் ஒரு கொடியைப் போல தொய்ந்து தினகரனின் மேல் சாய்ந்தாள்.

அதுவரை உணராத ஓர் இன்ப உணர்வை தினகரன் அன்று உணர்ந்தான். அவன் பெண்களை அறியாதவன் அல்ல.. ஆனால், காதல் கொண்ட பெண்ணை அவன் அறிந்ததில்லை.

அன்றுதான் அப்படிப்பட்ட அற்புத உணர்வை அவன் அறிந்தான். கொடியாகி தன்மேல் படர்ந்திருந் தவளின் கன்னத்தில் முத்தமிட்டு காதோரமாக அவன் பேசினான்.

''அண்ணனின் கல்யாணம் முடிந்தவுடன் நம் கல்யா ணம்தான் பவித்ரா...''

அதுவரை கிறங்கிப் போனவளாக அவளது கைப்பிடியில் அடங்கியிருந்த பவித்ரா... அவனிடமிருந்து விலக முயன்றாள்.

''ஏன் பவித்ரா?''

''வேண்டாம்..''

அவனுக்குள் கோபம் கனன்றது.. கண்கள் இடுங்க அவளைப் பார்த்தான்.

''எது வேண்டாம்.. நான் உனக்கு வேண்டாமா?''

''கல்யாணம் வேண்டாம்..''

தினகரனுக்கு கோபம் இன்னும் அதிகமாகியது.

''என்னோடு உனக்குக் கல்யாணம் வேண்டாமா?''

''வேண்டாம்..''

''பின்னே எவனைக் கட்டிக் கொள்ளப் போகிற?''

''கல்யாணமே எனக்கு வேண்டாம் அத்தான்..''

''முட்டாளாடி நீ... கல்யாணம் பண்ணிக்காம நீ இருந்துவிட முடியுமா?''

''நான் இருப்பேன்.. எனக்கு உங்க காதல் போதும். கல்யாணம் வேண்டாம்..''

''அடிவாங்கப் போகிற... இதுக்கு அர்த்தம் என்னன்னு தெரியுமா?''

''தெரியும்..''

''தெரிந்துமா சொல்கிற?''

''ஆமாம்..''

''உன்னை என்ன செய்வதுன்னே எனக்குத் தெரியலை பவி. சரி.. உனக்கு கல்யாணம் வேண்டாம். நானும் உன்னைப் போல இருந்துவிட முடியுமா? என் வீட்டில் அதுக்கு விட மாட்டாங்களே...''



''நீங்க கல்யாணம் செய்துக்கங்க..''

''யாரைக் கல்யாணம் பண்ணிக்க?''

''இந்த உலகத்தில் பவித்ரா மட்டும்தான் பெண்ணுன்னு இல்லை. கோடிக்கணக்கில் பெண்கள் இருக்கிறாங்க..''

''அப்படியா.. இன்னொருத்தியைக் கட்டிக்கிட்டு நான் குடும்பம் நடத்தவா?''

''ம்ம்ம்..''

''நீ அதைத் தாங்கிக் கொள்வாயா?''

பவித்ரா பதில் பேசவில்லை.. அவள் முகம் கூம்பி விட்டது. தினகரன் அவளை மேலும் சீண்டினான்.

''அப்ப.. நீ என்னைக் காதலிக்க மாட்டாயா?''

''காதலிப்பேன்...''

''நானும் உன்னைக் காதலிக்க நினைத்தால்?''

''காதலிங்க...''

இப்படிச் சொன்னவளை ஆச்சரியத்துடன் பார்த்தான் தினகரன்.

118

*உன்னைக் கண்டவுடன் என் மனது..*
*ரகசியமாகப் பாடுவதையே...*
*என்னவென்று நான் சொல்ல..?*

''என்னடி சொல்கிற.. கல்யாணம் பண்ணிக்க மாட்ட.. ஆனால், காதலிக்க மட்டும் செய்வாயா?''

பவித்ரா பதில் சொல்லாமல் தினகரனின் கையை

வளைத்துப் பிடித்து அவனது தோளில் மேல் சாய்ந்து கொண்டாள்.

அவளின் அந்தச் செய்கை தினகரனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவன் அவளது உச்சியில் இதழ் பதித்தான். அவனது மனம் அவளது காதலைக் கண்டு தளும்பியது.

''ஏண்டி.. காதலிக்கு மனைவிங்கிற பெயர் கிடைக் காது..''

''எனக்கு அது வேண்டாம்..''

''வேறு என்னதான் வேண்டும்?''

''நீங்க வேண்டும் அத்தான்.. நீங்க மட்டும்தான் வேண்டும்..''

பவித்ரா கண் மூடிக் கூறினாள். தினகரன் அவளது காதலில் கிறங்கிப் போனான்.

''நான் வேண்டும்னா.. அதுக்கு கல்யாணம் வேண் டும் பவித்ரா..''

''என்னால் உங்களைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள முடியாது..''

''அதுதான் ஏன்.. என்னைப் பிடிக்கலையா?''

வேண்டுமென்றே தினகரன் கேட்டான். அவள் இமைக் காமல் அவனைப் பார்த்தாள்.

''இந்தப் பார்வைக்கொண்ணும் குறைச்சலில்லை.. காதலிப்பாளாம்.. கல்யாணம் மட்டும் வேண்டாமாம். நல்ல குடும்பத்தில் பிறந்த பொண்ணு இப்படிப் பேசலாமா.. என்னைப் பிடிக்கலை.. தெரியாத்தனமாய் காதல் கடிதம் கொடுத்து விட்டேன்னு சொல்கிறதா இருந்தால் சொல்லு. உன் அப்பாவிடம் பேசி.. என்னைவிட பெட்டராக உன் மனதிற்கு பிடித்த மாப்பிள்ளையாக நான் பார்க்கச் சொல் கிறேன்..''



''உங்களைத் தவிர வேறு யாரையும் எனக்குப் பிடிக்காது..''

தினகரனின் மனதில் தென்றல் அடித்தது. ஆனால், பவித்ராவின் மனதில் புயலடித்துக் கொண்டிருப்பதை அவனால் உணர முடிந்தது.

''என்னதாண்டி உனக்குப் பிரச்னை?''

இதமாக வினவினான் தினகரன். கண்கலங்க முகத்தை திருப்பிக் கொண்டாள் பவித்ரா.

''எனக்கு நான்தான் பிரச்னை.. என் மனம்தான் பிரச்னை..''

''என்கிட்டக் கூடச் சொல்லமாட்டாயா?''

''உங்களிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல் வேன் அத்தான். ஒரு காலத்தில் நீங்க எனக்கு எட்டாக் கனியாக இருந்தீங்க..''

''இப்பத்தான் கிட்டத்துக் கனியாக வந்துவிட்டேனே.. நீதான் சும்மா இருந்தவனைக் கிளப்பி விட்டுவிட்டு தள்ளிப் போகிறாய்..''

''இப்படி ஒரு நாள் வருமான்னு ஏங்கித் தவம் கிடந் தேன்..''

''தவத்திற்கு பலனைத் தரத்தான் நினைக்கிறேன். நீதான் அதை மறுக்கிறாயே..''

''உங்களுக்காக.. உங்களின் இந்தக் காதலுக்காகத் தானே நான் என் சிநேகிதியின் மனச்சிறகை ஒடித்தேன்?''

''பவித்ரா!''

தினகரன் அதிர்ச்சியுடன் அழைத்தான். அவள் சுற்றிச் சுற்றி எங்கே வருகிறாள் என்று அவனுக்குப் புரிந்துவிட்டது.

''ஆமாம் அத்தான்.. உங்களின் மேலிருக்கும் இந்த அதிகப்படியான காதல்தான் என்னை அப்படியொரு சிநேகிதத் துரோகத்தை செய்ய வைத்தது. மாலினியின்

மனதை ஒடித்த இந்தக் காதலின் வெற்றி எனக்கு வேண்டாம்..''

இதற்கு என்ன பதிலைச் சொல்வது என்று தெரியாமல் திகைத்துப் போனான் தினகரன்.

''உங்களை அவள் பறித்துக் கொள்வாளோ என்கிற ஆங்காரம்தானே என்னை அப்படியொரு ராட்சஸத்தனமான கேள்விகளைக் கேட்கவைத்தது.. அப்படிப்பட்ட காதல் எனக்கு வேண்டாம்..''

''நான் என்ன செய்தேன் பவித்ரா.. எனக்கு எதற்கு இந்தத் தண்டனை?''

''தண்டனை உங்களுக்கு இல்லை அத்தான். எனக்குத்தான் தண்டனை கொடுத்துக் கொள்கிறேன்.. அவள் நல்லவள் அத்தான்.. மிகமிக நல்லவள். அவள் மேல் எப்படிப்பட்ட பழியைச் சுமத்தினேன்.. எதற்காக? உங்கள் மேல் நான் வைத்திருந்த வெறித்தனமான காதலுக்காக. அவள் மனதை பொசுக்கிவிட வைத்த இந்தக் காதல் எனக்கு வேண்டாம்..''

''நீ காதலை மறுக்கும்போது.. என்னையும் சேர்த்து மறுக்கிறாய் பவித்ரா. இது உனக்கு புரியவில்லையா?''

''தெரியும் அத்தான்.. தெரிந்தேதான் நான் இதைச் செய்கிறேன்..''

''மாலினியும் அண்ணனும் பிரிந்திருந்தால் நீ செய்வது சரி.. அவர்கள் சேர்ந்துவிட்ட பின்பு நீ இந்த முடிவை எடுப்பது சரியில்லை.. அவ்வளவுதான் நான் சொல்வேன்..''

''அவர்களின் காதல் ஜெயித்துவிட்டதற்கு அவர்களின் உண்மையான காதல்தான் காரணம். நான் காரணமில்லை. பிரித்து வைத்த நான்.. அவர்களைச் சேர்த்து வைக்க ஒரு துரும்பையாவது கிள்ளிப் போட்டேனா... இல்லையே...''



''நீ அண்ணியிடமும் அண்ணனிடமும் மன்னிப்பு கேட்டுவிடு..''

''அப்படிக் கேட்டுவிட்டால் எல்லாம் சரியாகிவிடுமா?''

''நீ வீண்பிடிவாதம் பிடிக்கிறாய்..''

''இல்லை.. காலத்திற்கும் அழியாத பழி புருட்டஸிற்கு வந்து சேர்ந்தது. அவன் எதைச் சொல்லியிருந்தாலும்.. அவன் செய்த அந்த சிநேகிதத் துரோகத்திற்கு ஈடு கட்டியிருக்க முடியுமா? மற்றவர்கள் கத்தியால் குத்தியதில்தான் சீஸருக்கு வலி ஏற்பட்டது. புருட்டஸை கத்தியுடன் பார்த்தபோதே அவன் உயிரை விட்டானே.. அது ஏன்? என் துரோகமும் அதைப் போலத்தான் அத்தான்..''

''பவித்ரா.. நீ இவ்வளவு நல்லவளாக இருந்து தொலைக்கக்கூடாது..''

''அதனால்தானே என்னை நம்பி.. எனக்காக கடிதத்தை எடுத்துக்கிட்டு உங்களிடம் மாலினி காதல் தூதாக வந்தாள். அவளுக்கு நான் பதிலுக்கு செய்த கைம்மாறு என்ன? அவளுடைய காதலனிடம் அவப்பெயர் வாங்கிக் கொடுத்ததுதானே?''

''நீ ஏதோ வேகத்தில் செய்துவிட்டாய்..''

''நீங்க எனக்காகப் பேசுகிறீங்க அத்தான். உங்க மனச்சாட்சியைத் தொட்டுச் சொல்லுங்க.. என் காரியத்தை நீங்க மன்னித்து மறப்பீங்களா? உங்களால் அது முடியுமா?''

'எப்படி முடியும்?' தினகரன் மௌனம் சாதித்தான்.

மென்மையானவள் என்று அவன் நினைத்திருந்த பவித்ரா செய்துவிட்டிருந்த காரியம்.. அவனை அதிர்ச்சிக்குள்ளாக்கியிருந்தது.

அவளே சொன்னதைப் போல ஒருவேளை பிரபாகரனும் மாலினியும் பவித்ரா செய்த அந்தக் காரியத்தால்

பிரிந்து போயிருந்தால்.. தினகரன், பவித்ராவை சும்மா விட்டிருக்க மாட்டான். கொன்றே போட்டிருப்பான்.

பிரபாகரனின் மேல் அவன் வைத்திருந்த பாசம் அத்தகையது. நல்லவேளையாக பிரபாகரனும் மாலினியும் ஒன்றுசேர்ந்துவிட்டார்கள். மாலினியிடம் மனம் விட்டுப் பேசி.. தினகரன் மன்னிப்பையும் பெற்றுக் கொண்டு விட்டான்.

அந்த ஒரு காரணத்தினாலேயே தினகரனால் அமைதி யுடன் பேச முடிந்தது.

''சொல்லுங்க அத்தான்.. உங்களால் அது முடியுமா?''

''உண்மையைச் சொல்வது சில சமயம் கஷ்டமான விஷயம் பவித்ரா. நீ என்னைக் காதலிப்பவள். அதற்காக வாவது என்மேல் கருணை காட்டு.. இனியொரு தரம் இந்தக் கேள்வியை என்னிடம் கேட்காதே..''

பவித்ரா அதைக் கேட்டதும் கசப்புடன் சிரித்தாள்.

''விடை சொல்ல முடியாத கேள்விகள்.. கசப்பான உண்மைகள்னு.. இந்த வாழ்க்கைதான் நம் முன் எத்தனை சவால்களை வைக்கிறது. பார்த்தீங்களா அத்தான்..''

''நீ விரக்தியில் பேசுகிறாய்..''

''விரக்திதான். கடைசிவரை என் மனதில் இந்த உணர்வுதான் இருக்கும். காதல் உணர்வு பொசுங்கி விட்டது..''

பவித்ரா பொங்கி அழுதாள். மனம் தாங்காத தினகரன் அவளை மார்போடு சேர்த்துக் கொண்டான். அணை உடைந்த வெள்ளமாக அழுது முடித்தவள் அவனை விட்டு விலகி நின்றாள்.

''உள்ளே போகலாம்.. வாங்க அத்தான்..''

''ஏன்.. யாராவது தேடி வந்து விடுவாங்களோன்னு நினைக்கறியா?''



''ஊஹூம்.. என் வீட்டு ஆள்களாவது.. உங்களோடு பேசும்போது தொந்தரவு செய்ய வருவதாவது..''

''பின்னே எதற்கு உள்ளே போகணும்கிற? இன்னும் கொஞ்ச நேரம் பேசிக்கிட்டு இருக்கலாமே..''

''வேண்டாம்.. அது என் மனதை பாதிக்கும்..''

''பாதித்தால்தான் என்ன?''

''என் முடிவில் நான் உறுதியாயிருக்கணும்னு நினைக் கிறேன்..''

''அதுக்காக பேசக்கூடக் கூடாதா?''

''என் மனசு அலைபாயும் அத்தான். இன்னும் கொஞ்ச நேரம் உங்க கூடவே இருக்கணும்னு ஆசைப்படும்.. அது நான் எடுத்திருக்கும் இந்த முடிவைப் பலவீனப்படுத்தும்..''

மனத்தை மறைக்காமல் அவள் பேசிய விதம் அவனைக் கவர்ந்தது. அவளின் துயரம்கூட ஒருவகை யில் அவனை ஈர்த்தது. தான் செய்த தவறிற்கு தண்டனை கொடுத்துக் கொள்ளும் அவளது குணம் அவனை வசீகரித் தது. அவளை விட்டு விலகுவதைப் போல கஷ்டமான ஒன்று இந்த உலகத்தில் இல்லை என்று அவன் நினைத் தான்.

அதை வாய்விட்டு அவளிடம் அவனால் சொல்ல முடியவில்லை. கேட்கும் மனநிலையில்தான் அவள் இல்லையே.

'விட்டுப் பிடிக்கலாம்..' என்ற முடிவுடன் அவன் வீட்டிற்குள் செல்லத் திரும்பினான்.

பவித்ராவின் மனம் அடித்துக் கொண்டது. அவன் கிளம்பப் போவதை அவளால் தாங்கிக் கொள்ள முடிய வில்லை.

''கிளம்பிட்டீங்களா அத்தான்..''

''ம்ம்ம்.. நீதானே போகச் சொன்னாய்..''

''என் நிலைமையைப் பார்த்தீங்களா அத்தான். கடல் நீருக்கு மத்தியில் குடிநீரைத் தேடும் நிலைமைக்கு வந்து விட்டேனே..''

''சும்மா புலம்பாதேடி.. உன் பெரியப்பாவின் மகள் ஸ்வேதா.. எங்கள் வீட்டில் எத்தனை கலகம் பண்ணி னாள்னு உனக்குத் தெரியுமா? பொழுது விடிந்து பொழுது போகும் வரை அவளுக்கு இதே வேலைதாண்டி.. உன்னைப் போல அவள் புலம்பிக்கிட்டா இருந்தா?''

''அவள் செய்த எதற்காவது மாலினி கலங்கியிருப் பாளா அத்தான்? பதிலுக்குப் பதில் பதிலடி கொடுத்துக் கிட்டே இருப்பாளே.. என்னிடம் மட்டும் ஏன் அத்தான் ஒரு வார்த்தைகூட கேட்கவில்லை.. ஏன் இப்படிச் செய்தாய் பவித்ரான்னு ஒரு கேள்வி... மஹூம்.. அவள் கேட்கவில்லையே.. வாய் திறந்து கேட்கவில்லையே.. அப்படிக் கேள்வி கேட்கக்கூட என்னிடம் பேச அவள் பிரியப்படலை அத்தான்..''

தினகரன் வானத்தைப் பார்த்தான்.. கரும் மேகங்கள் சூழ்ந்திருந்தன.

''மழை வரும் போல..'' என்றான்.

''இந்த ஊருக்கு வராது அத்தான்..'' என்றாள் பவித்ரா.

''ஏன்?''

''இங்கேதான் நான் இருக்கிறேனே.. என்னைப் போல சிநேகிதத் துரோகி இருக்கும் ஊரில் மழை எப்படிப் பெய்யும்?''

அவளின் பேச்சைக் கேட்டு தினகரன் கவலையில் சூழ்ந்தான். தாழ்வுமனப்பான்மையும் குற்ற உணர்வும்



ஒன்றாகச் சேர்ந்து பவித்ராவை புதைகுழிக்குள் அமிழ்த்து வதைப் போல அமிழ்த்திக் கொண்டிருப்பதை அவன் உணர்ந்தான்.

அவள் முழுவதும் அழிந்துவிடும் முன்னால் அவளைக் காப்பாற்றிவிட வேண்டும். ஆனால்.. எப்படி அதைச் செய்வது?

பவித்ராவின் முகத்தைப் பார்க்காமல் மளமளவென்று வீட்டுக்குள் சென்றான். வாசவன் வாயெல்லாம் பல்லாக..

''வாங்க மாப்பிள்ளை.. சாப்பிடலாம்..'' என்று அழைத் தார்.

மறுக்க நினைத்தவனுக்கு ஒரு யோசனை உதயமாக..

''பவித்ராவை பரிமாறச் சொல்லுங்க மாமா..'' என்றான்.

பழம் நழுவி பாலில் விழுந்து.. அதுவும் நழுவி வாய்க்குள் விழுந்ததைப் போன்ற மகிழ்ச்சிக்கு ஆளானார் வாசவன்.

''இதோ வரச் சொல்கிறேன். அதைவிட அவளுக்கு வேறு என்ன வேலை?'' என்று பின்பக்கம் பாய்ந்தோடினார்.

தினகரன் கை கழுவி விட்டு டைனிங் டேபிளில் அமர்ந்தான். சற்று நேரத்தில் வந்த பவித்ராவின் முகம்.. பலத்த வாக்குவாதத்திற்குப் பின்னால் தகப்பனாரிடம் அவளது மறுப்பு எடுபடாமல் வந்திருக்கிறாள் என்பதைச் சொல்லாமல் சொல்லியது.

'எனக்குப் பரிமாற மறுத்தாயா..' தினகரனின் பார்வை அவளைக் குற்றம் சாட்டியது.

தலைகுனிந்தபடி அவள் பரிமாற ஆரம்பித்தாள்.. வாசவன் மெதுவாக தூண்டிலை வீசினார்.

''இப்படியே பிரம்மச்சாரியாய் எத்தனை நாள்தான் இருப்பீங்க மாப்பிள்ளை...''

''எனக்கு கல்யாணம் ஆகிற வரைக்கும் இருப்பேன் மாமா..'' தினகரன் கிண்டலாகப் பதில் சொன்னான்.

''காலாகாலத்தில் அந்தக் கழுதைய பண்ணிப்புட வேண்டியதுதானே..'' பிடி கிடைத்த மகிழ்ச்சியால் வாசவன் பேசினார்.

''கழுதையை எல்லாம் கல்யாணம் பண்ணிக்கொள்கிறதாக இல்லை மாமா..'' அவனும் இடக்காக பதில் சொன்னான்..

அவனது பார்வை பவித்ராவின் மீது படிந்தது.

## 119

*எட்டாத உயரத்தில் நீயிருந்தபோதும்..*
*உன்னை எட்டிப் பிடித்துவிடத் துடிக்கும் மனதை...*
*என்னவென்று நான் சொல்ல?*

தினகரனின் பார்வையை உணர்ந்த பவித்ரா முகம் சிவந்தாள். வாசவன் தூண்டிலில் மீன் சிக்கிவிட்டதைப் புரிந்து கொண்டார். அவர் மனம் உற்சாகக் கூவல் கூவியது.

எத்தனை வருஷத்து கனவு இது?

''என்ன மாப்பிள்ளை இது.. உங்களைப் போய் கழுதையைக் கல்யாணம் பண்ணிக்கச் சொல்லி நான் சொல்லுவேனா?''

''வேறு யாரைப் பண்ணிக்கன்னு நீங்களே சொல்லுங்க..'' தினகரன் சாவதானமாக பிரியாணியைக் காலி செய்தவாறு கூறினான்.



இந்தக் கேள்விக்காகத்தானே வாசவனும் காத்திருந்தார்.

''என்னைக் கேட்டால்.. நான் என்ன சொல்லுவேன்.. என் மகளைக் கட்டிக்கங்கன்னு சொல்லுவேன்..''

''நீங்க கொடுத்தால் கட்டிக் கொள்ள மாட்டேன்னா நான் சொல்கிறேன்?''

''மாப்பிள்ளை...''

வாசவன் ஆனந்தப் பிரமிப்பில் ஆழ்ந்துவிட்டார்.

''மாமா?'' தினகரன் விநயமாக வினவினான்.

''நிஜமாகவா சொல்கிறீங்க?''

''பொய் சொல்லும் வழக்கம் எங்க கோட்டையூர் ஜமீனுக்கே கிடையாது மாமா..''

''இதை நீங்க சொல்லணுமா? உங்க பரம்பரையைப் பற்றி எனக்குத் தெரியாதா.. எப்பேர்ப்பட்ட பரம்பரை அது?''

''அந்த வீட்டுக்கு உங்க பெண் மருமகளா வரப் போகிறா..''

''சந்தோஷம் மாப்பிள்ளை.. ரொம்ப சந்தோஷம்.. எப்ப பொண்ணு கேட்டு வரப் போகிறன்னு என் தங்கச்சியிடம் பேசிவிடவா?''

''தாராளமாகப் பேசுங்க.. இப்ப இல்லை. என் பெரியண்ணன் கல்யாணத்துக்குப் பின்னால இதைப் பற்றி அம்மாகிட்டப் பேசுங்க..''

''நல்லதாப் போச்சு.. நீங்களும் ஒரு வார்த்தை. இதைப் பற்றி உங்க அம்மாகிட்டப் பேசிடுங்க மாப்பிள்ளை..''

''இப்ப ஊருக்குப் போனவுடன் உடனடியாக அதைத்

தானே செய்யப் போகிறேன். ஆனால் மாமா...'' தினகரன் இழுக்க...

''என்ன மாப்பிள்ளை?'' என்று திகிலோடு கேட்டார் வாசவன்..

'இவ்வளவு நேரமும் நல்லாத்தானே பேசிக்கிட்டு இருந்தான். கடைசி நேரத்தில் ஒரு இக்கன்னாவைப் போடுகிறானே...' வாசவன் மனதிற்குள் பதறினார்.

''உங்க பொண்ணுதான் பிடி கொடுத்து பேச மாட்டேன்கிறா..'' தினகரன் போட்டுக் கொடுத்தான்.

வாசவன் பல்லை நறநறவென்று கடித்தபடி மகளைப் பார்த்தார்.

''அது வேற ஒண்ணுமில்லை மாப்பிள்ளை.. செல்லம் அதிகமா கொடுத்துவிட்டேன். அதுதான் பெத்தவங்க பேச்சை மீறச் சொல்லுது..''

''கூடாதே.. நம்ம குடும்பத்தில் இப்படி இருக்கக் கூடாதே..''

''அதையெல்லாம்.. நான் பார்த்துக்கிறேன் மாப்பிள்ளை.. எங்கிட்ட விஷயத்தை சொல்லிட்டீங்கல்ல.. இனி இந்த விஷயம் என் பொறுப்பு..''

வாசவன் உத்தரவாதம் கொடுக்க.. தினகரன் அவர் அறியாமல் பவித்ராவைப் பார்த்துக் கண் சிமிட்டினான்.

அவள் மனதுக்குள் மத்தாப்பூ பொரிய... தன்னைத் தானே அதட்டிக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

தினகரன் கை கழுவப் போகும்போது பின்னாலேயே துண்டை எடுத்துக் கொண்டு போகச் சொல்லி வாசவன் வற்புறுத்த.. வேறுவழியின்றி பின்தொடர்ந்தாள்.

''சோதிக்கிறீங்களா அத்தான்?'' துண்டை நீட்டியபடி கேட்டாள்.



''இதை சோதனைன்னு ஏன் நினைக்கிற.. நான் சாதிக்கிறேன்னு நினைக்க வேண்டியதுதானே..'' அமர்த்தலான குரலில் சொல்லியபடி துண்டை வாங்கி கையைத் துடைத்துக் கொண்டான் தினகரன்.

''நினைத்ததை சாதிக்க நினைக்கறீங்களா?''

''நீ நினைத்ததை நான் சாதிக்க நினைக்கிறேன்..''

''நான்தானே உங்களைக் காதலித்தேன்?''

''அது கூட உனக்கு நினைப்பில் இருக்கா?''

''நீங்க என்னைக் காதலிக்கலை.. அதுவும் என் நினைப்பில் இருக்கு...''

''இப்பக் காதலிக்கிறேனேடி..''

''காலங்கடந்த காதல். இதனால் யாருக்கு என்ன பிரயோஜனம்?''

''எனக்குப் பிரயோஜனம்..''

''ஏன் அத்தான்.. உங்க அழகுக்கும் அந்தஸ்துக்கும் எத்தனை பெண்கள் உங்களைக் கல்யாணம் பண்ணிக்க வரிசையில் வருவாங்க தெரியுமா?''

''எனக்கு ஊரில் உள்ள பெண்கள் வேண்டாம். நீ ஒருத்தி மட்டுமே போதும்..''

இதைப் பேசுவது தினகரன்தானா என்று இருந்தது பவித்ராவிற்கு. அழகிய பெண்களைக் கண்டுவிட்டால் அவர்களிடம் கடலை போடாமலிருக்கக் கூடாது என்ற கொள்கையுடைய அவளுடைய தினகரனா இப்படிப் பேசுவது?

இப்படிப்பட்ட வார்த்தைகளைக் கேட்க மாட்டோமா என்று ஒரு காலத்தில் ஏங்கிக் கிடந்தவள்.. இன்று அந்த

வார்த்தைகளைக் கேட்டும் குதூகலிக்க முடியாமல் இருப்பது யார் கொடுத்த சாபத்தினால்?

பவித்ராவின் மனம் ஊமையாக உள்ளுக்குள் அழுதது..

''தயவுசெய்து இந்தப் பேச்சை விட்டுவிடுங்க அத்தான்..''

''எந்தப் பேச்சை விடச் சொல்கிற?''

''என் அப்பாவைத் தூண்டிவிடும் பேச்சைச் சொல்கிறேன்..''

''நானா அவரைத் தூண்டிவிடுகிறேன்.. அவர் தான்ம்மா எனக்கு தூண்டில் வீசுகிறார்..''

தினகரனின் பேச்சைக் கேட்ட பவித்ராவிற்கு அவமானம் பிடுங்கித் தின்றது.

'இந்த அப்பாவும்தான்.. ஏன் இப்படிப் பேசித் தொலைக்க வேண்டும்..'

''அவர் தூண்டிலை வீசினால் வீசிவிட்டுப் போகட்டும். உங்களுக்கென்ன வந்தது. நீங்க என்ன மீனா.. அதில் மாட்ட?''

''அட.. நீ கூட நல்லாப் பேசறயே..''

''உங்க பக்கத்தில் நிற்கிறேனில்ல.. அந்தக் காத்துத் தான் இந்தப் பக்கமும் கொஞ்சம் அடிக்குது...''

''இங்கே பாருடா.. என் மாமன்மகள் போட்டுத் தாக்குவதை..''

''அப்பாவுக்கு ஆசை காட்ட வேண்டாம்..''

''நீ மட்டும் எனக்கு ஆசை காட்டிவிட்டு மோசம் பண்ணலாமா?''

''என் நிலையைச் சொல்லிட்டேன்..''



''அப்பா ஃபோர்ஸ் பண்ணினால் மட்டும் நான் சம்மதித்து விடுவேனா?''

''சம்மதிக்காமல் என்ன செய்வாய்?''

துண்டை அவள் தோளில் போட்டுவிட்டவன் உல்லாசமாகக் கேட்டான். அவள் இறுக்கமான குரலில் பதில் சொன்னாள்..

''செத்து விடுவேன்..''

''என்னடி சொன்ன?''

தினகரனின் முகம் மாறியது. அவன் கோபத்துடன் அவள் கையை அழுந்தப் பிடித்தான். அவள் முகம் வலியால் சிணுங்கியது.

''செத்துவிடுவாயா.. எனக்குப் பெண்டாட்டியாக வருவதற்குப் பதில் செத்துவிடுவதே மேல்ன்னு முடிவு பண்ணிட்டயா?''

''ஐயோ, அத்தான்.. நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை..''

''நீ எந்த அர்த்தத்தில் சொன்னாலும் அதற்கு நான் எடுத்துக்கிற அர்த்தம் இது ஒண்ணுதான். சாவாயா.. சா.. நானும் உன்னோடு சேர்ந்து சாகிறேன்..''

பவித்ரா சத்தமில்லாமல் அழ ஆரம்பிக்க.. தினகரன் விலகி வெளியே நடந்தான். போவதற்கு முன்னால் நின்று அவளைத் திரும்பிப் பார்த்து,

''நான் உன் அப்பாவிடம் சொன்ன வார்த்தை மாறாது.. எங்க கோட்டையூர் ஜமீன் பரம்பரையில் வாக்கு மாற மாட்டோம். நானும் மாற மாட்டேன்.. என் அண்ணனின் கல்யாணத்திற்குப் பின்னால் உன்னைப் பெண் கேட்டு

கட்டாயம் நான் வருவேன். நீ சம்மதிக்கலைன்னா தூக்கிட்டுப் போய் தாலி கட்டுவேன். நான் சிங்கம்டி.. பிரபாகரனின் தம்பி. காதலித்தவளை விட்டு விலகி ஓட மாட்டேன்..'' என்று சொல்லிவிட்டு வேகமாகப் போய்விட்டான்.

பவித்ரா அசையாமல் நின்றாள். அவள் மனம் இன்பமான வலியில் ஆழ்ந்திருந்தது.

நர்மதா பகல் தூக்கத்தில் இருந்தபோது அவளது செல்போனின் மணி ஒலித்தது. எடுத்துப் பார்த்தாள். வாசவன் அழைத்தார்.

''சௌக்கியமா அண்ணா.. பவித்ரா சௌக்கியமா?'' என்று கேட்டாள் நர்மதா..

''உன் புண்ணியத்தில் அவளுக்கு ஒரு குறையும் இல்லை நர்மதா..'' என்றார் வாசவன்.

''அண்ணி என்ன செய்கிறாங்க..''

''தினகரன் சொன்ன செய்தியைக் கேட்டு ஒரு சுற்றுப் பெருத்துப் போய் விட்டாம்மா..''

தினகரன் இவர்கள் வீட்டுக்குப் போயிருந்தானா? நர்மதாவின் புருவம் ஏறியது.

அவள் அறியாமல் மகன் அவளுடைய ஒன்றுவிட்ட அண்ணனின் வீட்டிற்குப் போனதை அவள் ரசிக்கவில்லை.

''தினா அங்கே வந்திருந்தானா?''

நர்மதாவின் குரல் மாறுபாட்டை வாசவன் சட்டென்று உணர்ந்து கொண்டார். உடனடியாக பேச்சின் போக்கை மாற்றினார்.

''நேற்றுக்கூட உன்னை நினைத்துக்கிட்டேன் நர்மதா...''

''அப்படியா அண்ணா..''



''ஆமாம்மா.. அப்பாவுடன் பேசிக்கிட்டு இருந்தபோது அவர் உன்னை நினைத்துக் கவலைப்பட்டார்..''

தான் மாணிக்கவாசகத்தின் தம்பி என்பதை நிருபித்தார் வாசவன். எதைச் சொன்னாள் நர்மதா இளகுவாள் என்ற சூட்சுமத்தை அறிந்து வைத்திருந்து அதைச் சரியான தருணத்தில் பிரயோகித்தார்.

ஆளவந்தாரின் மேல் அளவு கடந்த பாசம் வைத்திருந்த நர்மதா அவர் பெயரைக் கேட்டதும் இளகிவிட்டாள்.

''பெரியப்பா என்னை நினைத்துக் கவலைப்பட்டாரா.. எதுக்குண்ணா?''

''அவர் காலத்திற்குப் பின்னாலே நாங்க உனக்கு தாய்வீட்டுச் சீதனத்தை தவறாம கொடுப்போமான்னு அவர் சஞ்சலப்படுகிறார்..''

''அதை நினைச்சு வருத்தப்படுகிறாரா?''

நர்மதாவின் இதயம் பாகாக உருகிவிட்டது. அதை அவளது குரலில் அறிந்துகொண்ட வாசவன், அடுத்த அஸ்திரத்தை பிரயோகித்தார்.

''அவர் சொல்லித்தான் நான் தாய்மாமன் சீரை செய்யணுமா நர்மதா.. எனக்கு சாகும் வரை அந்தக் கடமை இருக்கும்மா..''

''அண்ணா..'' நர்மதா நெகிழ்ந்து விட்டாள்.

''நான் அப்பாவிடம் சொன்னேன்ம்மா.. என் பெண்களுக்கு சீர்செய்ய மறந்தாலும் மறப்பேன். ஆனால்.. நர்மதாவிற்கு சீர்செய்ய மறக்கவே மாட்டேன்னேன்..''

''இதை நீங்க சொல்லித்தான் எனக்குத் தெரியணுமா அண்ணா..''

''அப்பா மனசில ஒரு கனவிருக்கு நர்மதா..''

இரும்பு இளகிவிட்டதை அறிந்தவர்.... மெல்ல பேச்சை ஆரம்பித்தார்.

''என்ன கனவு அண்ணா?''

''நம் சொந்தம்.. நம் தலைமுறையோடு முடிந்து போகாமல் தொடர்கதையாய் தொடரணும்னு அப்பா ஆசைப் பட்டார்..''

''அதுக்கென்ன அண்ணா.. அழிகிற சொந்தமா நம் சொந்தம்?''

'நீ இப்படி காவியம் பாடியே உயிரை வாங்கு..' மனதிற்குள் திட்டியவாறு.. வெளியே புன்னகையுடன்,

''உண்மைத்தான்மா.. நம்ம சொந்தம் அழியாத சொந்தம்தான்.. நமக்குப் பின்னாலே.. நம்ம பிள்ளைகள் இந்த சொந்தத்தை வளர்ப்பாங்களா? நினைச்சுப் பாரு..'' என்று சொன்னார்..

''நீங்க சொல்வதிலேயும் உண்மை இருக்கு அண்ணா..'' என்றாள் நர்மதா.. யோசனையுடன்.

''அதனால்தான் நான் அப்பாவிடம் சொன்னேன்.. நம்ம ஸ்வேதாவிற்கு என்ன குறை.. அவளை நர்மதா மருமக ளாக்கிக்கிட்டா என்னன்னு கேட்டேன்..''

இதைக் கேட்ட நர்மதா.. அலறிவிடுவாள் என்று வாசவனுக்கு மிக நன்றாகவே தெரியும்.





இது ஒரு யுக்தி.. பக்கத்து இலைக்கு பாயசம் போடச் சொல்லும் யுக்தி. காலம் காலமாக புத்திசாலிகள் கடைப் பிடித்து வரும் யுக்தி.

வாசவனும் அதைக் கடைப்பிடித்தார். நர்மதா தன் அலறலை மறைத்துப் பதிலைச் சொன்னாள்.

''இல்லையண்ணா.. ஸ்வேதாவை இந்த வீட்டுக்கு மருமகளாக்க முடியாது..''

''ஏம்மா?''

''பிரபாவுக்கும் சரி.. தினாவுக்கும் சரி.. அவள் மேல் பிரியமில்லை அண்ணா. என் பிள்ளைகளுக்கு இஷ்டமில் லாத எதையும் நான் செய்யமாட்டேன். அது உங்களுக்குத் தெரியுமே..''

''ஆமாமாம்.. நீ சொல்கிறதைக் கேட்ட பின்னால் தான் என் மனசுக்குப் பட்ட ஒன்றை உன்னிடம் சொல்லனு முன்னு தோணுது..''

''என்னண்ணா?''

''நம்ம தினா மாப்பிள்ளையின் மனசில பவித்ராவின் மேல பிரியம் இருக்கிறதைப் போல எனக்கு மனசுக்கு படுதும்மா..''

''நிஜமாகவா சொல்கிறீங்கண்ணா?''

நர்மதாவின் குரலில் இத்தனை உற்சாகத்தை வாசவன் எதிர்பார்க்கவில்லை. அவருடைய மகளை மருமகளாக்கிக் கொள்ள நர்மதா இவ்வளவு ஆர்வம் காட்டுவாளென்று அவருக்கு இத்தனை நாளாக தெரியாமல் போய்விட்டதே என்று அவர் தன்னைத்தானே நொந்து கொண்டார்.

அவருக்கு நர்மதாவின் மனதைப் பற்றி என்ன

தெரியும்.. முதல் இரண்டு மகன்களைப் போல கடைசி மகனும் எந்தப் பெண்ணைக் கை காட்டப் போகிறானோ என்ற பயத்தில் இருந்தவள் அவள்.

மகளை நல்ல வேளையாக உறவினர் வட்டாரத்தில் திருமணம் பண்ணிக் கொடுத்துவிட்டோமென்ற நிம்மதி யுடன் இருந்தவளுக்கு அடுத்து ஒரு நிம்மதியைத் தேடிப் பிடித்துக் கொடுத்து விட்டார் வாசவன்.

''உங்களுக்கு இது நிச்சயமாகத் தெரியுமா?''

நர்மதா இவ்வளவு தூரம் இந்தத் திருமணப் பேச்சை விரும்பிக் கேட்பாள் என்பதை அறிந்து கொண்ட பின்னால் தேங்கி நிற்க வாசவன் என்ன முட்டாளா?

பச்சை விளக்கு எரிந்துவிட்ட சந்தோஷத்தில் வாசவன் மடமடவென்று தினகரன் வீட்டிற்கு வந்து போன செய்தியை ஒப்பித்து விட்டார்.

''என்னாலேயே நம்ம தினகரன் மாப்பிள்ளை என் வீட்டுக்கு வந்ததை இன்னும் நம்ப முடியலை நர்மதா.. உங்க அண்ணி ஆச்சரியத்தில் வாய் பிளந்துட்டான்னா பார்த்துக்கயேன்..''

''இது என்னண்ணா.. நீங்க என்ன அந்நியமா.. அசலா.. என் பிள்ளை உங்க வீட்டுக்கு வர உரிமையுள் ளவன்தானே..''

வாசவனுக்கு தன் காதுகளையே நம்ப முடிய வில்லை..

'இது என்ன தங்கச்சி.. இந்த அளவுக்கு பாச மழை யைப் பொழியுதே..' என்று வியந்து போனார்.

''அப்படித்தான் நானும் உன் அண்ணியிடம் சொன் னேன்..''



''இன்றைக்கு விடிந்த விடியல் நல்ல விடியலா விடிந்திருக்கு அண்ணா. எங்கே என் பெரியப்பாவின் பேத்திகளில் ஒருத்தியைக்கூட எனக்கு மருமகளாக கொண்டு வர முடியுமோ முடியாதோன்னு வருத்தப்பட் டேன். கடவுள் கண் திறந்துவிட்டார்..''

நர்மதாவின் மனதில் இப்படியொரு எண்ணம் இருப் பதை அப்போதுதான் அறிந்த வாசவன் மனம் நெகிழ்ந்தார்.

''நீ இந்த அளவுக்கு சந்தோஷப்படுவன்னு எனக்குத் தெரியாமப் போச்சு நர்மதா..''

''என்ன அண்ணா இப்படிச் சொல்லிட்டீங்க.. பெரியப்பாவின் மனதில் இருக்கிற ஆசை எனக்குத் தெரி யாதா என்ன.. ஏழைகளின் ஆசையும் கோயில் மணி யோசையும் வேறுபட்டால் என்ன செய்வது.. தாமமே மாறுபட்டால் எங்கு செல்வதுன்னு ஒரு பாட்டில் சொல் கிறதைப் போல என் ஆசையும் என் பிள்ளைகளின் ஆசை யும் வேறு வேறாகிப் போச்சே அண்ணா.. நான் என்ன செய்ய முடியும்? எனக்கு என் பிள்ளைகள்தான் உலகம். அவங்க மனதுக்கு மாறாய் நான் எதையும் செய்ய முடியாது. செய்யவும் மாட்டேன். இப்ப.. தினகரனே பவித்ராவை பிடிக்குதுன்னு சொல்லிவிட்டது தெய்வச் செயல்..''

வாசவனுக்கு இறக்கை இல்லாமலேயே வானில் பறக்கும் உணர்வு ஏற்பட்டது.

''அப்ப நான் அப்பாவிடம் விஷயத்தை சொல்லி விடவாம்மா..''

''சொல்லிருங்கண்ணா.. நானும் பெரியப்பாவிடம் பிரபாகரனின் கல்யாணம் முடிவாகியிருப்பதைச் சொல் லணும்.. அப்படியே இதையும் பேசி விடுகிறேன்..''

''பிரபாகரனுக்கு கல்யாணம் முடிவாகிவிட்டதா?''

வாசவன் வியப்புடன் கேட்டார். தினகரன் இதைப் பற்றி ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லையே என்ற எண்ணம் அவருக்கு.

''ஆமாண்ணா.. பிரபாகரனுக்கு கல்யாணம் முடிவாகி விட்டது..''

''பெண் யாரும்மா?''

''நம்ம சசிரேகாவின் சித்தப்பா பெண் மாலினி தான்..''

இதை ஓரளவு வாசவன் எதிர்பார்த்திருந்தார். யாரிட மும் அளவாக பேசிப் பழகும் பிரபாகரன்.. மாலினியிடம் மட்டும் எந்த அளவுகோலையும் வைத்துக் கொள்ளாமல் பேசிப் பழகியதை அவர் காயத்ரியின் நிச்சயதார்த்த சமயத் திலேயும் அவளின் திருமண சமயத்திலேயும் கவனித்துக் கொண்டுதான் இருந்தார். கடைசியில் அவரின் கணிப்பு சரியாகிவிட்டது.

'அவளுக்கு வந்த வாழ்வைப் பாரேன்..' வாசவனின் மனதில் பொறாமை உதயமானது.

தினகரன், நர்மதாவின் இளைய மகன்... கோட்டையூர் ஜமீன் வம்சத்தின் வாரிசுகளில் ஒருவன் என்றபோதும்.. பிரபாகரனின் அளவற்ற அதிகாரத்தையும் செல்வாக்கையும் பெற்றவனல்ல.

பிரபாகரன் ஒரு மாபெரும் சக்தி. அவனது பெயர் சொல்லக்கூட யாரும் தயங்கும் அளவிற்கு மரியாதையை அந்த இளம்வயதிலேயே ஈட்டி வைத்திருப்பவன். அவ னுக்கு மனைவியாகும் பெண்ணிற்கு கணவனுக்கு கிடைத் திருக்கும் மரியாதை அப்படியே துளிக்கூட குறையாமல் கிடைக்கும்.



'கொடுத்து வைத்தவள்..'

அந்தக் கொடுத்து வைத்தவளாக தன் மகள் இல்லாமல் போனதில் அவருக்கு துளியளவு வருத்தம் ஏற்பட்டது.

'ஆயிரம்தான் இருந்தாலும் தினகரன்.. பிரபாகரனுக்கு இணையாக முடியுமா? தம்பியாகத்தான் ஆக முடியும்..' என்ற பெருமூச்சுடன் மனைவியிடம் விஷயத்தைச் சொல்லத் தேடிப் போனார் வாசவன்.

மாணிக்கவாசகம் கொதித்துப் போயிருந்தார். அவரது காதில் அமிலத்தைக் காய்ச்சி ஊற்றியதைப் போல அவருக்கு ஆளவந்தாரின் வார்த்தைகள் இருந்தன.

''என்னப்பா சொல்கிறீங்க?''

''நர்மதா சொன்னதைத்தான் சொல்கிறேன். பிரபாகர னுக்கு மாலினியைப் பெண் கேட்டு.. வருகிற வெள்ளிக் கிழமை குடும்பத்தோடு அவள் போகப் போகிறாளாம்.. அதற்கு என்னையும் உன் அம்மாவையும் வரச்சொல்லி கேட்டுக்கிட்டா..''

''எனக்கு ஒரு வார்த்தை சொல்லணுமா.. வேண டாமா?''

''கல்யாணத்துக்கு சொல்வாள்டா.. தாய்மாமா சீரை நீயும் உன் அண்ணனும் தம்பியும்தானே செய்யணும்..?''

மாணிக்கவாசகத்தின் பார்வைக்கு மட்டும் சக்தி இருந் திருந்தால் அந்த இடத்திலேயே ஆளவந்தார் சாம்பலாகி யிருப்பார். அவருடைய பார்வைக்கு அந்த சக்தி இல்லா ததால் ஆளவந்தார் தப்பித்தார்.

''ஏம்ப்பா இப்படி இருக்கறீங்க?''

''ஏண்டா.. நல்லாத்தானே இருக்கேன். சட்டை எதுவும் கசங்கியிருக்கா.. என்ன?''

ஆளவந்தார் தன்னை ஒருமுறை நன்றாகப் பார்த்துக் கொண்டார். மாணிக்கவாசகம் பல்லை நறநறவென்று கடித்தார்.

''நான் என்ன சொல்கிறேன்.. நீங்க என்ன செய்கி றீங்க?''

''நீ சொல்வதை உருப்படியா சொன்னால்தானே எனக்கும் புரியும்.''

''என்னை மதிச்சு என்னிடம் ஒரு வார்த்தை இந்தக் கல்யாண ஏற்பாட்டைப் பற்றி நர்மதா சொன்னாளா?''

''ஓ.. நீ அதைச் சொல்கிறாயா..''

''புரிஞ்சா சரி..''

''எப்படிடா சொல்வாள்.. இல்லை எப்படிச் சொல் வான்னு கேட்கிறேன். நீ உன் மகளைக் கட்டிக்கன்னு சொல்லி மாதக்கணக்கில் உன் மகளை அவ வீட்டில் விட்டும் வைச்சே..''

''அதுக்குத்தான் என் மகளை திருப்பி அனுப்பி என் மூக்கை அறுத்தாளே..''

''அந்த வருத்தம் அவளுக்கும் இருக்காதா?''

''மூக்கறுபட்ட எனக்கு வருத்தமிருக்காது.. மூக்கை அறுத்த உங்க தம்பி மகளுக்கு மட்டும் வருத்தமிருக்கும். என்ன நியாயம்ப்பா உங்க நியாயம்?''

''மாணிக்கம்.. நீ கோபத்தில் பேசுகிற. நிதானமா உட்கார்ந்து யோசி.. உனக்கு எல்லா நியாயமும் புரியும்..''

''எனக்குப் புரிகிறது இருக்கட்டும். உங்களுக்கு ஏதாவது புரிந்ததா? ஏற்கெனவே அந்த சசிரேகா நம்ம நர்மதாவை மூலையில் உட்கார வைத்திருக்கிறா. இப்ப அவளோட சித்தப்பன் மகளை பிரபாகரனுக்கு கல்யாணம் பண்ணிவைச்சு.. நம்ம நர்மதாவை காணாம அடிச்சிற மாட்டாங்களா?''



''பிரபாகரன்தான் அந்த பெண்மேல ஆசைப்பட் டுட்டானே.. அப்புறம் என்னடா செய்யறது?''

''கண்ணுக்கு முன்னால வயசுப் பெண்ணை நடமாட விட்டா.. எந்த வாலிப வயசுக்காரனுக்குத்தான் கல்யாண ஆசை வராது?''

''ஏன்.. உன் மகளும் வயசுப் பெண்தானே. அந்த மாலினிப் பெண்ணாவது... வேலை பார்க்கணுமுன்னு சென்னையை விட்டு மார்த்தாண்டத்துக்கு வந்தா. உன் பெண் அவங்கள்ல ஒருத்தனை கல்யாணம் பண்ணிக் கொள்ளணும்கிற நோக்கத்தோடதான் இங்கே வந்திருக் கிறேன்னு வாய்விட்டுச் சொல்லி.. அந்த வீட்டுக்குள் நுழைந்தாளேடா. உன் மகள் என் பேரன்கள் முன்னால் நடமாடலையா.. ஏன்.. அந்த இரண்டு பேரில் ஒருத்த னுக்குக்கூட உன் மகளைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு ஆசை வரலை?''

''அப்பா.. எனக்கு இரண்டில் ஒன்று இப்பவே தெரிந் தாகணும்..''

''என்னப்பா?''

''நீங்க எனக்கு அப்பாவா.. இல்லை நர்மதாவுக்கு அப்பாவா?''

''உனக்கு அப்பா.. நர்மதாவிற்கு பெரியப்பா. போது மாப்பா.. சந்தேகம் தீர்ந்ததா?''

மாணிக்கவாசகத்திற்கு இந்தத் தகப்பனை என்ன செய்தால் தேவலை என்று தோன்றியது. அவர் கடுப்புடன்

தகப்பனைப் பார்க்க.. அவர் பிரியத்துடன் மகனைப் பார்த்து..

''என்னப்பா.. அப்படிப் பார்க்கிற?'' என்று மகா வாஞ்சையுடன் கேட்டு வைத்தார்.

பக்கத்தில் இருக்கும் சுவரில் மடார் மடாரென்று தலையை மோதினால்தான் தன் கோபம் குறையுமென்ற நிலைக்கு மாணிக்கவாசகம் ஆளாகிவிட்டார்.

''ஏம்ப்பா.. உங்களுக்குக் கொஞ்சமாவது அறிவு இருக்கா?''

''உன்னைப் பெற்றுவிட்டதால் அதைக் குறைவாக எடை போட்டுவிடாதே மாணிக்கம். அது நிறைய இருக்கு..''

''இருந்திருந்தால்.. நம்மதாவை நறுக்குன்னு ஒரு கேள்வியாவது கேட்டு வைக்காமல் இருப்பீங்களா?''

''எதைக் கேட்கச் சொல்கிற?''

''லட்டு லட்டாய்.. என் பேத்திகள் இருக்க.. இப்படி வெளியே பெண்ணெடுத்துக்கிட்டே இருக்கறியே.. இது நியாயமான்னு கேட்க வேண்டாமா?''

''அதுக்குத்தான் அவசியமே இல்லையே..''

''என்னப்பா சொல்கறீங்க?''

''அவள்தான் தினகரனுக்கு நம்ம பவித்ராவைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறாளே...''

மாணிக்கவாசகத்தின் தலையில் அடுத்த இடியைத் தான் இறக்குவதை அறியாமல் ஆளவந்தார் உற்சாகமாகப் பேசப் பேச.. மாணிக்கவாசகம் கண்கள் நிலைகுத்த.. நெஞ்சைப் பிடித்துக் கொண்டு அப்படியே உட்கார்ந்து விட்டார்.



## 121

*உன் மனதில் நானிருக்க வேண்டுமென்று..*
*என்மனமே ஏங்கித் தவிக்கும் நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல?*

''மாணிக்கம்.. நான் பெத்த மகனே.. உனக்கு என்னடா ஆச்சு?'' ஆளவந்தார் அலறிய அலறலில் விசாலாட்சி உள்ளேயிருந்து ஓடி வந்தாள்.

''என்னங்க.. என்ன ஆச்சு?''

''மாணிக்கத்தைப் பாருடி..''

''என்னங்க.. என் பிள்ளை ஏன் இப்படி உட்கார்ந்திருக் கிறான்?''

விசாலாட்சி உள்ளே ஓடிப்போய் ஒரு செம்பு நிறையத் தண்ணீரைக் கொண்டு வந்து மாணிக்கவாசகத்தின் முகத்தில் அடித்தாள்.

''என்னத்தைங்க சொல்லித் தொலைச்சீங்க. இவன் இப்படி பிரமை பிடிச்சுப் போய் உட்கார்ந்திருக்கிறான்?''

''மாணிக்கம்.. கண்ணைத் திறந்து பாருடா.. உன் அம்மா என்னைக் குற்றம் சொல்கிறா. என் தலையில் கல்லைத் தூக்கிப் போட்டுவிடாதேடா மகனே...''

விசாலாட்சி.. கையினால் அடிக்க முடியாமல்.. அதற்கு இணையான வேகத்துடன் செம்புத்தண்ணீரால் அடித்தபோதே மயக்கம் தெளிந்துவிட்ட மாணிக்கவாசகம்.. தகப்பனாரின் புலம்பலைக் கேட்டு அவரை ஒரு மார்க்கமாக பார்த்தார்.

''என்னடி விசாலம்.. இவன் இப்படிப் பார்த்து வைக்கி றான்?''

''என்னைக் கேட்டா.. எனக்கென்ன தெரியும். நீங்க தானே உங்க மகன் கூட 'மாட்டலாடிக்கிட்டு' இருந்தீங்க. எனக்கு நல்லா வந்திடும் வாயில..''

''முதல்ல இப்ப உன் வாயில வந்ததுக்கு அர்த்தத்தைச் சொல்லு.. 'மாட்டலாடிக்கிட்டு' இருந்தேன்னு சொன்னாயே.. அதுக்கு என்னடி அர்த்தம்?''

''உம்.. பேசிக்கிட்டுன்னு அர்த்தம்..''

''இப்படிக்கூட தமிழில் அர்த்தம் இருக்குதா..''

''தமிழில் இல்லை... தெலுங்கில் இருக்குது..''

''தமிழ்நாட்டில் பிறந்துட்டு தெலுங்கை ஏண்டி இழுக் கறே...''

''அதை மலையாளம் கலந்த தமிழ் பேசற நீங்க சொல்லக்கூடாது..''

''அதுக்கென்னடி பண்றது.. கன்யாகுமரியிலேயே கேரளத்து பாஷை ஆரம்பிச்சுடுது. கேரளா பார்டரில் இருந்துக்கிட்டு சங்கத்தமிழ் பேச முடியுமா? அதுக்கு நாம கருங்கல்லில் இருந்திருக்கக்கூடாது. மதுரையில் இருந்திருக்கணும்..''

''கருங்கல்லைப் பத்தி அப்புறம் பேசலாம்.. முதல்ல இவனுக்கு என்ன ஆச்சுன்னு பாருங்க..''

மாணிக்கவாசகம் அதற்குள் தன்னுணர்விற்கு மீண்டிருந்தார். ஆளவந்தாரை எரிச்சலுடன் பார்த்தார்.

''ஏண்டா.. அப்போது அப்படி ஒரு பார்வை பார்த்த?''

''எப்படிப் பார்த்தேன்?''



''மந்திரிச்சு விட்ட கோழியைப் போல பார்த்து வச்சயே..''

''அப்பா.. என் கோபத்தை கிளறாதீங்க.. என் தலை யில் நீங்க கல்லைத் தூக்கிப் போட்டுவிட்டு உங்க தலை யில் கல்லைப் போட வேணாம்னு பசப்புகிறீங்களா?''

இதைக் கேட்டதும் ஆளவந்தாருக்கு கோபம் வந்து விட்டது.

''கேட்டயாடி உன் மகன் பேசுகிற பேச்சை?'' என்று மனைவியை முறைத்தார் அவர்.

''எல்லாம் கேட்டுக்கிட்டுத்தான் இருக்கேன். மாணிக்கம்.. நீ பேசறது சரியில்லை. ஆமாம்.. சொல் லிட்டேன்.. அது என்னடா வார்த்தை பேசுகிற.. பசப்பற துன்னா அர்த்தம் என்னான்னு உனக்குத் தெரியுமா?'' விசாலாட்சி மகனிடம் சண்டைக்குப் போனாள்.

''அர்த்தம் தெரியாமலாடி இவன் அந்தக் கேள்வி யைக் கேட்கிறான்?'' ஆளவந்தார் படபடத்தார்.

''இப்ப நீங்க ரெண்டு பேரும் என்ன விஷயத்தை பேசிக்கிட்டு இருந்தீங்க?'' விசாலாட்சி யோசனையுடன் கேட்டாள்.

''எல்லாம்.. நம்ம நர்மதாவின் மகனுக்கு நம்ம பேத்தி பவித்ராவைக் கல்யாணம் பண்ணி வைக்கிற விஷயம் தான்..'' என்ற யதார்த்தமாகக் கூறினார் ஆளவந்தார்.

'அதுதான் இவன் நெஞ்சைப் பிடித்துக்கிட்டு உட்காரந் தானா..'

விசாலாட்சி அனுதாபத்துடன் தன் இரண்டாவது மகனைப் பார்த்தாள்.

''அதுசரி.. இப்ப எதுக்கு அந்த விஷயத்தைப் பேசி னீங்க.. கிடக்கிறதெல்லாம் கிடக்கட்டும்.. கிழவியைத் தூக்கி மணையில வையிங்கிற கதையாய்.. நமக்கு கவனிக்க ஆயிரம் ஜோலி இருக்கிறப்போ அந்தப் பேச்சு இப்ப தேவைதானா?''

''நானா பேசலை விசாலம்.. மாணிக்கம்தான் நர்மதாவைக் குறை சொன்னான்...''

''என்ன சொன்னான்?''

''என் பேத்திகள் இருக்கிறப்போ.. நர்மதா அவளோட மகன்களுக்கு வெளியே பெண்ணெடுத்துக்கிட்டு இருக்கா ளேன்னு சொன்னான்..''

''நீங்க உடனே.. அப்படியெல்லாம் இல்லைப்பா.. என் தம்பி மகள் தங்கக் கம்பி.. என் பேத்தி பவித்ராவைத்தான் அவளோட கடைசி மகன் தினகரனுக்கு கல்யாணம் பண்ணி வைக்கப் போகிறான்னு சொன்னீங்களாக்கும்?''

''அட.. ஆமாம்.. எப்படி விசாலாட்சி.. இப்படிக் கரெக்டா கண்டுபிடிச்ச?''

''வெத்தலையில் மை தடவி ஜோஸியம் பார்த்தேன்..''

''நானும் பார்த்தாலும் பார்த்தேன்.. யாரைக் கேட் டாலும் இடக்கா பதில் சொல்லணும்னா இப்படித்தான் சொல்லி வைக்கிறாங்க..''

''என்ன சொன்னாலும் உங்களைப் போல ஆளுகள் தான் திருந்த மாட்டீங்களே..''

''இப்ப நான் சொன்னதில என்ன தப்பிருக்கு?''

''ஒரு தப்பும் இல்லை.. இந்த விஷயத்தை நல்ல நேரம் பார்த்து சொன்னீங்க போங்க..''

''யாருடி இவ.. எதுக்கெடுத்தாலும் என்னையே குறை



சொல்லிக்கிட்டு.. நம்ம வீட்டுப் பெண்ணை.. நர்மதா மருமகளாக்கிக்கப் போறா.. இது சந்தோஷப்பட வேண்டிய விஷயமில்லையா?''

''ராமா.. இந்த மனுஷனுக்கு எப்படிச் சொன்னாலும் புரிந்து தொலைக்காது. நமக்குத்தான் பவித்ராவும் ஸ்வேதா வும் ஒண்ணு.. இரண்டு பேரும் நம்ம பேத்திகள்.. நம்ம வீட்டுப் பெண்கள்.. மாணிக்கத்துக்கு அப்படியா? அவனுக்கு பவித்ரா பெற்ற மகளில்லையே. தம்பி மகள் தானே.''

''இந்த ஆளவந்தாருக்கு மகனாகப் பிறந்துவிட்டு தன் மகள் வேற.. தம்பி மகள் வேறன்னு நினைக்கலாமாடி...''

அதுவரை.. கோட்டையூர் ஜமீன் வம்சத்தின் சம்பந்தம் கைநழுவிப் போய்விட்ட சோகத்தில் இருந்த மாணிக்க வாசகம் கோபத்துடன் நிமிர்ந்தார்.

''அப்பா.. கொலைவெறியைக் கிளப்பாதீங்க..''

''என்னடி.. இவன் இப்படி பினாத்தறான்..''

''மாணிக்கம்.. உன் அப்பா குணம்தான் உனக்குத் தெரியுமே. நீதான் கொஞ்சம் பொறுமையாய் போய்த் தொலைடா..''

''விளையாடறீங்களாம்மா.. காத்திருந்தவன் பெண் டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போன கதையா யில்ல என் கதை இருக்கு..''

''ஏண்டி விசாலம்.. காத்திருந்தவன் புருஷனைன்னுல்ல இவன் இப்ப சொல்லணும்.. மாற்றிச் சொல்கிறானே..''

''நீங்கதான் வாயை வைத்துக்கிட்டு வனவாசம் போகாம கொஞ்ச நேரம் அடங்கியிருங்களேன். அவன் ஏற்கெனவே கொலைவெறியில் இருக்கான். இப்ப நீங்க வேற அவனைக் கிளப்பி விடணுமா?''

''அவன் கிளம்புகிறானோ இல்லையோ.. நீ கிளப்பி விடுகிற முடிவோடத்தான் இருக்கடி..''

''நான் என் மகன்களைக் கிளப்பி விடணும்னு நினைத்திருந்தா எப்பவோ கிளப்பி விட்டிருப்பேன். போனாப் போகுதுன்னு நீங்க ஆடுகிற ஆட்டத்துக்கு தாளம் போட்டுக்கிட்டு இருக்கேன்..''

''ஓஹோ.. இத்தனை வருஷமாய் உன் மனசில இருந்த தெல்லாம் இப்பத்தாண்டி வெளியில வருது. கொட்டுடி..''

''எதைக் கொட்ட?''

''உன் அப்பன் வீட்டு சீர்வரிசையைச் சொல்லலை.. உன் மனசில இருக்கிறதைக் கொட்டு..''

''அதை நான் கொட்டினா நீங்க தாங்க மாட்டீங்க.. பிழைத்துப் போகட்டும்னு மனசில போட்டு அடக்கிக் கிட்டு இருக்கேன். என் அப்பன் வீட்டு சீர்வரிசையைப் பற்றி எகத்தாளமா பேச்சு வருது.. ஐந்து பைசான்னாலும் என் அப்பன் வீட்டிலிருந்துதான் எனக்குச் சீர் வருது. பெரியப்பனின் வீட்டில இருந்து வரலை..''

''சொல்லிக்காட்டறயாடி.. என் தம்பி மகளைச் சொல்லிக் காட்டறயா?''

''ஆமாம்.. அதுக்கு இப்ப என்னாங்கறீங்க?''

''என் தம்பி மகளுக்கு சீர்செய்வது உன் கண்ணை உறுத்துதா?''

''ஆமாமுன்னு சொன்னா அதை நிறுத்திருவீங் களா?''

''இவ்வளவு தூரத்துக்கு நீ வந்த பின்னால் ஒரு நிமிஷம்கூட நீ இந்த வீட்டில் இருக்கக்கூடாது. வீட்டை விட்டு வெளியே போடி..''



''இவ்வளவு பேச்சை நீங்க பேசி கேட்ட பின்னாலும்.. இங்கே நான் ஏன் விதியத்து நிற்கப் போகிறேன். இதோ.. என் தங்கமான மகன் மாணிக்கம் இருக்கிறான். இவன் வீட்டுக்குப் போனால்.. என்னைத் தங்கத்தட்டில் வைத்து காலம் பூராவும் காப்பாற்றுவான். வாடா மாணிக்கம்.. நாம போகலாம்..''

தகப்பனுக்கும் மகனுக்கும் இடையே தொடங்கிய சண்டை கணவனுக்கும் மனைவிக்கும் இடையேயான சண்டையாக முற்றி பிரிவு வரை போய்விட..

'இங்கே என்னதான் நடக்குது?' என்று புரியாமல் தலைமுடியைப் பிய்த்துக் கொண்டார் மாணிக்கவாசகம்.

ஆளவந்தார்.. தன் மூன்று மகன்களுக்கும் திருமணம் முடிந்த கையோடு.. சொத்தை பாகம் பிரித்துக் கொடுத்து விட்டார். மூன்று மகன்களும் தனித்தனியாய் தொழில் தொடங்கி தனித்தனி பங்களாக்களில் வாழத் தொடங்கி வருடக் கணக்காகிவிட்டது.

தனக்கென்று ஒதுக்கி வைத்திருந்த சொத்தில்.. தம்பி மகளுக்கு சீர்செய்து கொண்டு பூர்வீக வீட்டில் விசாலாட்சியோடு தனிக்குடித்தனம் செய்து கொண்டிருந் தார் ஆளவந்தார்.

சொக்கனுக்கு மீனாட்சி என்றால்.. ஆளவந்தாருக்கு விசாலாட்சி என்று உறவினர் வட்டாரத்தில் அவர்களுக்குப் பெயர் உண்டு.

வள்ளுவனையும் வாசுகியையும் போல வாழ வேண்டும் என்று அந்தப் பக்கத்து மக்கள் சொன்னதில்லை.

ஆளவந்தாரையும் விசாலாட்சியையும் போல வாழ வேண்டும் என்றுதான் சொல்லுவார்கள்.

அப்படிப்பட்ட பிரசித்திபெற்ற ஒற்றுமையான தம்பதிகளான ஆளவந்தாரும் விசாலாட்சியும் அத்தனை வருட மணவாழ்க்கைக்குப் பின்னால் கோர்ட் படி ஏறாமல்.. விவாகரத்து வரை போய்விட வைத்த புண்ணியத்தைக் கட்டிக் கொண்ட மாணிக்கவாசகம் திருதிருவென விழித்தார்.

'அடக்கடவுளே.. அம்மாவுடன் வீட்டுக்குப் போனால்.. என் பெண்டாட்டி.. என்னை அடித்தே விரட்டி விடுவாளே..'

பயந்துபோன மாணிக்கவாசகம்.. உடனடியாக தாய்க்கும் தகப்பனுக்கும் சமரசம் செய்து வைக்க முனைந்தார்.

''அடடா.. இப்ப என்ன நடந்திருச்சுன்னு அப்பா மேல இப்படிக் கோபப்படறீங்கம்மா?''

''இன்னும் என்னடா நடக்கணும்.. நானும் மூன்று மகன்களைப் பெற்று வச்சிருக்கேன். என் மூன்று மகன்களும் பெண்களைப் பெற்று வைச்சிருக்காங்க..''

''அதுக்கென்னம்மா இப்ப?''

''அந்த நர்மதாவும் மூன்று மகன்களைப் பெற்று வைச்சிருக்கா..''

''அதுக்குத்தானேம்மா.. என் வயிறு எரியுது..''

''அந்த மூன்று மகன்களுக்கும் என் மூன்று மகன்களின் வீட்டில் இருந்து பெண்ணெடுத்திருக்கணுமா.. வேண்டாமா?''

''அட.. மற்றவங்களை விடுங்கம்மா.. என் வீட்டிலிருந்து பெண்ணெடுத்திருக்கணுமா... வேண்டாமா?''

''அதைத்தான் நானும் கேட்கிறேன். அப்படிப்பட்டவளை தட்டிக் கேட்காத இவருடன் நான் குடித்தனம் பண்ணமாட்டேன்.. வா.. உன் வீட்டுக்குப் போகலாம்..''



''அட.. பொறுங்கம்மா. இப்ப என்ன ஆச்சு.. நர்மதா என் வீட்டில் பெண் எடுக்காட்டி என்ன.. என் தம்பி வீட்டில் பெண் எடுக்கிறாளா இல்லையா? நாம அதைப் பார்ப்போமே..''

''அப்படியா சொல்கிற?''

''அப்படித்தான் சொல்கிறேன்..''

''அப்ப சரி.. நான் உன் வீட்டுக்கு வரலை..''

மாணிக்கவாசகம்.. தப்பித்தேன் பிழைத்தேன் என்று வீட்டை நோக்கி ஓடினார்.

## 122

*சொல்லத் துடிக்கும் உணர்வுகளையே...*
*சொல்ல முடியாமல் போவதையே...*
*என்னவென்று நான் சொல்ல?*

'புயலுக்குப் பின்னால் வரும் அமைதி என்பது இது தானா?'

ஓய்ந்து போய் ஹாலில் இருந்த சோபாவில் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தாள் விசாலாட்சி. வீட்டில் அமைதி ஆட்சி புரிந்தது. காபியின் மணம் நாசியைத் துளைக்கவும் தலைநிமிர்ந்து பார்த்தாள். ஆளவந்தார் காபியுடன் நின்றுகொண்டிருந்தார். விசாலாட்சி பரபரப்புடன் எழுந்து கொள்ளப் போனாள். ஆளவந்தார் அவளை கையமர்த்தியவாறு அருகில் அமர்ந்தார்.

''உட்காரு விசாலம்..''

''உங்களை யாரு காபி போடச் சொன்னது? செண்பக மும் வீட்டில் இல்லையே.. காய்கறி வாங்கப் போய்விட் டாளே..''

''நல்லவேளையாக.. அவள் வெளியே போயிருந் தாள்.. இல்லைன்னா நம்ம வீட்டில் நடந்த கூத்து.. கருங்கல் பூராவும் பரவியிருக்கும்..''

''வேற என்னதான் செய்யறது.. காட்டுத்தீயை அணைக்கணும்னா.. எதிரே தீப்பிடிக்க வைக்கணுமாம்.. தீயை தீதான் அணைக்கும்னு நினைச்சேன்.. சண்டையை ஆரம்பிச்சுட்டேன்..''

''நீ கண் ஜாடை காட்டியதும் நானும் புரிஞ்சுக் கிட்டேன். சும்மா சொல்லக்கூடாது விசாலம்.. நீ நல்லாவே நடிச்சே..''

விசாலாட்சி கசப்பாக சிரித்தாள். அந்தச் சிரிப்பில் வேதனை இழையோடியது.

''வேற என்ன செய்ய? பெற்ற பிள்ளையை நம்மால் கட்டுப்படுத்த முடியலை. பேசாமல் இரு கோடுகள் தத்துவத்தை இழுத்துவிட்டேன். மாணிக்கம் அடங்கிட் டான்..''

''ஒரு கோட்டை சிறியதாக்கணும்னா.. அதுக்குப் பக்கத்தில் இன்னொரு கோட்டை பெரிதாகப் போடணும்.. அப்படித்தானே..''

''ஆமாம்.. பாலசந்தர் சினிமாவில் அப்படித்தானே சொல்லியிருக்கார்?''

''நம்ம காலத்துப் படம்.. இப்பல்லாம் இதுபோல படம் வருதா என்ன?''

''நல்ல சினிமாவுக்கு மட்டும் பஞ்சமில்லை.. உண்மை யான பாசம்.. அன்பு.. நட்பு.. இதுக்கும் இப்ப பஞ்சமாகிருச்சு..''



''வாசவனும் நம்ம பிள்ளை.. மாணிக்கமும் நம்ம பிள்ளை.. இரண்டு பேரில் யாருக்குன்னு நாம பார்க்கிறது விசாலம்?''

''அதுதானே.. ஸ்வேதாவும் பவித்ராவும் நம்ம பேத்தி கள். இவங்களில் யாரை நாமதா மருமகளா ஏத்துக்கிட் டாலும் நாம சந்தோஷம்தானே படணும்?''

''என்னவோ போ.. எனக்கொண்ணும் திருப்தியில்லை.. இதெல்லாம் நல்லதுக்கு நடக்கிறதா என் மனசுக்குப் படலை..''

''சரி... சரி.. விடுங்க. செண்பகம் வந்துட்டா. நடக் கிறது எல்லாம் அந்த நாராயணன் செயல். பெருமாள் மேலே பாரத்தை போட்டுவிட்டு.. ஆக வேண்டிய காரியத்தை நாம பார்க்கலாம்..''

ஆளவந்தார் எழுந்து மாடிக்குப் போக.. விசாலாட்சி.. செண்பகத்திடம் அன்றைக்கு சமைக்க வேண்டிய மெனு வைச் சொல்ல ஆரம்பித்தாள்.

ஸ்வேதா கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்துக் கொண்டாள்.. இளமையாக.. அழகாக.. செழிப்பாக இருந்த தன் பிம்பத்தை அவள் ரசித்துக் கொண்டிருந்தபோது.. மாணிக்கவாசகத்தின் பதற்றக் குரல் கேட்டது.

''ஸ்வேதா.. ஸ்வேதா..''

ஸ்வேதாவிற்கு கண்ணாடியை விட்டு நகர மன மில்லை.

'உனக்கென்ன ஸ்வேதா குறை?' என்று அவள் தன் பிம்பத்தைப் பார்த்துக் கேட்டுக் கொண்டாள்.

'உன் அழகிற்கு உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள அந்த தடிப்பயல்களுக்கு கொடுத்து வைக்க வில்லை..' அவள் தன்னைத்தானே ரசித்துக் கொண்டிருந்த போது.. மாணிக்கவாசகம் ஆத்திரமாக உள்ளே வந்தார்.

''காட்டுக்கத்தலாகக் கத்துகிறேன்.. உன் காதில் விழவில்லையா?''

அவர் கத்தியது காட்டுக் கத்தல்தான் என்பதை நிரூபிப்பதைப் போல.. பரிமளம்.. கீழேயிருந்து மாடிக்கு ஓடி வந்தாள்.

''என்னங்க.. என்ன ஆச்சு? எதுக்கு இந்தச் சத்தம் போடுகிறீங்க?''

''குடிமுழுகிப் போச்சுடி.. அப்புறம் கத்தாமல் என்ன பண்ண?''

''என்னதான் ஆச்சுன்னு சொல்லுங்களேன்..''

மாணிக்கவாசகம் மனைவியின் கேள்விக்கு பதிலளிக்காமல் மகளை உற்றுப் பார்த்தார். அவரது பார்வையின் கோபத்தைக் கண்டு ஸ்வேதா துணுக்குற்றாள்.

''என்னப்பா?''

''நீ எதுக்கும்மா மார்த்தாண்டத்தில் அந்த அறுபது நாளும் தங்கின?''

''அந்த மாலினியை விரட்டுவதற்காகப்பா..''

''பவித்ராவையும் ஏன் உன் கூடத் தங்க வைச்சே..''

''அவள் காலத்துக்கும் தினகரன் இருக்கும் திசைப் பக்கம் தலை வைத்துக்கூடப் படுக்கக்கூடாது என்பதற்காக..''

''இரண்டையும் செய்துவிட்டாயா?''

''என்னப்பா இப்படிக் கேட்கிறீங்க.. மாலினி வேலையை விட்டுவிட்டே சென்னையைப் பார்த்து ஓடி விட்டாள். பவித்ரா குரங்கெல்லாம் ஒரு ஆளாப்பா? அவளும் காயத்ரியின் கல்யாணத்தன்னிக்கே கருங்கல்லுக்கு வந்துவிட்டாளே..''

''நீ நினைத்தது இரண்டுமே நடக்கவில்லைம்மா...''



''அப்பா...''

மாணிக்கவாசகம் கூறியதன் பொருள் புரிந்தவளாக ஸ்வேதா அலறினாள்.

பரிமளமோ கணவனை முறைத்தாள்.

''இப்ப என்ன அலுவலுக்கு வேலை மெனக்கேட்டு இதை வந்து இவகிட்ட சொல்கிறீங்க?''

''என்னடி சொல்ற?''

''உங்களுக்கு முன்னாலேயே எனக்கு இந்த விஷயம் தெரியும். நான் இவகிட்ட மூச்சுவிட்டேனா?''

''என்கிட்ட ஏண்டி மூச்சுவிடலை?''

''இதோ.. இப்ப ஆடிப் பறக்கறீங்களே.. இப்படி ஆடிப் பறக்கறதை நிறுத்தத்தான். யார் வீட்டில் கல்யாணம் நடந்தா நமக்கென்ன? நாம நம்ம பொண்ணு கல்யாணத்தை நடத்தப் பார்ப்போம்..''

''நானே வயித்தெரிச்சலில் வந்திருக்கிறேன். என் வாயைக் கிளறாதே..''

''ஊரில நடக்கிற கல்யாணத்தைப் பத்தி வயித்தெரிச்சல் படாம நம்ம பொண்ணுக்கு நல்ல இடத்தில் மாப்பிள்ளை தேடுகிற வழியைப் பாருங்க...''

''அம்மா.. பொறுங்க..''

அசையாமல் நின்றிருந்த ஸ்வேதா வாய் திறந்தாள்.

''ஆரம்பிச்சிட்டியா?''

பரிமளம் தலையில் கைவைத்தாள்.

''என்னப்பா நடந்தது?''

''நாளைக்கு மறுநாள் வெள்ளிக்கிழமையன்னிக்கு.. நர்மதாவின் குடும்பம் சென்னைக்குப் போகுது..''

''எதுக்காம்?''

''பிரபாகரனுக்காக மாலினியைப் பெண் கேட்கப் போகுது..''

''எப்படிப்பா.. இது எப்படி நடக்கும்?''

''நடக்குதேம்மா.. இதுக்கே அடிச்சுக்கிட்டா எப்படி? பிரபாகரனின் கல்யாணம் முடிஞ்ச கையோடு.. தினகரனுக்கு பவித்ராவை நிச்சயம் பண்ணப் போகிறாங்களாம்..''

நிற்க முடியாமல் தள்ளாடி சுவரில் சாய்ந்தாள் ஸ்வேதா. 'இது எப்படிச் சாத்தியம்?' அவள் மனம் அரற்றியது..

எல்லாவற்றையும் பார்த்துப் பார்த்துச் செய்தாளே.. உடைக்க முடியாத உறவை.. ஓர் இரவில் உடைத்து நொறுக்கினாளே. பிரிக்க முடியாத பந்தத்தை பிரித்துக் காட்டினாளே.

அது அத்தனையும் வீணா? ஸ்வேதா பட்ட பாடு அனைத்தும் விழலுக்கு இறைத்த நீரா?

சறுக்கல் இல்லாத திட்டத்தில் எப்படி ஸ்வேதா சறுக்கினாள்? உடைந்துவிட்ட கண்ணாடித் துண்டுகள் எப்படி மீண்டும் ஒட்டிக்கொண்டன?

''தோற்று விட்டேனேப்பா..'' அவள் மறுகினாள்.

''இதுக்குத்தான் நாம் ஒன்று நினைத்தால்.. தெய்வம் ஒன்று நினைக்கும் என்பது. நீ நல்லதே நினைத்திருந்தால் நன்மையே நடந்திருக்கும்.. தீமையை நினைத்தாய். அது உனக்கு தீமையாய் வந்து முடிந்துவிட்டது..'' பரிமளம் கனல் கக்கினாள்.

''நீ சும்மா இரு..'' மாணிக்கவாசகம் மனைவியை அதட்டினார்.



''நீங்க சும்மாயிருங்க..'' அவள் கணவனிடம் எரிந்து விழுந்தாள்.

ஸ்வேதா சுவரில் சரிந்து அமர.. பரிமளம் அவள் பக்கத்தில் அமர்ந்து கொண்டாள்.. மகளின் முகத்தை நிமிர்த்தி அவள் விழிகளுக்குள் பார்த்தாள்.

''புரிந்ததா ஸ்வேதா.. மனுஷங்க கையில் எதுவும் இல்லை.. கடவுளின் கையில்தான் எல்லாம் இருக்குன்னு இப்போதாவது புரிந்ததா?''

''அம்மா...'' ஸ்வேதா விசும்பினாள்.

''இந்த உலகத்திலேயே அந்த நர்மதாதான் கோடீஸ்வரியாடி.. அவ பெற்ற பிள்ளைகள்தான் மன்மத ராசாக்களா? அவளைவிட பெரிய இடத்தில்.. அவ மகனுகளை விட அழகானவனாகப் பார்த்து கல்யாணம் பண்ணிக் கொண்டு குடும்பம் நடத்திக் காட்டு.. அப்ப நீ ஜெயித்தவ. அவங்க கண்ணுக்கு முன்னால் அவங்களைவிட நல்லா வாழ்ந்து காட்டு.. அப்ப நீ ஜெயிச்சவ. அதை விட்டுவிட்டு சூனியக்காரியைப் போல அவ குடும்பத்தின் நிம்மதியை அழிக்கணுமுன்னு கிளம்புகிறயே.. இதுவா புத்திசாலித்தனம்?''

''அப்ப.. நான் பட்ட வேதனை.. அவமானம்.. இதுக்கெல்லாம் பழிவாங்க வேண்டாமா?''

''அதெல்லாம் எதனால் வந்தது.. மதியாதார் தலைவாசல் மிதிக்காதேன்னு ஔவையார் சொல்லியிருக்காங்க. யாரும் இருக்கும் இடத்தில் இருந்து கொண்டால் எல்லாம் சௌக்கியமேன்னு கண்ணதாசன் சொல்லியிருக்கிறார். நீ இந்த இரண்டு பேரின் வாக்கையும் கேட்காமல் போயிட்டயே ஸ்வேதா..''

''அப்பா ஆசைப்பட்டாரேம்மா..''

''நீ ஆசைப்பட்டாயா.. உன் மனச்சாட்சியைத் தொட்டுச் சொல்லு.. அந்த நர்மதாவின் மகன்கள் மேல் உனக்கு ஆசையா?''

ஸ்வேதா யோசித்தாள்.

எப்போதும் கண்ணுக்குத் தெரியாத பிரம்புடன் இறுக்கமான முகத்துடன் நடமாடும் பிரபாகரனின் மேல் அவளுக்குப் பிடித்தம் கிடையாது.

தினகரனோ.. அழகான பெண்களைக் கண்டு விட்டால் ஜொள்ளுவிட்டு தரையைக் கழுவிக் கொண்டு அவர்கள் பின்னாலேயே போய் விடும் உல்லாசி. அவனின் மேலும் அவளுக்கு பிடித்தம் கிடையாது.

''இல்லையேம்மா..''

''அப்புறம் எதுக்கு அவங்களைப் பற்றிக் கவலைப் படுகிற.. அப்பா சொன்னார்.. ஆட்டுக்குட்டி சொன்னா ருன்னு. சொல்வார் பேச்சைக் கேட்டுக் கெட்டுப் போகா தேம்மா.. உனக்கு என்ன குறை?''

'ஒரு குறையும் இல்லையே..

''உன் அழகுக்கு என்ன குறை?''

'அதைத்தானே நானும் நினைத்துக் கொண்டிருந் தேன்?'

''நீ அவங்களைவிட உயர்த்தியான இடத்தில் வாழ்க்கைப்படுவாய் ஸ்வேதா.. நன்றாக வாழ்வாய்..''

''அம்மா...''

ஸ்வேதா, பரிமளத்தின் மடியில் படுத்து கண்மூடிக் கொண்டாள். அவள் விழிகளில் இருந்து கண்ணீர் வழிந் தது. மகளின் துயரம் கண்டு மாணிக்கவாசகம் சங்கடப் பட்டார். பரிமளத்தின் பார்வை அவரைக் குத்திக் கிழித்தது. அவர் வெளியே கிளம்பினார்.



''எங்கே போகறீங்க..?''

''ஸ்வேதாவிற்கு மாப்பிள்ளை பார்க்க. பிரபாகரனின் கல்யாணத்திற்கு முன்னால் என் மகளின் கல்யாணம் நடக்க வேண்டும்..''

''இது ஆம்பளைக்கு அழகு.. ஒரு அப்பனுக்கு அழகு..''

பரிமளம் கொதிப்புடன் பேச.. மாணிக்கவாசகம் தலை கவிழ்ந்து வெளியேறினார்.

''நீ தேவதையாக இருக்கக் கற்றுக் கொள் ஸ்வேதா. பிரியம் காட்டிப் பார். உனக்கு அது திரும்பக் கிடைக்கும். இனியாவது நீ நீயாக இரு..''

பரிமளம் மகளின் மனதில் உருவேற்றினாள். மெல்ல மெல்ல ஸ்வேதா மாறினாள். பரிமளம் மகளை மாற்றிக் காட்டினாள்.

123

*நிலவொளியில் உன்னுடன் நடந்திடவே..*
*நிலவுகள் எங்கும் நிலையில்லையே..*
*என்னவென்று நான் சொல்ல?*

மாலினி மனதிற்குள் ஒருவித பதற்றம் பரவுவதை உணர்ந்தாள். வரப்போகிற குடும்பம்.. அவளறிந்த குடும்பம் தான். அவளைப் பெண் பார்க்கப் போகிறவன்.. அவளுடன் கலந்துவிட்டவன்தான். ஆனாலும் பெண்மைக்கே உரிய எதிர்பார்ப்பும் நடுக்கமும் அவளுக்குள் வேர்விட்டன.

''நீ கெட்டிக்காரிடி.. வேலை பார்க்கன்னு மார்த்தாண்டத்துக்குப் போய்.. மாப்பிள்ளையைப் பார்த்துவிட்டு வந்துவிட்டாயே..'' பானுவின் குரலில் பொறாமை தொனித்தது.

''ச்சீ.. சும்மா இரு.. அப்பாவின் காதில் விழுந்துவிடப் போகுது..''

''ஆமாம்.. மாப்பிள்ளை எப்படி இருப்பார்?''

''மாப்பிள்ளை போலவே இருப்பார்..''

மாலினியின் குரலில் பெருமை தொனித்தது. அவள் மனக்கண்ணில் பிரபாகரனின் தோற்றம் தோன்றியது. அவள் மயங்கினாள். அந்த மயக்கத்தை உணர்ந்த பானு..

''ஊம்.. ஊம்.. நடத்து'' என்று கேலி செய்தாள்.

''ரெடியாகிட்டயா?'' காவேரி பரபரப்புடன் அறைக்குள் வந்தாள்.

மாலினி திரும்பித் தாயைப் பார்த்தாள். மெரூன் கலர் பிரிண்டட் சில்க் சேலை கட்டியிருந்தாள். அந்தச் சேலையில் பதிக்கப்பட்டிருந்த வெள்ளைக் கற்கள் ஒளிர்ந்தன. அழகாக வெட்டித் தைக்கப்பட்டிருந்த ரவிக்கையின் கைப்பகுதியிலும் கழுத்துப் பகுதியிலும் வெள்ளைக் கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. கழுத்திலும்.. காதிலும்.. கைகளிலும்.. மெரூன் கலர் கல் பதிக்கப்பட்ட.. செட்டாக எடுக்கப்பட்ட நகைகளை அணிந்திருந்தாள். நெருக்கிக் கட்டப்பட்ட மல்லிகைச்சரம் தோளில் வழிந்தது. நெற்றியின் மெரூன் வண்ண ஸ்டிக்கர் பொட்டின் நடுவில் வெள்ளைக் கல் ஒளிர்ந்தது. மகளின் அழகைக் கண்டு பிரமித்தாள் காவேரி.

''எப்படி.. மாப்பிள்ளை மயங்கி விழுந்து விடுவாரில்ல?'' பானு சிரித்தாள்.



காவேரி அதைக் கண்டுகொள்ளாமல் வெளியேறவும்..

''அதுதான்.. ஏற்கெனவே மயங்கிவிட்டாரே..'' என்று கண்சிமிட்டினாள் பானு.

அவள் சொன்னதைப் போலவே.. பெண் பார்க்க வென்று வந்த எல்லோரின் மத்தியிலும் அமர்ந்திருந்த பிரபாகரன்.. அவளை விழுங்கிவிடுவதைப் போலப் பார்த்தான்.

'எப்படிப் பார்க்கிறான் பார்..' மாலினி தரை நிமிர சங்கடப்பட்டாள்.

ஆளவந்தார்.. விசாலாட்சி.. காயத்ரி.. ஷ்யாம்சுந்தர்.. கருணாகரன்.. சசிரேகா.. நர்மதா.. தினகரன் என்று அனைவரும் வந்திருக்கும்போது பிரபாகரன் இப்படிப் பார்த்து வைத்தான். அவளும்தான் என்ன செய்வாள்?

''பெண்ணுக்குப் பாடத் தெரியுமா?'' வேண்டுமென்றே பிரபாகரன் கேட்டான்.

அவளை நிமிர்ந்து பார்க்க வைக்க.. அவன் செய்யும் யுக்தி அது என்று கண்டுகொண்ட மாலினியின் லஜ்ஜை அதிகமானது. அவள் கன்னம் சிவந்தாள்.

''பார்த்தியா காயத்ரி.. உன்னைப் பெண்பாக்க வந்தபோது இதைக் கேட்கணும்னு எனக்குத் தோணலையே.. உன் அண்ணன் எப்படிக் கேட்கிறார் பாரேன்..'' ஷ்யாம் சுந்தர், காயத்ரியிடம் கூறுவதைப் போலப் பலமாகக் கூறினான்.

''உங்களுக்கு அது தெரியலைன்னா அதுக்கு நாங்க என்ன பண்ணுவதாம்?'' காயத்ரி செல்லக் கோபத்துடன் கணவனை முறைத்தாள்.

''ஒருவேளை.. பாட்டுக்கும் மாப்பிள்ளைக்கும் ரொம்பத் தூரமோ என்னவோ..'' தினகரன் கேலி செய்தான்.

''ஆமாமாம்.. என்னதான் இருந்தாலும்.. உங்க அள வுக்கு சங்கீத ஞானம் எனக்கு வராதுதான்.. ஏன் காயத்ரி.. உன் தினகரன் அண்ணனைப் பாடச் சொன்னால்.. என்ன பாட்டு பாடுவார்.. அவ என்னை.. என்னைத் தேடி வந்த அஞ்சலைன்னு பாடுவாரா?'' பதிலுக்கு ஷ்யாம்சுந்தர் கிண்டலடித்தான்.

''அந்தக் காலத்தில நான் உன் பெரியம்மாவைப் பொண்ணு பார்க்கப் போயிருந்தப்போ.. உன் பாட்டி.. அது தான் என் அம்மா.. உன் பெரியம்மாவை என்னவெல்லாம் செய்யச் சொல்லுச்சு தெரியுமா?'' ஆளவந்தார், நர்மதா விடம் கூறியவாறு மலரும் நினைவுகளில் ஆழ்ந்தார்.

''என்ன செய்யச் சொன்னாங்க பெரியப்பா..'' நர்மதா மரியாதைக்காக கேட்டு வைக்கப் போக.. உடனே ஆளவந்தார் ஆரம்பித்துவிட்டார்.

''பொண்ணுக்கு ஆடத் தெரியுமா.. பாடத் தெரியு மான்னு ஒரே கேள்வி.. அத்தனைக்கு பின்னாலயும் ஒரு அர்த்தம் இருந்தது நர்மதா..''

''அது என்ன பெரியப்பா..''

''ஆட்டத்தைப் பார்க்கிற சாக்கில்.. பெண்ணுக்கு கை கால் நல்லா இருக்கான்னு பார்த்துவிடலாம். பாட்டைக் கேட்கிற சாக்கில் பெண்ணோட பல் வரிசையையும் குரலை யும் பார்த்து.. கேட்டுவிடலாம். எப்படி எங்க அம்மாவோட ஐடியா..''

விசாலாட்சி முறைக்கவும்தான் ஆளவந்தார் அடங் கினார். தினகரன் சிரித்துவிட்டான்.

''எல்லாம் சரிதான் தாத்தா.. முன்பின் பார்க்காத பெண்ணுன்னா.. நீங்க சொல்வது சரிதான். எங்களுக்குத் தான் அண்ணி எப்படி நடப்பாங்க. எப்படிப் பேசுவாங்கன்னு தெரியுமே. அப்புறம் எதுக்கு இந்த பரிட்சை?''



ஆனால்.. அவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே உள்ளே போய்விட்ட காவேரி.. வீணையுடன் திரும்பி வந்தாள்.

''என்னங்க இது.. என் மகன் என்னவோ விளையாட் டுக்கு கேட்டான்?'' நர்மதா ஆச்சரியத்துடன் சொன்னாள்.

''விளையாட்டாய் கேட்டாலும்.. அவங்க கேட்டதைச் செய்யணும் இல்லையா.. மாலினி சின்ன வயதிலிருந்து வீணையும் பாட்டும் கற்றுக் கொண்டிருக்கிறா.. கத்துக் கிட்ட வித்தையை அவளும் காட்டட்டுமே..'' காவேரி மரியாதையுடன் கூறினாள்.

பிரபாகரன் ஆர்வமாக கால் மேல் கால் போட்டு சாய்ந்து அமர்ந்து விட்டான். நர்மதாவுக்கும் காயத்ரிக்கும் ஆச்சரியம். அவர்களுக்கு மாலினிக்கு வீணை வாசிக்கவும், பாடவும் தெரியும் என்பது தெரியாது. அதை தெரிந்து கொண் டதும் அவள் பாடுவதைக் கேட்க அவர்கள் விரும்பி னார்கள்.

மாலினி.. வீணையை மீட்டி சுருதி சேர்த்தாள்.. பின்னர் மெல்லிய.. இனிமையான குரலில் பாட ஆரம்பித்தாள்.

*''கன்னன் மனநிலையை தங்கமே தங்கம்..*
*கண்டுவர வேணுமடி தங்கமே தங்கம்..*
*என்னம் உரைத்துவிடின் தங்கமே தங்கம்..*
*ஏதேனும் செய்குவோமடி தங்கமே தங்கம்..''*

அவளுடைய கண்ணன் புருவம் உயர்த்தி அவளது இசையை வியந்தான் அவன் மனதில். அணைக்கட்டின் அருகே.. அவள் பாடிய.. 'அழகிய அசுரா..' பாடல் ஒலித்தது.

*''நேரம் முழுதும் அப்பாவி தன்னையே*
*நெஞ்சம் நினைந்து உருகுதடி தங்கமே தங்கம்..*
*தீர ஒரு சொல் இன்று கேட்டு வந்திட்டால்*
*அந்த தெய்வம் இருக்குதடி தங்கமே தங்கம்..''*

அவள் மனம் பாகாய் கரைந்தது அவளது பாடலில் தெரிந்தது. பிரபாகரன் மனம் மயங்கினான்.

*"ஆற்றங்கரை அருகே..*
*அன்று ஒருநாள்..."*

மாலினியின் விழிகள் உயர்ந்து பிரபாகரனைப் பார்த்தன. அவனைப் போலவே அவளும் அணைக்கட்டை நினைத்துவிட்டதை புரிந்துகொண்ட பிரபாகரன் கிளர்ந்தான்.

*"எனை அணைத்து*
*பல கதைகள் பேசியதென்னாம்..."*

அன்று அவன் கூறிய கதைகளை நினைத்து அவளது கன்னம் சிவந்தது. அதை உணர்ந்த பிரபாகரனின் நெஞ்சம் இனித்தது.

*"நூற்றி நகர் முரசு சாட்டுவேனென்று*
*சொல்லி வருகுவாயடி தங்கமே தங்கம்.."*

அவர் மிரட்டலாகப் பாடி முடித்தபோது.. அங்கிருந்த அனைவருமே அவளது பாடலில் சொக்கிப் போயிருந்தார்கள்.

## 124

*பார்வையிலே எனைக் கொல்லும்..*
*உன் பார்வையின் தன்மையினை..*
*என்னவென்று நான் சொல்ல?*

நர்மதா, மாலினியின் கழுத்தில் வைர அட்டிகையைப் போட்டு திருமணத்தை உறுதி செய்தாள். நிச்சய



தாம்பூலத் தட்டுக்கள் மாற்றிக் கொள்ளப்பட்டு.. நிச்சயதார்த்த பத்திரிகையும் வாசிக்கப்பட்டது. திருமணத்திற்கு நாள் குறிக்கப்பட்டது.

கிளம்புவதற்கு முன்னால் மாலினிக்கு அருகே வந்த பிரபாகரன், ''இன்னும் எண்ணி பதினைந்தே நாள்கள் தான்..'' என்று முணுமுணுத்து விட்டுச் சென்றான்.

அவன் அப்படி ரகசியக் குரலில் பேசியது மாலினிக்கு பிடித்திருந்தது.

''என்னடி.. உன் ஆள் உன்னிடம் ஏதோ ரகசியம் பேசியதைப் போல இருந்ததே.. என்னவாம்?'' பானு குடைந்தாள்.

''நீயே அதை ரகசியம்னு சொல்லிட்ட.. ரகசியத்தை யாராவது வெளியே சொல்வாங்களா?'' மாலினி சிரித்து தப்பித்தாள்.

''ஃப்ரெண்ட்ஸுக்குள் என்னடி ரகசியம் வேண்டிக்கிடக்கு?'' பானு விடாக்கண்டியானாள்.

'காதல் நட்பைவிட ரகசியமானது...' மாலினியின் இதழ்களில் ரகசியப் புன்னகை உதித்தது.

''ம்ஹூம்.. நீ முன்னே மாதிரி இல்லைடி..'' பானு பொருமினாள்.

''ஏன்.. அதே கண்ணு.. அதே மூக்கு.. அதே வாய்.. வேணும்னா இந்த டி.வி. விளம்பரத்தில் வருகிறதைப் போல ஏதாவது ஸ்நாக்ஸ் பாக்கெட்டை கையில் கொடு. பிடித்துக்கிட்டு போஸ் கொடுக்கறேன்.. அதுக்குப் பின்னாலாவது நான் நான்தான்னு நீ நம்புவாயா?'' மாலினி கலாய்த்தாள்.

''இந்த வாய்க்கொண்ணும் குறைச்சலில்லை..'' பானு அலுத்துக் கொள்ள..

''இந்த வாய்தாண்டி என்னை வாழ வைக்குது..'' என்று பிரபாகரனின் நினைவுகள் மனதை வருட.. தொலைதூரத் தில் பார்வையைப் பதித்து மாலினி கூறினாள்.

''ஆரம்பிச்சுட்டாம்மா.. ஆரம்பிச்சுட்டா..'' பானு தலையில் கை வைத்துக் கொள்ள...

''எதை.. யார் ஆரம்பிச்சது..'' என்று காவேரி கேட்டாள்.

''வேற யார் ஆரம்பிச்சது.. எல்லாம் நம்ம மாலினி தங்கம்தான்..'' பானு தோழியைக் காட்டினாள்.

''என்ன மாலினி?'' காவேரி விசாரிக்க..

''ஒன்றுமில்லைம்மா.. இவள் ஏதோ உளறுகிறாள்..'' மாலினி, பானுவை முறைத்தாள்.

''யார்.. நான் உளறுகிறேனா? சொல்லுவடி சொல்லுவ. நீ இதையும் சொல்லுவ.. இதுக்கு மேலயும் சொல்லுவ. புரியாத பாஷையில் உளறிக்கிட்டு இருப்பது நீயா.. இல்லை நானா?''

''நீயென்ன கோபிநாத்தா?''

''நீயென்ன சந்திரமுகியா?''

தோழிகள் இருவரும் சண்டைக்கோழியாய் முறைத்துக் கொள்ள.. காவேரி சிரித்துக் கொண்டே அந்த இடத்தை விட்டு அகன்றாள்.

ஜானகிராமன் திருமணத்திற்கான பட்ஜெட் போடும் வேலையில் அமர்ந்தார். அவரைச் சுற்றி.. குடும்ப உறுப்பினர்கள் அமர்ந்தார்கள்.

''சொல்லு காவேரி.. மாலினிக்கு இன்னும் என்ன நகை போடணும்?'' ஜானகிராமன் ஆரம்பித்து வைத்தார்.

''ம்ம்.. அவளுக்கு அட்டிகை மூன்று இருக்கு.. டாலர் செயின்.. ஆரம்.. அரை டஜன் வளையல்கள்... கம்மல்ன்னு செய்து வைத்துட்டோம். இனி என்ன வாங்கலாம்..'' காவேரி யோசனையில் அமிழ..

''அப்பா..'' என்று தயக்கத்துடன் அழைத்தாள் மாலினி.

''என்னம்மா.. உனக்கு எதுவும் நகைமேல ஆசையாயிருக்கா?'' ஜானகிராமன் பாசத்துடன் வினவினார்.

''சொல்லும்மா.. அப்பா கேட்கிறாரில்ல..'' காவேரி பாசத்துடன் மகளின் தலையைத் தடவினாள்.

'ம்ஹூம்.. இந்தத் தாங்கலை என் வீட்டில் தாங்கறாங்களா..' ராதிகா மனதிற்குள் குமைந்து கொண்டாள்.

''எனக்கு இருக்கிற நகையே அதிகம்ப்பா.. இதுக்கு மேல நகை எடுக்க வேண்டாம்..'' மாலினி மறுத்துப் பேசினாள்.

''நீ குழந்தை.. உனக்கு என்னம்மா விவரம் தெரியும்?'' ஜானகிராமன் ஆட்சேபிக்க.. காவேரி அதை ஆமோதித்தாள்.

'குழந்தைக்கு எதுக்கு கல்யாணம் பண்ணப் பார்க்கிறாங்க..' ராதிகா மாமனாரும் மாமியாரும் நாத்தனாரைக் கொஞ்சியதில் எரிச்சல் பட்டாள்.

''அவங்க பெரிய இடம் மாலினி.. அதுக்குத் தகுந்தாற் போல இல்லாட்டியும் ஓரளவுக்காவது நாமும் சீர் செய்யணும்மா..'' காவேரி.. தன் மகளை குழந்தையாகவே பாவித்து.. குழந்தைக்கு சொல்வதைப் போல எடுத்துச் சொன்னாள்.

'இன்றைக்கு கல்யாணம் பண்ணி வைத்தா.. பத்தாம் மாசம்.. இவ ஒரு குழந்தையைப் பெற்று கையில் தந்து விடுவா. குழந்தையாம் குழந்தை...' மனதில் நினைப்பதை

வெளியில் சொல்ல முடியாமல் ராதிகா பல்லைக் கடித்தாள்.

''அம்மா.. அப்பா சொல்வதும் நியாயம்தான் மாலினி..'' ரஞ்சித் பொறுப்பான அண்ணனாகப் பேசி வைக்கவும், ராதிகா பதறிப் போனாள்.

'அடக்கடவுளே.. இந்த மனுஷனும் தலை கொடுக்கப் பார்க்கிறாரே.. உடனே இந்தப் பேச்சை அமுக்கியாகணுமே..'

''ஏங்க.. என்னதான் ஊர்க்குருவி உயர உயரப் பறந்தாலும் அது பருந்துக்கு சமமாகிவிடுமா?'' ராதிகா எதையோ சொல்ல நினைத்து.. எதையோ சொல்லிவைக்க..

''இப்ப யாரை ஊர்க் குருவிங்கறே.. யாரைப் பருந்துங்கிற?'' ரஞ்சித் முதன்முறையாக.. தாய் தகப்பனின் முன்னிலையில் கடுமையாக மனைவியைப் பார்த்துக் கேட்டுவிட்டான்.

'ராமா.. மனசில நினைக்கிறது.. வாக்கில வந்து தொலைக்குதே..' ராதிகா சுதாரித்தாள்.

''நான் ஒன்றைச் சொன்னா.. நீங்க வேற ஒன்றை அர்த்தப்படுத்திக்கங்க.. இதுவே உங்களுக்கு பிழைப்பாப் போச்சு...''

''நீ என்னடி சொன்ன? நான் என்னடி நினைச்சேன்..''

''என்னதான் நாம வகைவகையாய் தங்கத்தை வாங்கி பூட்டிவிட்டாலும் வைரங்கள் ஜொலிக்கிற அந்த வீட்டில் எடுபடுமா?''

ராதிகா இப்படிக் கேட்டதும்..

'அதுதானே..' என்பதைப் போல காவேரியும் ஜானகிராமனும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துவிட்டு.. சேர்ந்து மகனின் முகத்தைப் பார்த்தார்கள்.



ராதிகா என்னவோ.. 'ஆதலினால்.. இந்த நகை செய்யும் யோசனையை கைவிட்டுவிட்டு.. ஆகவேண்டிய ஜோலியைப் பாருங்கள்..' என்ற அர்த்தத்தில்தான் சொல்லி வைத்தாள்.

ஆனால்.. அதன் விளைவுதான் நேர்மாறா அமைந்து போனது. ''ஆயிரம்தான் சொல்லு ரஞ்சித்.. உன் பெண் டாட்டியின் அறிவு யாருக்கும் வராது..'' என்று காவேரி ஆரம்பித்து வைக்க.

'ஆஹா.. என் மாமியார் என்னைப் புகழ்ந்தா அது வஞ்சகப் புகழ்ச்சி அணியாகத்தானே இருக்கும்..' என்று ராதிகா திகிலடைந்து போனாள். அடுத்து காவேரி பேசிய வார்த்தைகள் அதை உறுதிப்படுத்தின.

## 125

*மழைச்சாரல் எனை நனைப்பதைப் போல்..*
*மனதில் உன் நினைவு வந்து நனைப்பதையே...*
*என்னவென்று நான் சொல்ல?*

''இந்த யோசனை நமக்குத் தோணாம போச்சே..'' காவேரி பெருமையாக மருமகளைப் பார்த்து வைக்க.. ராதிகாவின் வயிற்றில் புளி கரைந்தது.

'என்ன யோசனை?' அவள் புரியாமல் திருதிருத்தாள்.

''வைரங்கள் கொட்டிக் கிடக்கிற வீட்டில் வெறும் தங்கத்தோட நம்ம பெண்ணை அனுப்பலாமா?'' காவேரி கேட்ட கேள்வியில் ராதிகாவிற்கு மயக்கமே வந்துவிட்டது.

'ஆஹா.. நாம ஒன்று நினைத்தா.. தெய்வம்தான் வேற நினைக்கும். ஆனால்.. என் மாமியார். நான் ஒன்றைச்

சொன்னால்.. அதுக்கு வேற ஒரு அர்த்தத்தை கண்டு பிடித்து என்னை கவிழ்த்துவிட்டாளே.. இத்தனை நாளாய் இம்புட்டு அறிவை எங்கிட்டு பத்திரப்படுத்தி வைத்தி ருந்தா இந்த மகராசி?'

ராதிகாவின் அதிர்ந்த பார்வையை அலட்சியமாக எதிர்கொண்ட காவேரியின் பார்வை..

'என் வயசிற்கு உன்னைப் போல எத்தனை ஆள் களைப் பார்த்திருப்பேன். யாருகிட்ட உன் டகுல்பாச்சி வேலையைக் காட்டறே.. நான் காவேரியாக்கும். இத்தனை நாளாய் நான் ஏன் ஊமையாய் போனேன் தெரியுமா. என் மகளின் கல்யாணத்தில் என் மகன் முன்னால் நிற்கணு முன்னுதான். இப்ப அந்த வேளை கூடி வந்திருச்சு. இனி மேலும் நான் ஊமையாகவே இருப்பேன்னு நினைச்சயா?' காவேரியின் இதழ்களில் மர்மப் புன்னகை தவழ்ந்தது.

அந்தப் புன்னகையின் மர்மத்தை ராதிகா மட்டுமே அறிவாள். ஆனாலும் அறிந்தும் அறியாதவளைப் போல இருக்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு அவள் ஆளானாள்.

'ம்ஹூம்.. தங்க நகையை எடுக்க விட்டிருந்தா.. ஆயிரக்கணக்கில்தான் செலவாகும். இப்ப வைரத்தில் வந்து நிற்குது.. எத்தனை லட்சங்கள் செலவாகுமோ..'

விட்டால் ராதிகா அழுதிருப்பாள். ஆனால், கணவ னின் கோபத்திற்கு ஆளாக மனமில்லாமல் கண்ணீரைக் கட்டுப்படுத்திக் கொண்டு அமைதியாக இருப்பதைப் போல நடித்துக் கொண்டிருந்தாள்.

''நீங்க சொல்வதும் சரிதான்.. ஆனால் வைர நகை வாங்க பணம் நிறைய வேணுமேம்மா..'' ரஞ்சித் கவலை யுடன் கேட்டதும் ராதிகாவிற்கு போன உயிர் திரும்பி வந்தது.



அவள் இயல்பாக யோசனை சொல்வதைப் போல முகத்தை வைத்துக் கொண்டு பேச்சில் கலந்துகொண் டாள்.

''ஆமாமில்ல.. நான் அதைப் பற்றி யோசிக்கலையே.. நம்ம வீட்டுப் பெண்ணுக்கு வைரம் போட்டு விடணும்கிற ஆசையில நம்ம வசதியைப் பத்தி மறந்துவிட்டேன்..'' என்று ஆரம்பித்தவள்..

''ஏன் மாலினி.. உனக்கு மாப்பிள்ளையின் அம்மா வைர அட்டிகை போட்டாங்களே.. அந்த டிஸைன் உனக்கு பிடிச்சிருக்கா?'' என்று அப்பாவி போல கேட்டு.. கணவ னுக்கு அந்த அட்டிகையைப் பற்றி நினைவுபடுத்தினாள்.

''ஏற்கெனவே மாலினிக்கு அவங்க வீட்டில் இருந்து வைர அட்டிகை போட்டுட்டாங்களேம்மா.. புதுசா நாம செய்ய வேண்டிய அவசியமில்லையே..'' என்று யதார்த்த மாக ரஞ்சித்தும் கூறிவிட்டான்.

காவேரிக்குப் பற்றிக் கொண்டு வந்தது. அவள் அடுத்த அஸ்திரத்தை பிரயோகிக்க முயலும் முன் ராதிகா முந்திக் கொண்டாள்.

''ஏன் அத்தை.. நாம மாலினிக்கு அறுபது பவுனில் நகை செய்து வைத்திருக்கிறோம். சசிரேகாவுக்கு ஆறு பவுன் கூட அவள் பிறந்த வீட்டில் போடவில்லையாமே.. அது நிஜமா?'' என்று அறியாப் பெண் போல காவேரியைப் பார்த்துக் கேட்டு வைத்தாள் அவள்.

மருமகளின் சாதுர்யத்தை கண்கூடாகக் கண்டிருந்த காவேரி.. இந்த தாக்குதலுக்கு எதிர்தாக்குதல் கொடுக்க முடியாமல் திணறிப் போனாள்.

நல்லவேளையாக ஜானகிராமன் அவளுடைய உதவிக்கு வந்தார்.

''எங்க அண்ணன் குடும்பத்தில் அவ்வளவு செய்ததே அதிகம்மா.. சசிக்கு கூடப் பிறந்தவங்கன்னு யாருமில்லை. என் அண்ணனும் விவசாயி. நிலமும் அதிகமாக இல்லாதவர். ஒரு ஏக்கர் நிலமும் ஒரு ஓட்டு வீடும்தான் அவருக்கு சொந்தம். நான் அப்படியில்லையேம்மா.. கைநிறைய சம்பாதித்து சென்னையில் சொந்தமா வீடு கட்டியிருக்கேன். என் மகனையும் மகளையும் படிக்க வைத்திருக்கிறேன். என் மகனுக்கு நல்ல வேலை வாங்கிக் கொடுத்திருக்கிறேன். என் அண்ணன் சக்திக்கு அவர் சீர்செய்தார். என் சக்திக்கு நான் சீர்செய்ய வேண்டாமா?'' என்று மருமகளுக்கு பதில் சொன்னார்.

காவேரி கணவனை மனதிற்குள் மெச்சிக் கொண்டு மருமகளை வெற்றிப் பார்வை பார்க்க.. தோல்வியை அவ்வளவு சீக்கிரத்தில் ஒப்புக்கொள்வேனா என்று ராதிகா அடுத்த கணையைத் தொடுத்தாள்..

''அறுபது பவுனே நம் சக்திக்கு அதிகம்தானே மாமா..''

''என்னம்மா இப்படிச் சொல்கிற.. இப்ப சென்னையில இடம் வாங்கி வீடு கட்டணுமுன்னு கனவில்கூட நினைக்க முடியாது. ஏதோ என் காலத்தில்.. என் பிள்ளைகள் சின்னஞ்சிறுசுகளாய் இருக்கிறபோதே இடத்தை வாங்கிப் போட்டு வீட்டைக் கட்டிட்டேன். இந்த வீட்டோட மதிப்பு இப்ப எத்தனை லட்சம்னு உனக்குத் தெரியுமா? எனக்குப் பின்னால் இந்த வீட்டை மாலினிக்கா கொடுக்கப் போகிறேன்?''

அந்தக் கேள்வியில் ராதிகா அரண்டுவிட்டாள். வைரத்தை நிறுத்தப் போய்.. வீடு கைநழுவி விட்டால் என்ன செய்வது?



''அது எப்படி மாமா கொடுக்க முடியும்? மகனுக்குத் தானே கடைசி வரைக்கும் பெத்தவங்க கூட இருக்கும் கடமை இருக்கு? அதனால் நீங்க வீட்டை உங்க மகனுக்குத்தான் கொடுக்க முடியும்..''

'அப்படி வா வழிக்கு. உனக்கு கடமையைப் பத்திக் கூட நினைவிருக்கா?'

காவேரி எரிச்சல்பட்டாலும்.. மருமகளின் வாய்மொழியிலிருந்து அவள் வீட்டைக் கைப்பற்றுவதற்கென்றாவது தனிக்குடித்தனம் போகாமல் கூடவே இருப்பாள் என்று மனதிற்குள் நிம்மதியடைந்தாள்.

''அதனால்தான்ம்மா சொல்கிறேன்.. வீடு மகனுக்கு.. சீர்வரிசை மகளுக்கு..'' ஜானகிராமன் பேச்சை முடித்துக் கொண்டார்.

வைர அட்டிகை இருப்பதால்.. வைரத்தோடும் வைர வளையல்களும் வாங்கலாம் என்பது முடிவாகியது.

மாலினி தன் கையிலிருந்த பேங்க் பாஸ் புத்தகத்தை ஜானகிராமனிடம் கொடுத்தாள்.

''என்னம்மா இது?''

''என் சம்பளப் பணம் அப்பா.. எனக்குத்தான் அங்கே செலவே இல்லையே.. சேர்த்து வைத்திருந்தேன்..''

''உன் பணத்தை வாங்கி.. உனக்கே சீர்செய்தால்.. அது தாய்வீட்டுச் சீதனமாக ஆகாதும்மா. இதை பத்திரமாக நீயே வைத்துக்கோ.. சீர்செய்ய நானும் உன் அண்ணனும் இருக்கிறோம்..''

ஜானகிராமன் பாஸ் புத்தகத்தை மகளிடமே கொடுத்து விட்டார்.

126

உன் பாதம் பின்பற்றி நான் நடக்கும்போது..
சுடுமணல்கூட பனித்துளியாய் மாறுவதை..
என்னவென்று நான் சொல்ல?

அது ஒரு அருமையான தருணம்.. தன் வீட்டுப் பெண்ணிற்கு பார்த்துப் பார்த்துச் சீர்செய்யும் தாய்வீடு அமைவது பூர்வஜென்ம புண்ணியம். ஒற்றைக் காசாக இருந்தாலும்.. அது பிறந்தவீட்டிலிருந்து அனுப்பப்படும் சீர்பொருளாக இருந்தால்.. ஒரு பெண் மனது எவ்வளவு சந்தோஷம் கொள்ளும் என்பதை வார்த்தைகளில் வடித்து விட முடியாது.

அந்த ஒற்றைக்காசில்.. பிறந்தவீட்டில் அவளுக்கிருக்கும் உரிமை தெரியும். அந்த ஒற்றைக்காசில்.. பிறந்த வீட்டில் அவளுக்கிருக்கும் சொந்தம் தெரியும். அந்த ஒற்றைக் காசில்.. பிறந்த வீட்டில் அவளை மறக்காத நினைவு தெரியும். அந்த ஒற்றைக் காசில் பிறந்தவீட்டில் அவள்மேல் இருக்கும் அக்கறை தெரியும்.

அப்படிப்பட்ட பிறந்தவீட்டைப் பெற்ற பெண் பாக்கியசாலி.

மதுரை மீனாட்சிக்கும் சொக்கநாதருக்கும் நடந்த திருமணத்திற்கு மீனாட்சியின் அண்ணனான அழகர் தாய்வீட்டுச் சீர்வரிசையைக் கொண்டு சென்றதாக புராணம் கூறுகிறது..

'அழகர் ஆற்றில் இறங்குகிறார்...'

வைகைக் கரையில் இருக்கும் மக்களிடம் கேட்டுப் பாருங்கள்.. இந்த நாள் எப்பேர்ப்பட்ட நாள் என்று...



அழகரான பெருமாள் குதிரையில் ஏறி ஆளை மயக்கும் அழகோடு பவனி வரும் காட்சியைக் காணக் கண்கோடி வேண்டும்.

சித்திரைத் திருவிழாவின் ஓர் அங்கமான இந்த நாளில் தவறாமல் மழை பொழிகிறதே.. அது எப்படி?

அழகர் ஆற்றில் இறங்கினால்.. அன்று மழை பொழியும். இது மதுரை மாநகர மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கை. அந்த நம்பிக்கை இது நாள்வரை பொய்த்ததில்லை. மழை பொழியாமல் மேகமும் பொய்த்ததில்லை.

அழகர் எதற்காக ஆற்றில் இறங்கினார்?

அவருடைய தங்கையான மீனாட்சியின் திருக்கல்யாணத்திற்காக சீர் எடுத்துக் கொண்டு சீர்செய்ய ஆற்றைக் கடந்து அக்கரைக்கு செல்வதற்காக ஆற்றில் இறங்கினார்.

தெய்வங்களுக்கே தாய்வீட்டுச் சீதனம் தேவைப் படும்போது.. சாதாரண மனிதகுலப் பெண்களுக்கு அது தேவைப்படாதா?

தாய்வீட்டுச் சீதனம் என்பது வீட்டில் பிறந்த பெண்களை அந்தப் பிறந்த வீடு எவ்வாறு நினைவுகூர்ந்து கௌரவிக்கிறது என்பதற்கான ஓர் அடையாளம்.

மாலினிக்கும் அதைக் குறைவில்லாமல் செய்ய வேண்டும் என்பதில் ஜானகிராமன் உறுதியாக இருந்தார்.

மாலினியின் புகுந்த வீடு கோடீஸ்வரக் குடும்பமாக இருக்கலாம். அவர்கள் சீர்வரிசையை எதிர்பார்க்காத பரந்த மனம் கொண்டவர்களாக இருக்கலாம்.

அதற்காக ஜானகிராமன் செய்யவேண்டிய சீர் வரிசையை செய்யாமல் விடமாட்டார். அதில் ஒரு சிறு குறைவு வருவதைக்கூடப் பொறுத்துக் கொள்ள மாட்டார்..

அவர் பார்த்துப் பார்த்து சீர்வரிசைகளை வாங்கினார். எல்லாவற்றிலும் மனைவியின் கருத்தைக் கேட்டுக் கொண்டார். அவருடைய சேமிப்பை எடுத்து தாராளமாக செலவு செய்தார்.

''அப்பா.. இது அதிகம்..'' மாலினி சொல்லிப் பார்த்தாள்.

''நீ இதில் தலையிடாதேம்மா..'' என்று கண்டிப்பாக அவர் கூறிவிட்டார்.

மாலினியின் வீடு திருமணத்திற்கு தயாராகிவிட்டது. காவேரி மகளை ஜவுளிக்கடைக்கு அழைத்துச் சென்று விருப்பப்பட்ட பட்டுச் சேலைகளை எடுத்துக் கொள்ளச் சொன்னாள்.

''அப்பா ஏற்கெனவே வைர வளையல்கள்.. கம்மல்ன்னு இருக்கிறார். இதுவும் எதுக்கும்மா?'' மாலினி தயங்கினாள்.

''இது என் சேமிப்பும்மா.. இது நாள் வரை உன் கல்யாணத்துக்காக நான் போஸ்டாபீஸில் ஆர்.டி. கட்டி சேர்த்து வைத்த பணம்..''

''அம்மா...''

''பத்து ரூபாய் உன் அப்பா கொடுத்தால்.. அதில் இரண்டு ரூபாயாவது மீதம் பிடிக்கலைன்னா நான் என்ன பொம்பளை? உண்மையான சம்பாத்தியம் சேமிப்புத்தான் மாலினி.. நான் சேர்த்து வைத்தது உனக்காகத்தான்.. உனக்குப் பிடிக்கற சேலைகளை எடுத்துக்க. விலையைப் பற்றிக் கவலைப்படாதே..''

''என்கிட்ட ஏற்கெனவே பட்டுச் சேலைகள் இருக்கும்மா..''

''இருக்குதான்.. ஆனால், கல்யாணமாகிப் போகும் பெண்.. சீர்வரிசைகளோடு எத்தனை புதுப் பட்டுப் புடவைகள் கொண்டு வருகிறாள்னு கணக்கு உண்டு. உனக்கு ஊர் வழக்கம் தெரியாது. எடுத்துக்க..''

காவேரி பரிவுடன் மகளைப் பார்த்தாள். மாலினிக்கு காயத்ரியின் திருமணத்தின்போது.. அவள் எடுத்துக் கொண்ட பட்டுப் புடவைகளின் நினைவு வந்தது.

இன்று.. தனது முறை என்ற நினைவில்.. மனம் நிறைய பிடித்த சேலைகளை எடுத்துக் கொண்டாள் மாலினி.

திருமண நாள் நெருக்கத்தில் வந்து.. வீட்டில் உறவினர்கள் வந்து இறங்கினார்கள். பிரபாகரன் மணிக்கொரு தரம் போனில் அவளை அழைத்தான். சுற்றிலும் உறவினர் இருக்கும்போது.. செல்போனில் அவன் அழைக்க.. தனிமை நாடிச் செல்வதில் சங்கடப்பட்டுப் போனாள் மாலினி.

''ஏண்டி போனை அட்டெண்ட் பண்ண இவ்வளவு நேரம்?''

''உங்க கிட்ட பாட்டுப் பாடிக் காட்ட ஆசை.. அதுதான் நேரமாகிருச்சு..''

''என்னடி.. எதுக்கும் எதுக்குமோ சம்பந்தமில்லாமல் முடிச்சுப் போடுகிற? என்ன ஆச்சு உனக்கு?''

*''அழைக்காதே.. நினைக்காதே..*
*அவைதனிலே.. எனை ஏ ராசா..*
*ஆருயிரே.. மறவேனே..*
*இதம் தரும் ஜோதியை மறந்திடுவேனோ..*
*எனை மனம் நாடட.. சமயம் இதுதானா..?*
*காதலினாலே.. கானத்தினாலே..*
*சோதனையாகவே நீ அழைக்காதே..''*

மாலினி இஷ்டத்திற்கு வரிகளைப் போட்டு பாடி வைக்க.. பிரபாகரன் வாய்விட்டு கடகடவென்று பலமாக சிரித்தான்.

127

*பூந்தென்றல் காற்று உடலில் பட்டும்..*
*பூந்தளிர் மேனி வியர்ப்பதையே...*
*என்னவென்று நான் சொல்ல?*

பெண்ணழைக்க கார் வந்துவிட்டது. காவேரி கண் கலங்கினாள். இதற்கு முன்னாலும் அவளை மாதக் கணக்கில் பிரிந்து.. மாலினி மார்த்தாண்டத்திற்கு சென்றிருக்கிறாள். அப்போதெல்லாம் அவள் வேலைக்குப் போகிறாள்.. திரும்பவும் வீட்டுக்கு வந்துவிடுவாள் என்ற உணர்வு இருந்ததால் காவேரி கலங்கவில்லை.

இப்போது அப்படியில்லையே.. இதுநாள் வரை அவளுக்கு செல்ல மகளாக இருந்தவள்.. இப்போது வேறொரு வீட்டிற்கு மருமகளாகப் போகிறாளே.

பூஜையறையில் விளக்கேற்றி வைத்துவிட்டு மகளுக்கு நெற்றியில் குங்கும பிரசாதத்தை இட்டுவிட்டு..

''சாமி கும்பிட்டுக்கம்மா..'' என்றாள் காவேரி.

மாலினி.. தெய்வங்களை வணங்கிவிட்டு பெற்றவர்களைச் சேர்ந்து நிற்க வைத்து வணங்கி எழுந்தாள்.

''அண்ணனும் அண்ணியும் எங்கேம்மா?''

ரஞ்சித்.. ராதிகாவை பார்வையால் அழைக்க.. அவள் வந்து கணவனுடன் சேர்ந்து நின்றாள். மாலினி.. அவர்களின் பாதம் பணிந்தபோது ரஞ்சித்.. அழுதுவிட்டான்.



''நல்லாயிரும்மா..'' தங்கையின் தலை மீது கை வைத்து அவன் ஆசீர்வாதம் செய்தபோது, மாலினியும் அவனுடன் சேர்ந்து அழுதாள்.

''என்ன இது சின்ன பிள்ளைகளாட்டம்.. அவள் பெரிய இடத்தில் வாழப் போகிறாள்.. இந்த நேரத்தில் போய் அழுதுகிட்டு..''

ராதிகா, அண்ணனையும் தங்கையையும் அதட்டினாலும் அவளையும் மீறி அவள் கண்களில் நீர் வழிந்தது.

''அண்ணி...''

மாலினி மனம் தாளாமல் ராதிகாவின் தோள் சாய.. அவள் கண்ணீருடன் இளையவளுக்கு புத்தி சொன்னாள்.

''இத்தனை நாளும் நீ எங்க வீட்டுப் பொண்ணு.. விளையாட்டாய்.. துடுக்காய்.. இருந்திருக்கலாம். இப்ப இன்னொருத்தர் வீட்டுக்கு மருமகளாகப் போகிற. விளையாட்டாய் இருக்கக்கூடாது மாலினி..''

''சரிங்க அண்ணி..''

''நீ வாழப்போகும் வீடு.. பணத்தில் மட்டுமில்லாம.. ஆள்கள் நிறைஞ்சும் இருக்கிற வீடு. ஆளுக்கொரு குணமிருக்கும். அவங்கவங்க மனசறிந்து நடந்துக்கம்மா..''

''சரிங்க அண்ணி..''

''அந்த வீட்டுக் கல்யாணத்துக்கு வந்திருந்தப்ப பார்த்தேன். உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறவர்தான் நிற்காம.. பம்பரமா சுற்றினார். நீ அவரைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு குடும்பம் நடத்தப் போகிற. அவரோட பொறுப்பும் நீ கேட்காமலே உன் தலையில் ஏறும். அதைச் சமாளிக்க கத்துக்கணும்..''

''சரிங்க அண்ணி..''

காவேரிக்கு தன் கண்களையும் காதுகளையும் நம்ப முடியவில்லை. அவளுடைய மருமகளுக்குள் இவ்வளவு ஈரமான மனமும் இருக்கிறதா?

'கல்லுக்குள் ஈரம்னு சும்மாவா சொன்னாங்க..' அவள் ஆச்சரியப்பட்டுப் போனாள்.

ஜானகிராமனுக்கோ.. தன் மருமகளின் அறிவை நினைத்து மனம் கொள்ளாத பெருமை.

''சும்மா சொல்லக்கூடாது ரஞ்சித்.. நம்ம ராதிகா நாலையும் யோசிச்சு எப்படிப் புத்தி சொல்கிறாள்னு பாரு. நாமளும்தான் கல்யாண வீட்டுக்குப் போனோம். இதெல் லாம் நம்ம கண்ணில் பட்டதா.. இதுதான் நமக்கும் ராதிகா வுக்கும் உள்ள வித்தியாசம்.. ஷி இஸ் ஸோ கிரேட்..''

இதைக் கேட்டதும் ரஞ்சித்திற்கு தன் மனைவியின் மீதான காதல் அதிகமானது. எப்போதும் மையலுடன் மனைவியைப் பார்த்து வைப்பவன்.. இப்போது அதீதமான மையலோடு மனைவியைப் பார்த்தான்.

காத்திருந்த இன்னோவா காரில்.. மாலினியுடன் ரஞ்சித்தும் ராதிகாவும் ஏறிக்கொள்ள.. காவேரியும் ஜானகி ராமனும் உறவினர்களை அழைத்து வருவதற்காக பின்தங்கி விட்டனர்.

ஜானகிராமன் உறவுக்காரர்களுக்கென்று தனியாக ஏ.ஸி. பஸ்ஸை வாடகைக்கு எடுத்திருந்தார். அதில் சொந்த பந்தங்களுடன் அவர்கள் ஏறிக்கொள்ள.. இன்னோவா காரை ஏ.ஸி. பஸ் பின்தொடர்ந்தது.

மாலினி.. மணப்பெண்ணாக மார்த்தாண்டத்தை நோக்கிப் பயணிக்க ஆரம்பித்தாள்.



அவள் மனம்.. முதன்முதலில் அவள் மட்டும் தனியாகக் கிளம்பி மார்த்தாண்டத்திற்கு வந்த நாளை நினைத்துக் கொண்டது.

அன்றும் இப்படித்தான்.. கடலோரக் காற்று முகத்தில் படிந்தது. கண்மூடி அதை அன்று ரசித்ததைப் போலவே இன்றும் மாலினி ரசித்தாள்.

என்ன ஒன்று.. அன்று.. அறியாத ஓர் ஊருக்குப் போகிற ஆர்வம் இருந்தது. இன்றோ.. அவளோடு கலந்து விட்டவனுடன் வாழ்க்கையில் ஒன்றுபடப்போகும் நிறைவு இருக்கிறது.

''கன்யாகுமரிக் கடல் அலையே தனிவிதமாகத் தான் இருக்கும். உன் வீட்டு ஆள்களும் அந்த ரகம்தான். பார்த்து இருந்துக்க மாலினி..'' ராதிகா கடலைப் பார்த்தபடி மீண்டும் அறிவுறுத்தினாள்.

''ஆகட்டும் அண்ணி..''

''இந்தப் பக்கமெல்லாம் மலையாளம் பாதி.. தமிழ் பாதின்னு இருக்கு..''

''ஆனா.. அவர் வீட்டில் எல்லோருமே சுத்த தமிழில் தான் பேசுவாங்க அண்ணி..''

''பாருங்களேன்.. உங்க தங்கை இப்பவே அவ மாமியார் வீட்டை விட்டுக் கொடுக்காம எப்படிப் பேசுகிறா?''

''உன்னைப் போலவே இருக்கிறான்னு சொல்லு..''

ரஞ்சித்தின் அந்த வார்த்தைகள் பூஞ்சாரலாய் ராதிகா வின் மேல் படிய.. அவள் சிலிர்த்துப் போனாள்.

மார்த்தாண்டத்திற்கு கார் நுழைந்தது. பெண்வீட்டார் தங்க தனி வீடு எடுத்துக் கொடுத்திருந்தார்கள்.

''கல்யாணம் தக்கலை மில்லில்தான் நடக்கப் போகுது. நீங்க தங்க இந்த வீடு ஏற்பாடு பண்ணியிருக்கு. ஏதாச்சும் வசதி குறைஞ்சா சொல்லுங்க.. சரிபண்ணிட லாம்..''

நம்மதாவே பெண்வீட்டாரை நேரில் வந்து வரவேற்று வீட்டைச் சுற்றிக் காட்டினாள். தினகரன்.. ரஞ்சித்துடன் வேறு ஏதும் தேவையிருக்கிறதா என்று பார்த்துப் பார்த்து விசாரித்தான்.

ஜானகிராமனும் ரஞ்சித்தும் மனம் குளிர்ந்து விட் டார்கள்.

128

*நீ சித்திரை நிலவாய் கனவில் வந்து..*
*என் நித்திரையை கெடுக்கும் ரகசியத்தை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

சசிரேகா பெண்வீட்டினர் இருந்த வீட்டிற்கே வந்து விட்டாள்.

''நீ அங்கே இருக்க வேணாமா?'' காவேரி கவலைப்பட..

''தேவையில்லை சித்தி.. அத்தையும் காயத்ரியும் அங்கே வருகிற விருந்தாளிகளை கவனித்துக்கிறோம்னு சொல்லிட்டாங்க. நான் பெண்வீட்டை எந்தக் குறைவு மில்லாம கவனிச்சுக்கணுமாம்.. ஏதாச்சும் குறையிருந்தா சொல்லிவிடுங்க சித்தி.. நான் மாப்பிள்ளை வீட்டுக்காரி..'' என்று சிரித்தாள் சசிரேகா.

காவேரிக்கு மனநிம்மதியாக இருந்தது. அதைக் கவனித்த அவளுடைய உறவுக்கார பெண்மணி ஒருத்தி..

''ம்ஹூம்.. நாங்கல்லாம்.. அறியாத இடத்தில பெண் ணைக் கொடுத்திட்டு தவிச்சுக்கிட்டு இருக்கோம். நீ



கொடுத்து வைச்ச மகராசி. ஏற்கெனவே உன் வீட்டுப் பெண்ணை இங்கே கொடுத்திருக்க. இப்ப உன் பொண ணையும் கொடுக்கப் போகிற. இதுக இரண்டும் ஒருத்திக்கு ஒருத்தி ஆதரவாக இருந்துக்குவாங்க. என்னைச் சொல்லு..'', என்று வாய்விட்டுச் சொல்லிவிட்டாள்.

''கடன்காரி கண்ணை வைத்துவிட்டா..'' காவேரி சன்னக்குரலில் சசிரேகாவிடம் முணுமுணுத்தாள்.

சசிரேகா, மாலினியிடம் போய் பேசிக் கொண்டிருந்த போது.. காவேரி உள்ளே வந்தாள்.

''இரண்டு பேரும் சேர்ந்து நில்லுங்க..'' என்றாள்.

மாலினியும் சசிரேகாவும் எழுந்து நின்றவுடன்.. அவர் களுக்கு கற்பூரத்தை சுற்றிவிட்டு.. அதைக் கொண்டு போய் வாசலில் எரியவிட்டு வந்தாள்.

''என்னடி பண்ணுகிறாங்க..''

''தெரியலை? சுற்றிப் போடறாங்க..''

''எதுக்காம்?''

''என்னைக் கேட்டா.. எனக்கென்ன தெரியும்.. அம்மாவைக் கேளு..'' சசிரேகா, காவேரியைப் பார்க்க.. அவள்..

''ஊர் கண்ணெல்லாம் உங்க ரெண்டு பேர் மேல தான்..'' என்று காரணம் சொன்னாள்.

காவேரி அறையை விட்டு வெளியே செல்லும் வரை பொதுவாகப் பேசிக் கொண்டிருந்த சசிரேகா..

''தெரியுமா சேதி?'' என்றாள்.

''சொன்னால்தானே தெரியும்?''

''ஆளவந்தார் தாத்தாவின் குடும்பம் வழக்கம்போல ஒரு வாரத்துக்கு முன்னாலேயே வந்துட்டாங்க..''

''அதுக்கென்ன இப்ப?''

''அவரோட பெரிய மகனும் கடைசி மகனும்தான்

குடும்பத்தோட வந்திருக்கிறாங்க. ஸ்வேதாவின் அப்பா குடும்பம் மிஸ்ஸிங்..''

''என்னவாம்?''

''குடும்பத்துக்கே தலைவலியாம்..''

சசிரேகா கண்சிமிட்டிய விதத்தில் மாலினிக்கு சிரிப்பு வந்துவிட்டது.

''நல்லவேளை.. இங்கே கல்யாண வீட்டில் இருக்கிற வங்க தலைவலியில் இருந்து தப்பிச்சிட்டாங்க..''

சசிரேகா மேலும் கூற.. மாலினியின் சிரிப்பு அதிக மாகியது.

பிரபாகரனின் தக்கலை மில் விழாக் கோலம் பூண்டி ருந்தது. அவர்களின் அன்பிற்குரிய முதலாளிக்கு அன்று திருமணம்.

மண்டபத்தில் நடத்தினால் இடம் போதாது என்று.. தக்கலை மில் வளாகத்தையே மண்டபமாக மாற்றியிருந் தார்கள். கடுகு போடக்கூட இடமில்லாமல் கூட்டம் நிரம்பி வழிந்தது.

திருமணத்துக்கு மாலினி வேலைபார்த்த மில்லில் இருந்து அனைவரும் வந்திருந்தார்கள்.

''வாழ்த்துகள் மாலினி..''

ரமேஷ் ஆர்வமாக பிரபாகரனைப் பார்த்தபடி மாலினி யிடம் சொல்ல..

''உங்கள் காதலியின் வேலையைப் பார்த்தீங்களா?'' என்று பிரபாகரனின் காதுக்கு மட்டும் கேட்கும்படி முணு முணுத்தாள் மாலினி.

பிரபாகரன் சிரித்துக் கொண்டான்.

பவித்ரா திருமண வேலைகளை இழுத்துப் போட்டு செய்து கொண்டிருந்தாள். தினகரன் அவளிடம் பேச முயலும்போதெல்லாம் அதற்கு இடம் கொடுக்காமல் விலகிக் கொண்டிருந்தாள்.



மாலினியின் அருகே வந்து பல முறை அவள் பேச முயன்றாள். மாலினி சலனமில்லாமல் முகம் திருப்பி.. அவள் பார்வையைத் தவிர்த்தாள். பவித்ராவின் முகம் கூம்பிவிட்டது.

பிரபாகரன்.. அதிருப்தியுடன் மாலினியைப் பார்த் தான். அவன் பார்வையில் குற்றச்சாட்டு தெரிந்தது.

''இது சரியில்லை மாலினி..'' மற்றவர்கள் காதில் விழாத வண்ணம் முணுமுணுத்தான்.

''இந்த ஒன்றிலாவது என் குணப்படி இருக்க விடுங்க அத்தான்..'' மாலினி கடினமான முகத்துடன் கூறிவிட்டாள்.

''மன்னிக்கிறது பெருந்தன்மை மாலினி..''

''எனக்கு மன்னிக்கத் தெரியாது..''

''ஏண்டி இப்படி இருக்கிற?''

''நான் இப்படித்தான் இருப்பேன். உண்மையான பிரியத்தையும் பாசத்தையும் நட்பையும் கொட்டுவேன். அதுக்கு அவங்க உண்மையா இல்லைன்னா வேண டாம்னு விலக்கி வச்சிருவேன்.. இதுவரைக்கும் அதுக்கு விதிவிலக்கா யாரும் இருந்ததில்ல. உங்கள் ஒருவரைத் தவிர..''

பிரபாகரன் வாயை மூடிக்கொண்டான். சென்னைக்கு பிரிந்து சென்றவளை.. ஒருவழியாக மார்த்தாண்டத்திற்கு வர வைத்து மணமேடை வரை கொண்டு வந்துவிட்டான்.

இப்போது பவித்ராவுக்காக பரிந்து பேசப் போக.. அவள் மாலையைக் கழட்டிவிட்டு எழுந்து போய்விட் டால் என்ன செய்வது என்ற எண்ணம் அவனுக்கு.

''ம்ஹூம்.. மார்த்தாண்டத்துக்கு வேலை செய்யப் போகிறேன்னு உன் நாத்தனார் சொல்லிட்டு வந்தாள். இப்ப மகாராணியாய் இல்ல வாழப் போகிறாள்?''

ராதிகாவின் அம்மாவிட்ட பெருமூச்சில் அந்த ஏரியா முழுவதும் அலை காற்றாகிப் போனது.

''கெட்டிமேளம்.. கெட்டிமேளம்..''

திருமண வீடுகளின் வழக்கமாக.. உறவுக்காரர் ஒருவர் உரத்த குரலில் கூற.. கெட்டி மேளம் முழங்கியது.

பிரபாகரன், மாலினிக்கு தாலிகட்டி ஊரறிய தன் மனைவியென்று பிரகடனம் செய்தான்..

அவனது கரம் பற்றி அக்கினியை வலம் வந்தபோது மாலினியின் மனம் பொங்கித் ததும்பியது.

இன்றிலிருந்து அவள் பிரபாகரனின் மனைவி.. அவனது தாய்க்கு மருமகள். தம்பிகளுக்கும் தங்கைக்கும் அண்ணி. நாளை வரப் போகும் அவனது பிள்ளைகளுக்கு தாய்.

நினைத்தாலே இனிக்கும் என்பது இதுதானா?

129

*வெண்ணிலா நேரத்தில் நீ வேனுகானம் சொன்னாய்...*
*அந்நொடியில் என் உயிர் கரைந்து உன்னுடனே கலந்ததை..*
*என்னவென்று நான் சொல்ல?*

அது நாள் வரை.. அவள் அடியெடுத்து வைக்காத பிரபாகரனின் அறைக்குள் அடியெடுத்து வைத்தாள் மாலினி.

உடலில் உள்ள ஒவ்வொரு அணுவிலும் பரவசம் உதிக்க.. அவள் மனதில் எதிர்பார்ப்புடன் கூடிய ஒரு இன்ப லாகிரி உருவாகி இருந்தது.

அவன்.. அவள் அறிந்தவன்தான். காதோரமாக காதல் சொன்னவன்தான். கதைகள் பல பேசியவன்தான். யாரு மறியாமல் அருவிக்கரையிலும் அணைக்கட்டிலும் அவளைக் கட்டித் தழுவியவன்தான்.



ஆவேசம் வந்த அந்த 'ஓர் இரவில்'.. அவளோடு கூடிக் கலந்தவன்தான்.

இருந்தும் ஏனோ.. அவளுக்குள் ஒரு பதற்றம் தோன்றியது. அவன் புதியவனாக அவள் கண்ணுக்குத் தெரிந்தான்.

மலர்ச் சரங்கள் நெருக்கமாக கட்டித் தொங்கவிடப் பட்டிருந்த கட்டிலின் அருகே கைகட்டி நின்றிருந்தவன்.. அவளது நடுக்கத்தைப் பார்த்து புருவம் உயர்த்தினான்.

''என்னடி?'' என்று வியப்பாக வினவினான்.

''தெரியலை..'' அவளுக்கு அந்த அறையின் ஏ.ஸி. குளிரையும் தாண்டி வியர்த்தது.

''இப்படி உட்காரு சொல்கிறேன்..''

பிரபாகரன் அவளது கைபிடித்து கட்டிலில் அமர வைத்துவிட்டு தானும் அருகே அமர்ந்தான். அவளது கைவிரல்களை நீவிவிட்டான்.

''எதுக்கு பயம்?'' இதமாக வினவினான்.

''அதுதான் தெரியலைன்னு சொன்னேனே..''

''அழகிய அசுரான்னு கூப்பிட்டு.. அத்துமீற ஆசையில்லையான்னு கேட்டயேடி. அன்றைக்கு ஏதோ ஒரு ஆவேசத்தில் அத்துமீறிவிட்டேன்.. அதுபோதுமா?''

பிரபாகரன் கண்சிமிட்ட.. மாலினி முகம் சிவந்தாள்.

''போதுமே..''

''போதாதுன்னுதானே சொல்லிக்கிட்டு இருக்கேன்..''

''ஹப்பா.. இதைப் பேச விட்டால்.. விடியும் வரை பேசுவீங்களே..''

''அந்தக் கதையெல்லாம் இங்கே வேணாம்.. விடியும் வரை பேசுவேன்.. வாய் பேச்சில்லை.. வேறு பேச்சு..''

பிரபாகரன் அவளை ஆவேசத்துடன் ஆக்கிரமித்தான்.. மாலினி மூச்சுத் திணறினாள். இன்ப வலியை உணர்ந்து கிளர்ந்தாள்.

''ஹப்பா.. அசுரவேகம்தான்..''

''நீதானேடி அசுரான்னு கூப்பிட்டு வைத்தே.. அப்ப அனுபவி..''

மாலினி சம்சாரக் கடலில் மூழ்கி முத்தெடுத்தாள். விடியும் வரை கதைகள் சொல்லி விடிந்தவுடன் பிரிய மன மில்லாமல் பிரிந்தான் பிரபாகரன்.

ஈரத்தலையை விரிய விட்டு.. ஜன்னல் வழியாக தோட்டத்தைப் பார்த்தாள் மாலினி. அதிகாலைப் பனியில் மலர்கள் குளித்திருந்தன.. முதல் நாளிரவின் நினைவில் மனதில் உல்லாசம் நிரம்ப.. மாலினி மெதுவான குரலில் பாடினாள்..

*''மலர்கள் நனைந்தன பனியாலே - என்*
*மனமும் குளிர்ந்தது உறவாலே..*
*பொழுதும் விடிந்தது கதிராலே - சுகம்*
*பொங்கி எழுந்தது உறவாலே..''*

அவள் மனதில் அன்று இல்லாத நிறைவு இன்று இருந்தது. அன்று அவனுக்கு தன்னை நிரூபிக்க தன்னைத் தந்தாள். அதில் எல்லையில்லாத மனப் போராட்டம் இருந்தது.

இன்று அது எதுவும் இல்லை. மேகங்கள் அற்ற நிர்மலமான வானம் போல் எந்தவித மனப்போராட்டமும் இல்லாத இனிமையான இரவை அவனுடன் சேர்ந்து சுகித்த இன்ப நினைவுகள் மட்டுமே அவள் மனதில் இருந்தன.

*''சேர்ந்து மகிழ்ந்து போராடி - தலை*
*சீவி முடித்தேன் நீராடி..*
*கன்னத்தைப் பார்த்தேன் முன்னாடி - பட்ட*
*காயத்தைச் சொன்னது கண்ணாடி..''*

ஜன்னலில் சாய்ந்து நின்று.. அவள் பாடிக் கொண டிருந்தபோது.. அவளுக்குப் பின்னாலிருந்து பிரபாகரனின் கரம் அவளை இறுக்கியது.



''கன்னத்தில் எங்கேடி காயம் இருக்கு?''

அவளது காதோரமாக கேட்டவன்.. அந்தக் கன்னத் தில் இதழ் பதித்தான். மாலினி.. கண்மூடிக் கிறங்கி அவன் தோளில் சாய்ந்தாள்.

**வெ**னிஸ் நகரின் குளிர் மிகுந்த சீதோஷ்ண நிலை.. ஏரியில் மோட்டார் படகில் மிதந்துகொண்டே.. மேல் தளத்தில் இருந்த ஹோட்டலில் டேபிளின் எதிரேயிருந்த சேர்களில் அமர்ந்து.. அந்தக் குளிருக்கு இதமாக காபியை அருந்தியபோது..

'இந்த உலகம்தான் எவ்வளவு அழகாக இருக்கிறது..' என்று மாலினிக்குத் தோன்றியது.

கனமான ஸ்வெட்டர் போன்ற நீண்ட கோட்டை இருவரும் அணிந்திருந்தார்கள்.

பிங்க் கலர் சுடிதாரில்.. முடியை விரிய விட்டு.. கண்களுக்கு குளிர்கண்ணாடி அணிந்து.. அல்ட்ரா மாடர்ன் பெண்ணாக அவன் முன்னால் அமர்ந்திருந்தவளைப் பார்த்து கண்சிமிட்டினான் பிரபாகரன்.

''பெண்டாட்டிகிட்ட யாராவது கண்ணடிப்பாங்களா ஹிட்லர் சார்?'' மாலினியின் குரலில் கேலி இருந்தது.

''உன்னைப் பார்த்தா சைட் அடிக்கத் தோணுதுடி..'' பிரபாகரனின் குரலில் இறக்கம் இருந்தது.

''இருக்காதா பின்னே.. நம் ஊரில்.. நம் வீட்டில் இருந்திருந்தால்... அடக்க ஒடுக்கமாக சேலை கட்டி.. முடியை இறுக்கிப் பின்னல் போட்டு தலைநிறைய பூவும் நெற்றியிலே குங்குமமுமாக தாலியை எடுத்துக் கண்ணில் ஒற்றிக்கொண்டு.. உங்க காலைத் தொட்டு கும்பிட்டிருப் பேன். உங்களுக்கும் பெண்டாட்டின்னு தோணியிருக்கும்..''

''இத்தனையும் சொன்னவ.. நீ வழக்கமாகப் போட்டுத் தாக்கும் சிச்சுவேஷன் சாங்கை மட்டும் ஏன் விட்டு வச்சி ருக்க. அதிலயும் ஒண்ணை எடுத்துவிட வேண்டியது தானே..''

பிரபாகரன் கிண்டலடித்ததும்.. மாலினி ஒற்றை விரலால் நெற்றிப் பொட்டைத் தட்டி யோசித்துவிட்டு பாடிக் காட்டினாள்.

*"ஒரு ஆலயமாகும் மங்கை மனது..*
*அதை அன்றாடம் கொண்டாடும்*
*காலைப்பொழுது.. நல் காலைப்பொழுது.."*

"எங்கேயிருந்துடி இவ்வளவு பாட்டையும் பிடிப்ப?"

"பாட்டுக்கா நம்ம ஊரில் பஞ்சம்? சிச்சுவேஷன் சாங் பொருத்தமா இருந்துச்சா.. இல்லையா. அதை மட்டும் சொல்லுங்க.."

"நீ பாடி அது பொருத்தமில்லாம போகுமா.. சேலை கட்டியிருந்தாலும் கலக்குற.. இப்படி கூலிங்கிளாஸ் மாட்டிக்கிட்டு செம கட்டையாக இருந்தாலும் கலக்கற. அது எப்படிடீ.." பிரபாகரன் கோந்தில்லாமல் அவளோடு ஒட்டிக்கொண்டான்.

130

*காத்திருக்கும் நிலையினிலும்...*
*பூத்திருக்கும் என் மனதை...*
*என்னவென்று நான் சொல்ல?*

தேனிலவு முடிந்து பிரபாகரனும் மாலினியும் வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்து ஒரு வார காலம்தான் ஆகியிருந்தது.

அன்று அதிகாலையிலேயே எழுந்து அவசர வேலையிருப்பதாகச் சொல்லிக் கிளம்பிப் போய்விட்டான் பிரபாகரன்.



வெனிஸ் நகரில் கழித்த இன்ப நாள்களின் நினைவுகளுடன் மெல்லிய குரலில் ஏதோ ஒரு பாடலை வாய்க்குள் 'ஹம்' செய்தவாறு கீழே செல்வதற்காக மாடி ஹாலுக்குள் வந்தாள் மாலினி.

"அண்ணி ஒரு நிமிஷம்.." தினகரன் இறுக்கமான முகத்துடன் அவளுக்கு எதிரே வந்து நின்றான்.

"உங்ககிட்ட பேசணும்.."

"பேசுங்க.."

"பவித்ரா விஷம் குடிச்சிட்டா.. அது உங்களுக்குத் தெரியுமா?"

"என்னது?"

மாலினியின் முகம் அதிர்ச்சியை பிரதிபலித்தது.

"அவர் என்கிட்ட இதைப் பத்தி எதுவுமே சொல்லலையே.."

"அண்ணனுக்கோ அம்மாவுக்கோ ஏன்.. வேறு யாருக்குமே இந்த விஷயம் தெரியாது.. எனக்கும் வாசவன் மாமா குடும்பத்தாக்கும் மட்டுமே இது தெரியும்.."

"என்ன ஆச்சு தினகரன்?"

மாலினியின் குரல் நடுங்கியது. இதற்கு ஏதோ ஒரு வகையில் தான்தான் காரணம் என்று அவளுடைய உள்ளுணர்வு சொல்லியது.

தினகரன் அடுத்துக் கூறியவை அனைத்தும் அது உண்மையென்று உறுதிப்படுத்தின.

"என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள மறுத்தாள் அண்ணி. நான் விடாம ஃபோர்ஸ் பண்ணினேன்.. அம்மா கல்யாணப் பேச்சை ஆரம்பிச்சுட்டாங்க. அவங்க வீட்டில் பெண் கொடுக்க சம்மதம் சொல்லிட்டாங்க. வரும் முகூர்த்தத்தில் கல்யாணம் வைக்கலாம்னு பேசி வச்சிருந்தோம்..

நீங்களும் பெரியண்ணனும் தேனிலவு முடிந்து வர காத்திருந்தோம்..''

''அப்புறம்?''

''கல்யாணம் நடப்பது உறுதின்னு ஆனவுடன் அவ விஷத்தை குடிச்சிட்டா..''

''அதுதான் ஏன்? அவ எந்த அளவுக்கு உங்களைக் காதலிச்சான்னு எனக்குத்தான் தெரியும் தினகரன். உயிருக் குயிராய் காதலிச்சா..''

''அதனால்தான் என்னை வேண்டாம்னு சொல்கிறா..''

''புரியலையே..''

''தனக்குத்தானே தண்டனை கொடுத்துக்கிறாளாம்..''

இப்போது மாலினிக்கு அனைத்தும் தெளிவாக புரிந்து விட்டது. அவள் உதட்டைக் கடித்துக் கொண்டு முகத்தைத் திருப்பி விட்டத்தை வெறித்தாள்.

தினகரன் அவள் மேல் அசையாத பார்வையைச் செலுத்தியபடி உடைந்த குரலில் பேசினான்.

''இதுதான் அவளுக்கான தண்டனையாம். இந்தக் காதலுக்காகத்தானே என் சிநேகிதிக்கு துரோகம் செய் தேன்னு அழுகிறாள் அண்ணி. அப்படிப்பட்ட காதல் வேண்டாம்னு என்னை ஒதுக்குறா அண்ணி..''

மாலினியின் விழிகளில் நீர் தளும்பிவிட்டது. அவள் அறிவாள்.. பவித்ராவின் காதல் எப்படிப்பட்டது என்று.

அப்படிப்பட்ட காதல் நிறைவேறி அவள் ஆசைப் பட்டவன் அவளுக்கு கிடைக்கிறபோது அவள் அதை மறுக்கிறாளா?

''இப்போது அவளைக் காப்பாற்றிவிட்டோம் அண்ணி.. அவள் குடும்பத்துக்கு நடந்தது எதுவும் தெரி யாது. அவளிடம் கேள்வி கேட்டால் திரும்பவும் விஷத்தை



கையில் எடுத்துவிடுவாள்னு பயந்து கொண்டு யாரும் அவளிடம் வாய் திறக்கவில்லை. இனியும் இதுபோல அவள் தற்கொலை முயற்சியை செய்ய மாட்டாள்னு என்ன உத்தரவாதம் இருக்கு அண்ணி?'' மாலினி பதில் பேச வில்லை.

''உங்க கல்யாணத்துக்கு அவள் வந்திருந்தபோது.. முகம் கொடுத்து நீங்க பேசலையாம். இனி வாழ்நாளில் மாலினி என்னுடன் பேசமாட்டாள்னு சொல்லிச் சொல்லி அழுகிறாள் அண்ணி.. என் முகத்தைக்கூடப் பார்க்க மாட்டேன்கிறா..''

மாலினி யோசனையாக நின்றாள்.

''எனக்கு காதல்னா என்னன்னு தெரியாது. எனக்கு அதை அவள் தெரிய வைத்தாள். அவ மேல என் உயிரை வைத்திருக்கிறேன் அண்ணி. அவளுக்கு ஏதாவது ஆகி விட்டால் என்னையும் நீங்க உயிரோடு பார்க்க முடியாது..''

''என்ன பேச்சு இது தினகரன்?'' மாலினி அதட் டினாள்.

''இவ்வளவு நேரமும் சாகத் துணிந்தவளைப் பற்றி சாவைத் தொட்டு திரும்பி வந்திருக்கிறவளைப் பற்றி கதை கதையாய் பேசினேன்.. அது எதுவும் உங்க காதில் ஏறவில்லை. நான் போய்விடுவேன்னு வெறும் வாய் வார்த்தைக்கு சொன்னதற்கு இவ்வளவு பதறிப் போகி நீங்களே.. இவ்வளவுதானா நீங்க? உங்களிடமிருந்து இப்படி ஒரு சுயநலத்தை நான் எதிர்பார்க்கவில்லை அண்ணி..'' தினகரன் காட்டமாக பேசினான்.

''இது என்ன தினகரன்.. என் கோபத்தைக் காட்டக் கூட எனக்கு உரிமையில்லையா?''

''யாரிடம் கோபத்தை காட்டுவது அண்ணி. செய்த தவறுக்கு வருந்தி அதற்கு பரிகாரம் தேடி உயிரை விடத் துணிபவள் கிட்டயா உங்க கோபத்தைக் காட்டுவிங்க.

புறக்கணிப்பு என்பது மிகக் கொடுமையான தண்டனை அண்ணி. அதற்கு சாவே மேல் என்றுதானே பவித்ரா சாவைத் தேடி விஷத்தை குடித்திருக்கிறாள்?''

''என்னைக் குற்றவாளியாக்குகிறீங்க தினகரன்..''

''இல்லை அண்ணி.. அவளை குற்ற உணர்விலிருந்து மீட்டுக் கொடுக்கன்னுதான் உங்ககிட்ட கெஞ்சுகிறேன். எனக்கு ஏதாவது ஒன்றுன்னா அண்ணன் தாங்க மாட்டார். அண்ணனின் துயரத்தை நீங்க தாங்க மாட்டிங்க. எனக்காக வேண்டாம்.. பவித்ராவுக்காக வேண்டாம்.. அண்ணனுக் காகவாவது இதைச் செய்யுங்க அண்ணி. வந்து பவித்ரா வைப் பாருங்க. அவகிட்டப் பேசுங்க..''

தினகரன் கெஞ்சிக் கொண்டிருந்தபோது.

''அவ வருவாடா..'' என்ற குரல் கேட்டது.

அவர்கள் இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். மாடி ஹாலின் வாசலில் இருந்து பிரபாகரன் உள்ளே வந்தான். மாலினியைப் பார்த்தான். அவனது பார்வையில் கட்டளை இருந்தது.

''நீ கவலைப்படாமல் போ தினா. மாலினி கட்டாயம் பவித்ராவைப் பார்க்க வருவா. நான் கூப்பிட்டுக் கொண்டு வருகிறேன்..''

''தேங்க்ஸ் அண்ணா..''

தினகரன் நன்றிகலந்த குரலில் சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

பிரபாகரன், மாலினியின் அருகே வந்து அவள் முகத்தை நிமிர்த்தினான்.

அவளது பார்வையோடு அவன் பார்வை கலந்தது. அவன் மெல்லக் கூறினான்..

''நீ கருணையுள்ளவ மாலினி.. உன் சிநேகிதியை சாக விட மாட்டாய்..''



## 131

*எளிதாக நீ பிரிவைச் சொல்லிவிட்டாய்..*
*என்னுயிர் அதைக் கேட்டதும் துடிப்பதையே..*
*என்னவென்று நான் சொல்ல..?*

கட்டிலை ஒட்டி இருந்த ஜன்னலின் வழியாக நீல வானம் தெரிந்தது.. கூட்டுக்கு திரும்பும் பறவைகளின் சத்தம் பவித்ராவின் காதுகளில் விழுந்தது. அவளது அறையை ஒட்டியிருந்த மரத்தில் அடைந்த அந்தப் பறவை களை ஏக்கத்துடன் பார்த்தாள் பவித்ரா.

'இப்படியொரு பறவையாக பிறக்காமல் போனேனே..'

விட்டுச் சிறகடிக்க முடியாமல் தன்னை மீட்டுவிட் டார்களே என்ற துயரம் அவள் நெஞ்சில் கவிந்தது.. இனித் தினம் தினம் கொல்லும் அந்த ஓர் இரவின் துரோக நினைவு களுடன் அவள் வாழ வேண்டும்.

''என்ன கொடுமை இது..' அவள் கண்மூடிக் கொண டாள்.

அறைவாசலில் நிழலாடியது. திரும்பிப் பார்த்தவள்.. விழிவிரிய..

''மாலினி?'' என்றாள்.

''நானேதான்..'' மாலினி அறைக்குள் வந்தாள்.

பவித்ரா பரபரப்பாக எழுந்து கொள்ள முயல.. அதைத் தடுத்துவிட்டு அவளருகே கட்டிலில் அமர்ந்தாள் மாலினி.

''ஏண்டி இப்படிச் செஞ்சே?''

பவித்ராவின் விழி பார்த்துக் கேட்டாள். பவித்ரா பொலபொலவென்று கண்ணீர் உகுத்தாள்.

''நான் துரோகிடி. என் காதலுக்காக.. உன் காதலை அழிக்கப் பார்த்த வஞ்சகி. என் மேல் இரக்கம் காட்டாதே மாலினி..''

''நீ செய்தது தப்புத்தான். நான் இல்லைன்னு சொல்ல மாட்டேன். ஆனா.. அது மூலம் நான் என் காதலை அவளுக்கு நிரூபித்துவிட்டுப் பிரிந்து போனேன். அவர் விடாமல் என் பின்னால் வந்து அவரைத் தேடி வர வைத்து.. அவரின் காதலை நிரூபித்தார். உண்மையான காதலை எந்த துரோகமும் உடைத்துவிட முடியாது பவித்ரா..''

''ஒருவேளை நீங்கள் பிரிந்திருந்தால்?''

''பிரிய மாட்டோம்..''

''ஒருவேளை நீங்கள் சேராமலே போயிருந்தால்?''

''நாங்கள் சேர்ந்துவிட்டோம்.. அது உனக்குத் தெரியாது..''

''எல்லாம் நல்லபடியாக முடிந்ததால் நீ என்னைத் தேடி வந்திருக்கிறாய். இதுவே எதிர்மறையாய் முடிந்திருந்தால்?''

''முதலில் நீ எதிர்மறையாய நினைப்பதை நிறுத்து பவித்ரா.. நாங்க கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் பிரிந்திருந்தால் என்ன ஆகியிருக்கும்? அவரை விட்டுவிட்டு நான் வேறொருத்தனை கல்யாணம் பண்ணியிருப்பேனா? இல்லை.. என்னை மறந்துவிட்டு அவர்தான் வேறொருத்தியை மனதால் நினைத்திருப்பாரா? எங்களைப் பற்றி உனக்கு என்ன தெரியும்டி?''

''மாலினி..''

''உண்மையான காதலுக்கு பிரிவே கிடையாது பவித்ரா.. கண்ணதாசன் பாட்டு ஒன்றைக் கேட்டிருக்கிறாயோ?''

''நீதான் பாடிக் காட்டேன்.. உன் குரலைக் கேட்டு எவ்வளவு நாளாச்சு?''



*''வெகுதூரம் நீ சென்று நின்றாலும் - உன்*
*விழி மட்டும் துணையாக வந்தாலும்..*
*வருகின்ற விழியொன்று தருகின்ற பரிசொன்று*
*உருவாகும் சுகமென்று ஒன்று...''*

பவித்ரா குழந்தை போலக் கேட்டுக் கொண்டிருந்தாள். தனது சிநேகிதியின் கையைப் பிடித்துக் கொண்டே பாடிக் காட்டினாள் மாலினி.

''கேட்டாயா? பிரிவு உடலுக்குத்தான். மனத்துக்கு இல்லை. ஒருவரையொருவர் பார்க்காமலேயே வாழ்ந்து முடிக்கும் சக்தியை காதல் கொடுக்கும். காதல் என்றுமே தோற்காது பவித்ரா..''

''நான் செய்ததும் தப்புத்தானே?''

''தப்புத்தான்.. அதற்குத்தான் ஏகப்பட்ட மனவேதனையைப் பட்டுவிட்டாயே.. இனியும் எதற்கு மருகுகிறாய்?''

''உன் சிநேகிதியை நீ மன்னித்துவிட்டாயா?''

மாலினி பதில் சொல்லாமல் சிரித்தாள். பிரபாகரன் அந்தச் சிரிப்பின் பொருளை அறிவான். பவித்ரா பாவம் அறிய மாட்டாள்.

மன்னிக்கக் கூடிய தவறை பவித்ரா செய்யவில்லை. அவளை மன்னிக்கவும் அவள் செய்த தவறை மறக்கவும் மாலினியால் முடியாது.

அதே சமயத்தில்.. பவித்ராவை குற்றஉணர்வில் அமுழ்ந்தவிட்டு சாகடிக்கவும் மாலினியால் முடியாது.

அவள் பவித்ராவை உண்மையாக சிநேகித்தவள். அவளுடைய சிநேகிதி அழிந்துபோக அவள் அனுமதிக்க மாட்டாள்.

''எழுந்திரு பவித்ரா..''

''எங்கே மாலினி?''

''முகம் கழுவி.. டிரஸ் பண்ணிக்க.. நாம் சினிமாவுக்கு போகலாம்..''

''நாம்ன்னா?''

''நீ.. நான்.. பிரபா.. தினகரன்..''

பவித்ராவின் முகம் ஒளிர்ந்தது. அவளுடைய சிநேகிதி அவளுக்கு திரும்பவும் கிடைத்துவிட்ட மகிழ்வில் அவள் எழுந்து கொண்டாள்.

ஹாலில் அமர்ந்து காபி சாப்பிட்டபடி வாசவன் பேசுவதை கேட்டுக் கொண்டிருந்தான் பிரபாகரன்.

''அவ மனசில் என்ன இருக்குன்னு தெரியலையே பிரபா. தினகரனைப் பிடிக்கலையான்னு கேட்டா.. அவரைத் தவிர வேறு யாரையும் எனக்குப் பிடிக்காதுப் பான்னு சொல்கிறா.. அப்ப கல்யாண ஏற்பாட்டை பண்ண வான்னு கேட்டால் விஷத்தைக் குடிக்கிறா..''

''எல்லாம் சரியாகிவிடும் மாமா..''

''எப்படிப்பா?''

எதிரில் அமர்ந்திருந்த தினகரனின் கண்களில் மின்னலைக் கண்ட பிரபாகரன், தனக்குள் புன்னகைத்துக் கொண்டான்.

'இப்படித்தான்..' என்று மனதிற்குள் சொல்லியபடி திரும்பிப் பார்த்தான்.

மாலினியுடன் கலகலப்பாக பேசியபடி படி இறங்கி வந்து கொண்டிருந்த பவித்ரா.. தினகரனை பார்வையால் சாப்பிட்டுக் கொண்டிருந்தாள்.

பளிச்சென்ற முகத்துடன்.. அழகாக சிரித்தாள். பிரபாகரனிடம் நலம் விசாரித்தாள். 'ஆ'வென்று வாய் பிளந்து பார்த்துக் கொண்டிருந்த வாசவனிடம்..

''நாங்க சினிமாவுக்குப் போய் வருகிறோம்ப்பா..'' என்றாள்.

''எப்படி மாப்பிள்ளை?'' அவர் நம்ப முடியாமல் பிரபாகரனைக் கேட்க...

''இன்னும் அந்த எப்படியிலேயே இருந்தா எப்படி மாமா? காலா காலத்தில் இவங்களுக்கு கல்யாணம் பண்ணி வைக்கப் பாருங்க..'' என்றான் மாப்பிள்ளை.



''அதுக்குத்தானே.. இத்தனை நாளாய் ஏங்கிக் கிடந்தேன்..'' வாசவன் அப்போதே நர்மதாவிற்கு போன் போட்டார்.

அந்த மாத இறுதியில் நடந்த தினகரனின் திருமணத்தில் மணப்பெண்ணின் தோழியாக அருகிலேயே இருந்தாள் மாலினி.

பெண்ணைத் தாரைவார்த்து வாசவன் கொடுத்த போது.. தினகரனின் பெற்றோர்கள் ஸ்தானத்தில் அவளும் பிரபாகரனும் அதைப் பெற்றுக் கொண்டார்கள்.

பவித்ராவை குற்றஉணர்விலிருந்து மீட்டு.. அவளுடைய காதலனுடன் சேர்த்து வைத்துவிட்டாள் மாலினி.

## 132

*எங்கிருந்தோ நீ வந்து..*
*என் மனதை திருடிச் சென்றதை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

**விளையாட்டு** மைதானத்தைவிடப் பெரியதாக.. பரந்து விரிந்திருந்த மொட்டை மாடியில் மூச்சிரைக்க ஓடிக் கொண்டிருந்தாள் மாலினி. அவள் கையில் சாப்பாட்டுக் கிண்ணம் இருந்தது.

''டேய் குட்டி.. நில்லுடா செல்லம்.. அம்மா பாவமில்லையா?'' என்று கெஞ்சிக் கொண்டிருந்தாள்.

''இந்த அம்மாவா பாவம்? இவளுக்கு கோபம் வந்தால் கலங்கடிச்சிருவாளே. நீ இவளுக்கு பாவம் பார்க்காதேடா..'' பிரபாகரன் அவள் பின்னால் வந்து கட்டிக் கொண்டான்.

''விடுங்க என்னை.. என் பிள்ளையிடம் என்னைப் பற்றிப் போட்டுக் கொடுக்கறீங்களா?'' போலிக் கோபத்துடன் திமிறிய மாலினி..

''சுதாகரா.. என் கண்ணில்ல.. ஓடாதேடா.. நில்லு.. அம்மாவுக்கு கால் வலிக்குதுடா..'' என்று மகனிடம் திரும்பவும் கெஞ்ச ஆரம்பித்தாள்..

இரண்டரை வயசு சுதாகரன் அவள் கையில் அகப்படாமல் அங்கும் இங்குமாக ஓடிக்கொண்டிருக்க.. கால் வலியுடன் களைத்து நின்றுவிட்ட மனைவியைக் கண்டு பிரபாகரன் சிரித்துவிட்டான்.

''இதைப் பாருடா.. என்னை விட்டு விட்டு சென்னைக்கு ஓடின அவனோட அம்மாவை.. தன் பின்னாலே என் மகன் ஓடி வர வச்சிட்டானே.. டேய் சுதா.. இந்த சிங்கத்திற்கு பிறந்த சிங்கக்குட்டின்னு நிரூபிச்சுட்டடா கண்ணா..'' பிரபாகரன் இரண்டே எட்டில் மகனைப் பிடித்துத் தூக்கிக் கொண்டான்.

''எல்லாம் அப்படியே அவனுடைய அப்பாவின் அழிச்சாட்டியம்தான். வீட்டில் எத்தனை இடமிருக்கு. ஆனாலும் இந்த சின்னய்யாவுக்கு தோட்டத்திலயும் மொட்டை மாடியிலயும் சாப்பாட்டை ஊட்டினால்தான் சாப்பாடு தொண்டையில் இறங்குது..'' மாலினியின் இதழ்களில் ரகசியப் புன்னகை மலர்ந்தது.

அதைக் கண்டுகொண்ட பிரபாகரன் கண்கள் மின்னின.

''அவனுக்குத் தானாத் தெரியுதுடா... இதெல்லாம் அவனோட அப்பனை அவனோட அம்மா வளைச்சுப் போட்டதன் நினைவுச் சின்னங்களனு..'' பிரபாகரன் மனைவியைப் பார்த்து கண்சிமிட்டினான்.

மாலினி கணவனை காதலுடன் முறைத்தாள்.. அந்த



முறைப்பில் தெரிந்த அழைப்பைக் கண்டு பிரபாகரன் கிறங்கினான்.

''மாற்றிச் சொல்லக்கூடாது ஹிட்லர் சார்.. இந்த இடங்களில்தான் ஹிட்லர் சார் என்னை வளைத்துப் போட்டார்..'' மாலினி கித்தாய்ப்பாக புருவங்களை உயர்த்தினாள்.

அவள் விழிகளில் தெரிந்த அழைப்பிலும் இதழ்களில் விரிந்த ரகசியப் புன்னகையிலும் மயங்கிப் போயிருந்தவன்..

''எப்படிடீ வளைத்துப் போட்டேன்.. இப்படியா?'' என்றபடி மகனோடு நின்றுகொண்டிருந்த மனைவியை இறுக்கிக் கொண்டு அவளது கன்னத்தில் முத்தமிட்டான் பிரபாகரன்.

''அப்பா.. நானு..'' சுதாகரன் அவனது கன்னத்தைக் காட்ட..

''உனக்கில்லாமலா.. இந்தா.. உனக்கொண்ணு..'' என்று மகனின் கன்னத்தில் இதழ் பதித்தான்.

அந்த நேரம் பார்த்து மொட்டை மாடியின் கைப்பிடிச் சுவரில் ஒரு மைனா வந்து அமர.. சுதாகரன் அதைச் சுட்டிக் காட்டினான்.

''அப்பா.. குருவி..''

''அது குருவி இல்லைடா மைனா..''

''எனக்கு அந்த மைனா வேணும்..''

சுதாகரன் இறங்கி ஓடிவிட.. நாணிச் சிவந்த முகத்துடன் நின்றிருந்த மனைவியை நெருங்கினான் பிரபாகரன்.

''எனக்கு அந்த மைனா வேண்டாம்.. இந்த மைனா தான் வேண்டும்..''

''அத்தான் வேண்டாம்..''

''நான் வேண்டும்னு சொல்கிறேன்.. நீ வேண்டாம்னு சொல்கிறயா?''

''சுதா இருக்கிறான்..''

''அவன் மைனாவை பிடிக்க ஓடிட்டான்..''

''யாராவது வந்திருவாங்க..''

''வந்தால்.. புருஷனும் பெண்டாட்டியும் கொஞ்சிக் குலாவிக்கிட்டு இருக்காங்கன்னு திரும்பிப் போயிடு வாங்க..''

''அப்படிக்கூட செய்வாங்களா என்ன?''

''நீதான் பாட்டிலும்.. கவிதையிலும் பின்னிப் பெட லெடுக்கிறவளாச்சே.. எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி இருந்ததும் இந்நாடேன்னு முண்டாசுக் கவிஞர் பாடி வைத்ததை படிச்சதில்லையா?''

எதற்கு எதை இணை கூட்டுகிறான் என்ற நினைவில் மாலினிக்கு சிரிப்பு வந்தது. அன்று போல் இன்றும் மனம் படபடக்க பின்னால் நகர்ந்தவள்.. சுவரில் மோதி நின்றாள். அவளது தோள் வளைவில் இரு கைகளையும் ஊன்றி சிறை பிடித்தவன்.. கிறங்கிய குரலில்..

''ஒரு குழந்தைக்கு அம்மாவைப் போலவே இல லைடி.. அன்னிக்கு உன்னை முதன்முதலில் பார்த்ததைப் போலவே இன்னிக்கும் இருக்கே..'' என்று கூறியவாறு தன்னுடன் இறுக்கிக் கொண்டான்.

விடுபட விரும்பாமல் அவனது கைகளுக்குள் விருப்பத்துடன் சிக்கிக் கொண்ட மாலினியின் உடலிலும் மனதிலும் பொங்கிய உணர்வுகளை என்னவென்று நான் சொல்ல?

(முற்றும்)

